# சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள் - ஓர் ஆய்வு



முனைவர் பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

**இரா. அனுராதா,** எம்.ஏ., எம்.ஃபில்.
ஆய்வாளர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

மேற்பார்வையாளர்
முனைவர் **வ. ஜெயதேவன்**
பேராசிரியர் - தலைவர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005




தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

மே 2004

**முனைவர் வ. ஜெயதேவன்**
(மேற்பார்வையாளர்)
பேராசிரியர் - தலைவர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**'சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள் - ஓர் ஆய்வு'** என்னும் ஆய்வுப் பொருளில் முனைவர் பட்டப்பேற்றிற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்ட இவ் ஆய்வேடு என் ஆய்வு மேற்பார்வையில் திருமதி இரா. அனுராதா அவர்கள் டிசம்பர் 1998 முதல் மே 2004 வரை ஆய்வு நிகழ்த்தி உருவாக்கியதாகும். இவ் ஆய்வேடு அவருடைய சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ் ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை எனச் சான்றிதழ் வழங்குகின்றேன்.

சென்னை - 600 005
நாள் : 4/5/04

( வ. ஜெயதேவன் )
மேற்பார்வையாளர்

**இரா.அனுராதா, எம்.ஏ., எம்.ஃபில்.,**
ஆய்வாளர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

# ஆய்வாளர் உறுதிமொழி

" **சங்க இலக்கியங்களில் அறக் கருத்துகள் - ஓர் ஆய்வு** " என்னும் இந்த ஆய்வேடு முறையான என் முயற்சியில் எழுதப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டம் தவிர பிற ஆய்வுப் பட்டத்திற்கு இதனை அளிக்கவில்லை என உறுதி கூறுகின்றேன்.

சென்னை: 600 005
நாள் : 14/5/2004

R. Anuradha
**( இரா. அனுராதா)**

## நன்றியுரை

**"சங்க இலக்கியங்களில் அறக் கருத்துகள் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு நன்றி.

தமிழ் மொழித்துறையில் முனைவர் பட்டம் சேர்ந்து பயில்வதற்கு இசைவளித்து, இவ்வாய்வு முழுமை பெறுவதற்குப் பலவகையிலும் உதவி புரிந்த மேற்பார்வையாளர் தமிழ் மொழித்துறைத் தலைவர் முனைவர் **வ. ஜெயதேவன்** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

என் ஆய்வு சிறக்க, ஊக்கம் அளித்த தமிழ் மொழித்துறைப் பேராசிரியர்கள், முனைவர் **ந. தெய்வ சுந்தரம்**, முனைவர் **மு. பொன்னுசாமி**, தமிழ் இலக்கியத்துறைப் பேராசிரியர் முனைவர் **வீ. அரசு** ஆகியோருக்கும் என் நன்றி என்றும் உரியது.

ஆய்வு செய்ய அனுமதி அளித்த **எம்.ஓ.பி. வைணவ மகளிர்க் கல்லூரி நிர்வாகத்திற்கும்**, என் ஆய்வு சிறக்க ஊக்கமும் உற்சாகமும் அளித்த கல்லூரிச் செயலர் திரு. **பி. ஹரிதாஸ்** அவர்களுக்கும், கல்லூரி முதல்வர் முனைவர் **நிர்மலா பிரசாத்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் ஆய்வுத் தொடர்பான அலுவலக உதவிகளை நல்கிய திரு. **சந்திரபாபு**, திரு. **துளசிபாலன்** ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்து உதவிய பல்கலைக்கழக நூலகத்தார், பல்கலைக்கழக இணைவக நூலகத்தார், கன்னிமாரா நூலகத்தார், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தார், தேவநேயப் பாவணர் மாவட்டக் கிளை நூலகத்தார், மறைமலையடிகள் நூலகத்தார், பிரிட்டிஷ் கவுன்சில் நூலகத்தார், உ.வே.சாமிநாதையர் நூலகத்தார் ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ் ஆய்வேட்டை வடிவமைத்துதவிய எஸ்.எஸ்.எம். எண்டர்பிரைசஸ் நிறுவனத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் ஆய்வு மலரத் துணைநின்ற அனைத்து நல்லிதயங்களுக்கும், என்றென்றும் நன்றி மிக உடையேன்.

இரா. அனுராதா

## சுருக்க விளக்கப் பட்டியல்

| | | |
|---|---|---|
| அகம். | .......... | அகநானூறு |
| இளம் | ........... | இளம்பூரணர் |
| உரை. | .......... | உரையாசிரியர் |
| ஐங். | .......... | ஐங்குறுநூறு |
| கலி. | .......... | கலித்தொகை |
| கழகம் | ........... | திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட். |
| குறள். | .......... | திருக்குறள் |
| குறிஞ்சி. | ........... | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | ........... | குறுந்தொகை |
| சிலம்பு. | ............ | சிலப்பதிகாரம் |
| சிறு. | ............. | சிறுபாணாற்றுப்படை |
| செய் | ......... | செய்யுளியல் |
| செ.ப.க | ......... | சென்னைப் பல்கலைக்கழகம் |
| தொல். | ............. | தொல்காப்பியம் |
| நற். | ............. | நற்றிணை |
| நூ. | ............ | நூற்பா |
| நெடு. | ............. | நெடுநல்வாடை |
| பட்டின. | ............ | பட்டினப்பாலை |
| பதி. | ............ | பதிப்பாசிரியர் |
| பதிற். | ............ | பதிற்றுப்பத்து |
| பரி. | ............ | பரிபாடல் |
| பழமொழி. | ........ | பழமொழி நானூறு |

| | | |
|---|---|---|
| புறம். | ............ | புறநானூறு |
| பெரும். | ............ | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | ......... | பொருநராற்றுப்படை |
| மணி. | ............. | மணிமேகலை |
| மதுரை. | .......... | மதுரைக்காஞ்சி |
| மலை. | ............ | மலைபடுகடாம் |
| மரபு. | ............ | மரபியல் |
| முருகு. | ............. | திருமுருகாற்றுப்படை |
| முல்லை. | ........... | முல்லைப்பாட்டு |
| மேற்படி. | ........ | மேலே கண்டபடி |

# சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள் - ஓர் ஆய்வு

## பொருளடக்கம்

## நுழைவாயில்

சங்கத் தமிழ் இலக்கியங்கள் காலத்தாலும் பொருளமைப்பாலும் மிகப்பழமையானவை. சங்க கால மொழியமைப்பும் பண்பாடும் மிகச் சிறந்தவை என்பதற்குச் சங்க இலக்கியமே மிகச் சிறந்த சான்றாகும்.

*" கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு*
*முன்தோன்றிய மூத்தகுடி "*

எனச் சிறப்பிக்கப்பட்டது தமிழ்க்குடி. இயல்பான மக்கள் வாழ்வியலை அகப்புறம் என்னும் இரு கோட்பாடுகளில் வெளிப்படுத்திய சங்க இலக்கியங்கள், இப்படித்தான் வாழவேண்டும் என்னும் நோக்கில் வாழ்வியலை அறிமுகம் செய்கின்றன. எவ்வகையிலும் பிறரைத் துன்புறுத்தாதிருத்தல், இயன்ற அளவு உதவுதல் முதலியன சங்ககாலப் பொது அறங்கள் என்னும் சிறப்பினைப் பெறுகின்றன. வாழ்வியலில் அறங்கள் எவ்வகையில் எல்லாம் ஊடுபொருளாக நிற்கின்றவோ அவ்வழிகளை இவ்விலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. அறம் என்பதற்கு பல்வேறு கொள்கைகளும், கோட்பாடுகளும் வரையறை செய்யப்பட்டிருந்தாலும் அறம் என்பது மாட்சிமைப்பட்ட சிறந்த வாழ்வென்பது பெறப்படும். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இலக்கியத் தொகைகளில் கூறப்பட்டுள்ள அறங்கள் மனித சமுதாயப் பண்பாட்டு வளர்ச்சியின் முக்கியக் கூறு என்பது தெற்றென விளங்கும். தான் செய்யும் செயல், செயல்களின் விளைவு, விளைவின் பயன் முதலானவை இலக்கியங்கள் வாயிலாகவே கற்பிக்கப்படுகின்றன. அஃறிணை உயிர்களின் மூலமாக அன்பு வாழ்க்கை, வறுமையிலும் செம்மை, உயிர்களைப் போற்றல், உயர்ந்தோரை மதித்தல் என்னும் உயரிய பண்புகளின் உறைவிடமாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. அகக் கருத்துகளின் வழி நின்று பொதுநலச் சிந்தனைகளையும் வழங்குவதில் சிறந்த

பாடுபொருளைக் கொண்டு விளங்குகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை முதலிய ஐந்திணைகளின் வழி முதல், கரு, உரிப் பொருள்களின் வழிக் கூறப்படும் அறம் புறத்திணையில் ஏழு திணைகளின் வாயிலாக வெளிப்படுத்துகிறது.

சொல்ல வந்த பொருளைச் சிறப்பாகவும், நல்வழிப்படுத்தும் வகையிலும் சொல்வதே சிறந்த இலக்கியம். பல்வேறு பாடல்களின் தொகுப்பாக அமைந்திருந்த போதும், படைக்கப்பட்ட காலமும் கருத்தமைவுகளும் குறிப்பிட்டப் பொருளை வலியுறுத்திக் கூறுவதில் சிறப்பிடம் பெறுகின்றன. பொருள்வளத்திலும், பண்பாட்டிலும், பிறருக்கு வழங்கி அருளும் குணமும் நிரம்பப் பெற்ற பேரரசர்கள், மன்னர்கள், சிற்றரசர்கள், குறுநில மன்னர்கள் முதலியோரின் அறச்சிந்தனைகள் முதல் கொடை வழங்கும் மனப்பான்மை வரை இலக்கியத்துள் ஊடுருவி நிற்கின்றன. சங்க இலக்கியங்களில் அறம் என்னும் இவ்வாய்வு சங்க இலக்கியத்துள் கூறப்பட்டிருக்கும் அறங்களை வெளிக் கொணர்ந்து அதன் நோக்கங்களை வெளிப்படுத்தும் முறையில் அமைக்கப்பட்டுள்ளது. அறச்சிந்தனைகளை எடுத்துக் கூறும் வகையில் சமூகப் பயன்பாடு மிக்கதாகவும் இவ்வாய்வு விளங்கும்.

## ஆய்வின் நோக்கம்

இலக்கியமாயினும், ஆய்வாயினும் அதற்கு இலக்கு தேவை. செல்லக் கூடிய வழிகள் பலவாக இருப்பினும் சொல்ல வந்த கருத்தும், அதனால் சமூகம் உணரும் பயனும் மிகமுக்கியமானவை. அவ்வகையில் பயன்பாடு மிக்க வகையில் மேற்கொள்ளப்படும் இவ்வாய்வு சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள அறக் கருத்துகளைப் பயன்பாடு மிக்க வகையில் சமுதாய உணர்வோடு எடுத்துரைக்க முயற்சிக்கிறது. அறம், அதன்

பொருள், அறக்கருத்துகள் எவ்வாறெல்லாம் இலக்கியத்துள் ஊடுருவி நிற்கின்றன? எவ்வெப்பொருள்களில் எல்லாம் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன? அவ்வறங்கள் வாழ்வியல் கூறுகளில் ஏற்படுத்துகின்ற தாக்கங்கள், விளைவுகள் முதலியவற்றைப் பன்முகப் பார்வையில் நோக்கும் ஆய்வாக இது அமைகின்றது. சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள அறங்கள் மனித வாழ்வில் எவ்வகையில் பயன்பாடு மிக்கவையாகத் திகழ்கின்றன என்று ஆய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுப் பொருள்

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் சங்க இலக்கியத் தொகுப்பினுள் இடம் பெற்றிருக்கும் இலக்கியங்களை அதன் பொருளமைப்பின் துணை கொண்டு அறக்கருத்துகளை வடித்தெடுத்து ஆய்தலே ஆய்வுப் பொருள்.

சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தி நிற்கும் அறங்களை வாழ்வியல், சமுதாயம், தத்துவம் என்னும் நிலையில் பன்முகப் பார்வை உடையதாகப்

பார்த்து அது தரும் அறத்தைக் கூறலே ஆய்வுப் பொருளின் மையமாகும்.

## ஆய்வுச் சான்றுகள்

இந்த ஆய்வுக்குத் தேவையான சான்றுகள் இரண்டு வகைகளாகத் திரட்டப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மைச் சான்றுகள்

2. துணைமைச் சான்றுகள்

என்பனவாகும்.

## முதன்மைச் சான்றுகள்

இந்த ஆய்வுக்குத் தேவையான முதன்மைச் சான்றுகளாகச் " சங்க இலக்கியத் தொகுப்புகளான **எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும்** " அமைகின்றன.

## துணைமைச் சான்றுகள்

சங்க இலக்கியம் தொடர்பாக ஆராய்ந்து எழுதப்பெற்ற ஆய்வு நூல்கள், அறங்கள் பற்றிப் பல்வேறு நூல்கள் கூறும் விளக்கங்கள், அகராதிகள் ஆகியவை துணைமைச் சான்றுகளாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியங்கள் என்று சொல்லப்படும் பதினெட்டு நூல்களில் சிலவற்றைப் பற்றிய தனித்தனி ஆய்வுகள் பல நடந்து உள்ளன. 'கலித்தொகை காட்டும் ஆயர் வாழ்க்கை' என்ற ஆய்வேட்டை கோ.கன்னியப்பன் ஆராய்ந்துள்ளார். ' அகநானூற்றில் வாழ்வியல் நீதிகள்' என்ற ஆய்வேட்டை குப.அழகம்மை ஆராய்ந்துள்ளார். 'புறநானூற்றில் பாடல்நெறி' என்ற ஆய்வேட்டை க.உமாமகேசுவரி ஆராய்ந்துள்ளார். 'புறம்- மனித மேம்பாட்டுச் சிந்தனைகள்' என்ற ஆய்வேட்டை பி.வெ.சுசிலா ஆராய்ந்துள்ளார். அகம் காட்டும் மக்கள் வாழ்க்கை என்ற ஆய்வேட்டை திருமதி. ம. பார்வதியம்மாள் ஆராய்ந்துள்ளார். 'பண்டைத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள் என்னும் நூல் முனைவர் வே. முத்துலக்குமி

வெளியிட்டுள்ளார். இந்த ஆய்வு விளக்கமுறை ஆய்வாக மட்டுமன்றி ஒப்பீட்டாய்வாகவும் அமைந்துள்ளது. இந்த ஆய்வு சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள அறங்கள் மனித வாழ்வில் எவ்வகையில் பயன்பாடு மிக்கவையாகத் திகழ்கின்றன என்று ஆய்வதை நோக்கமாகக் கொண்டுத் திகழ்கிறது.

## ஆய்வின் எல்லை

சங்க இலக்கியத் தொகுப்பினுள் கூறப்பட்ட அறங்கள் தனிமனித அறங்கள், சமுதாய அறங்கள், அரசியல் அறங்கள் என்னும் நிலையில் ஆய்வுப் பகுப்பின் எல்லைகளாகக் கொண்டு ஒவ்வோர் தலைப்பிலும் இடம் பெறும் கருத்துகளை விவரித்துக் கூறுகின்றன. அவ்வகையில் சங்க இலக்கியத் தொகுப்பில் இடம் பெற்றிருக்கும் அறக்கருத்துகள் மட்டுமே ஆய்வுக்குரிய எல்லையாக அமைகின்றன.

## அணுகுமுறை

இவ்வாய்வு சங்க இலக்கியக் கருத்துகளை மையமாகக் கொண்டு விரிந்த அமைப்பில் ஆயும் நோக்கில், சங்க இலக்கிய உட்பொருளை ஆயும் நோக்கில் விளக்கமுறைத் திறனாய்வையும், கருத்துகளைத் தரம்பிரித்து எடுத்துக்கூறும் முறையில் மதிப்பீட்டு முறைத் திறனாய்வையும் இவ்வாய்வு நெறிபிடித்துச் செல்கிறது.

## ஆய்வுப் பகுப்பும் சுருக்கமும்

இவ்வாய்வு விளக்கமுறைத் திறனாய்வினைப் பெரும்பாலும் நெறிபிடித்துச் செல்வதால் விளக்கவியல் முறையிலான ஆய்வுப் பகுப்பே கைக்கொள்ளப் படுகின்றது. மேலும், முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகத் திட்டமிடப்பெற்றுள்ளது. அவை வருமாறு :

1. அறம் : வரையறை
2. தனிமனித அறம்
3. சமுதாய அறம்
4 . அரசியல் அறம்

என்னும் நான்கு இயல்களைக் கொண்டிருக்கும் இவ்வாய்வு அறம் என்னும் ஒண்பொருளைச் சிறப்பிக்கின்றது.

## முன்னுரை

ஆய்வேட்டிற்கு இன்றியமையாத முன்னுரை ஆய்வுக்குத் தோற்றுவாயாக - அமைகிறது. இதில் ஆய்வுப் பொருள் விளக்கப்பெற்றுள்ளது. அதனைத் தொடரும் நோக்கில் இதுவரை வெளியான ஆய்வுக் கட்டுரைகள் சுட்டப்பெற்று இந்த ஆய்வின் நோக்கம் புலப்படுத்தப்படுகிறது. ஆய்வாதாரங்கள், ஆய்வு எல்லை, ஆய்வு முறை ஆகியவை திட்டவட்டமாக வரையறுத்துக் கூறப்படுவதுடன் ஆய்வுத் திட்டமும் ஆய்வின் பயனும் இந்த இயலிலேயே கூறப்பெறுகின்றன.

## அறம் : வரையறை

இவ்வியலில் அறத்திற்குரிய விளக்கம், அறத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ஆகியன ஆய்வு செய்யப் பெறுகின்றன. மேலும் அறத்தின் பல்வேறு பரிமாணங்கள் கண்டறிந்து கூறப்படுகின்றன.

## தனிமனித அறம்

என்னும் இரண்டாம் இயல் தனிமனிதன் ஆற்றும் அறங்களை அதன் பல்வேறு பரிமாணங்களுடன் எடுத்துக் கூறுகிறது. தனிமனிதன்

மேற்கொள்ளும் அறங்கள் எவ்வாறு சமுதாய அறங்களாக மாற்றமடையும் தன்மையைப் பெறுகின்றன என்னும் கருத்து உணர்த்தப்படுகிறது.

## சமுதாய அறம்

என்னும் மூன்றாம் இயல் அறங்கள் தனிமனித நிலையில் இருந்து பலரால் கடைப்பிடிக்கப்பட்டுச் சமுதாய அறமாக மாற்றம் பெற்றுப் பொது அறமாக வளர்ச்சி அடையும் நிலையைச் சித்திரிக்கின்றது.

## அரசியல் அறம்

என்னும் நான்காம் இயல் அரசியலாற்றுவோர் கடைப்பிடிக்க வேண்டிய அறங்களை சமுதாயச் சிந்தனையோடு எடுத்துக் கூறுகிறது. அரசாற்றுவோரின் போக்கு, அமைச்சர்கள் நிலை, அவர்களால் அறம் தலைப்படும் நிலை முதலியவை விரித்து உரைக்கப்படுகின்றன.

## முடிவுரை

இவ்வாய்வில் கண்ட முடிவுகள் இப்பகுதியில் தொகுத்துரைக்கப்படுகின்றன. எதிர்கால ஆய்வுக்கு வழிகாட்டும் வகையில் அறம் பற்றிய ஆய்வுக் களங்கள் சுட்டிக் கூறப்படுகின்றன. குற்றவியல் நோக்கில், சமூக நோக்கில், மனித ஆழ்மன உணர்வுகளை ஆராயும் நோக்கில் செய்யும் ஆய்வுகளுக்கு அறங்கள் பற்றிய சிந்தனை தேவை என்னும் கருத்து தெளிவுபடுத்தப் படுகின்றது. பின்னிணைப்பில் துணை நூற்பட்டியல், முதன்மைச் சான்றுகள், புலவர்கள் பற்றிய குறிப்புகள் இணைக்கப்பட்டுள்ளன.

## அறம் - சொற்பொருள் விளக்கம்

வாழ்க்கையில் இருந்து முகிழ்ப்பது இலக்கியம். சிறந்த இலக்கியத்தின் நோக்கம் விழுமியது நுவலல் ஆகும். இலக்கியங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களைத் தாம் ஏற்றுக்கொண்ட கருப்பொருளுக்கு ஏற்ப விளக்கும் தன்மை உடையவை. பேரிலக்கியங்களான கம்பராமாயணம் போன்றவை நாற்பொருள்களையும் வலியுறுத்துகின்றன. சிற்றிலக்கியங்கள் நாற்பொருள்களில் ஒன்றையோ சிலவற்றையோ வலியுறுத்துவனவாக அமைகின்றன.

நாற்பொருள்களுள் முதலாவதாகச் சுட்டப்படும் அறமே எல்லாவற்றுக்கும் தொடக்கமாக அமைகிறது. அறம் என்பதற்கு நல்ல செயல்களின் தொகுதி என்பது பொருள். அறம்தான் மனித வாழ்வியலுக்கு உயர்வைக் கொடுத்து உதவுவதோடு வாழ்வில் நலத்தை நிலைநாட்டுகிறது. இலக்கியமாயினும் தனிப்பட்ட ஒருவரின் வாழ்க்கையாயினும் அனைத்தும் அறம் சார்ந்தே இயங்க வேண்டும் என்பதே விழுமிய குறிக்கோள். இளங்கோவடிகள் தனது காப்பியமான சிலப்பதிகாரத்தில் 'அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்' என்னும் உண்மையை வலியுறுத்துகின்றார். அறம் நல்ல செயலே என்னும் அறநெறியில் வாழ்ந்து தவறு செய்தால் அறமே தண்டிக்கும் இயல்பினதாகும்.

பழந்தமிழ் இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் அறச்சிந்தனைகள் மிகுந்திருக்கின்றன. அகவாழ்வு ஆயினும் புறவாழ்வாயினும் நேரிய வழியினதாக இருக்கவேண்டும். முன்னோர் போற்றி வந்த வாழ்வியல் நெறிகள் அறங்கள் முதலியவற்றின் தொகுதியாகவே சங்க இலக்கியங்கள் காட்சி அளிக்கின்றன. இலக்கியங்கள்

மனித வாழ்க்கையோடு, வாழ்க்கை வரலாற்றுச் சூழ்நிலையோடு நெருங்கிய தொடர்பு உடையன.

"அறம் என்னும் சொல் அறு என்னும் முதனிலை வினை அடியாகப் பிறந்து தீவினையை அறுப்பதெனப் பொருள்படும். அம்மூலப் பொருளை உட்கொண்டே ஆசிரியர் ஈண்டு மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன் என்றார். அறியாமையால் விளைவது தீவினை. அறியாமையாவது இருள். அவ்விருளை அகற்றுவதே அறத்தின் பயன்" [1] என்பர் தண்டபாணியார்.

மனதளவில் குற்றமில்லாமல் இருப்பதே அறம் என்று திருக்குறள் வலியுறுத்துகிறது. இதனை

*" மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்துஅறன்*
*ஆகுல நீர பிற"*[2]

என்னும் குறட்பாவால் அறியலாம்.

*" அறம் - கையறம், தருமம், நீர்மை, நூற்பயன்நாளகினொன்று,*
*பெரியாரியல்பினென்று "*[3]

என்று தமிழ்மொழி அகராதி கூறுகிறது.

" அறம் - இல்லறம், துறவறம். இல்லறம் - கொடுத்தலுமளித்தலும் கோடலும்; இன்மையும், ஒழுக்கம், புணர்தல்,

புணர்ந்தோரைப் பேணல் மற்றையவுமாம். துறவறம் - துறவும், அடக்கமும், தூய்மையும், தவமும், அறவினையோம்பலும், மறவினை மறுத்தலும், பிறவுமாம் " [4] என்று வீரசோழியம் கூறுகிறது.

"அறம் என்னும் சொல்லிற்குத் தமிழில் எட்டு வகையான பொருள்கள் வழங்கி வருகின்றன. பொதுவாக அது நற்பண்பு அல்லது நல்லொழுக்கம் என்னும் பொருளிலேயே தமிழ் இலக்கியங்களில் வழங்கப் பெற்றிருப்பதை நாம் காணுகின்றோம். மேலும் வழக்கம், நீதி, கடமை, ஈகை, அறக்கடவுள், புண்ணியம், சமயம் போன்ற பொருள்களிலும் வழங்கி வருகிறது " [5] என்று அறத்திற்கு விளக்கம் கூறுகிறார் க.த. திருநாவுக்கரசு.

அறம் எனப்படுவது உலகில் வாழும் உயிர்களுக்கெல்லாம் உணவும், உடையும், இருக்க இடமும் தரல் என்கிறது மணிமேகலை

" அறமெனப் படுவது யாது எனக் கேட்பின்
மறவாது இது கேள் ; மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும், உடையும், உறையுளும் அல்லது
கண்டதுஇல் " [6]

என்னும் அடிகள் மேற்கண்ட கருத்துக்குச் சான்று பகர்கின்றன.

" முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்" [7]

முகத்தால் அன்பு கொண்டு இனிமையாகப் பார்த்து உள்ளத்தில் இருந்து வெளிப்படும் இனிய சொற்களைப் பேசுதல் அறம் என்கிறது திருக்குறள். "அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன

ஒழிதலுமாகும். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்" [8]

பரிமேலழகர் தரும் அறம் பற்றிய விளக்கம் அறம் - மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். ஒழுக்கம் - அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவ்வவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகல். வழக்கு - ஒருபொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பார் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள் மேற்செல்வது. தண்டம் - அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியிலும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக ஒறுத்தல்.

1. கடன் வாங்குதல் 2. அடைக்கலமாகப் பொருளை வைத்தல் 3. உடையன் அல்லான் விற்றல் 4. கூடிமேம்படல் 5.கொடுத்ததை மீண்டும் கொடாமை 6. கூலி கொடாமை 7. கட்டுப்பாடு கடத்தல் 8.விற்றுங்கொண்டும் உள்ளம் ஒப்பாமை 9. ஒப்பிப்பணி செய்யாமை 10. எல்லை வழக்கு 11.சொற்கொடுமை 12.தண்டக்கொடுமை 13. திருடு 14. வன்செய்கை 15.மாதரைக் கவர்தல் 16. மாதர் ஆடவர் தருமம் 17. தாய பாகம் 18. சூது எனப் பதினெட்டுப் பதத்தது வழக்கு.

குறிப்பு : ஒழுக்கம், வழக்கு , தண்டம் என்பனவற்றை வடநூலார். முறையே ஆசாரம், விவகாரம், பிராயச்சித்தம் என்பர்.[9] அறமாவது ஒழுக்கம் வழக்கு , தண்டம் என்னும் மூவகைப்படும் எனக் கூறிய பரிமேலழகர், ஒழுக்கத்தையே உயர்த்திக் கூறுகிறார்.

நற்செயல்கள் செய்வார்க்கும், அச்செயல்களால் விளையும் பயன் மற்றவர்களுக்கும் பலன் நல்குகிறது. ஒன்றன் தொடர்ச்சியாக நடைபெறும்

பல செயல்கள், செய்வார் மட்டுமன்றிப் பெறுவார்க்கும் தொடர்ந்து சமுதாய அளவில் பலன் தரும் ஒன்றாக விரிவடைகிறது. அறம் நீங்கினால் சமுதாயத்தில் தீய செயல்களே நடைபெறும். அதனால் நற்செயல்களைப் போற்றிக் காப்பதன் வாயிலாக அறச் சிந்தனையில் மேலோங்கும் நிலை ஏற்படும்.

நளவெண்பா, சூதின் தன்மையைக் கூற வரும்போது அறத்தை முன்மொழிந்து,

" அறத்தைவேர் கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும் - மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து" [10]

சூது அறத்தை வேரோடு அழிக்கும் என்கிறது.

இலக்கியங்கள் எல்லாம் செயல்களின் மூலமாகவே அறத்தைச் சொல்ல வருகின்றன. அவையெல்லாம் நற்செயல்களை மையமிட்டனவாக அமைந்திருக்கின்றன.

" ஈதல் அறம்" [11]- என்கிறார் ஔவையார்.

" அறுதொழில் அந்தணர் அறம்புரிந்து எடுத்த" [12]

இப்பாடல் சமயத்தைத் தெளிவுபடுத்தும் நோக்கில் சமயம் என்னும் பொருளில் அறம் எடுத்தாளப்பெற்றுள்ளது.

*" அறத்தான் வருவதே இன்பம்மற்று எல்லாம்*
*புறத்த புகழும் இல"* [13]

இப்பாடலில் அறத்தால் வருவதே இன்பம் என்னும் கருத்து வலியுறுத்தப்படுகிறது.

" அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து
தீதுஇன்றி வந்த பொருள்" [14]

தீதின்றித் திரட்டப்பட்ட பொருளோடு அறம் பொருந்த உரைக்கப்படுகிறது.

அறம் என்னும் சொல்லிற்கு ' 1. நல்வினை, 2. ஐயம் (பிச்சை), 3. ஏழைகட்கு இலவசமாகக் கொடுப்பது, 4. நோயாளிகட்கு இலவசமாக மருந்தீகை, 5. நலமானது, 6. இன்பம்( சுகம்), 7. தகுதியானது, 8. கற்பு, 9. நோன்பு, 10. அறப்பயன்( புண்ணியம்), 11.சமயம், 12.ஓதி( ஞானம்), 13.அறச்சாலை, 14.அறத்தெய்வம், 15.நடுநிலையறம் பேணும் கூற்றுவன் என்னும் பல்வேறு பொருள்களைப் பேரகர முதலி " [15] தருகின்றது.

தொல்காப்பியர்,

" இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் " [16]

அறத்தினால் பொருளை ஈட்டி அப்பொருளில் இன்பம் நுகர்வது மக்கள் வாழ்க்கை என்று கூறுகிறார். "அறத்தால் ஒருவர் பெறுவது இன்பம். எனவே, இன்பத்திலிருந்து அறத்தை வேறாகக் காட்டுதல் இயலாது " [17]

கழகத் தமிழகராதி அறம் என்பதற்குக் " கடமை, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், புண்ணியம், அறநூல், அறக்கடவுள், "[18] என்னும் பொருள்களைத் தருகிறது.

அபிதான சிந்தாமணி அறம் என்பதற்கு பின்வரும் முப்பத்திரண்டு பொருள்களைத் தருகிறது . ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்குணவு, அறு சமயத்தோர்க்கு உண்டி, பசுவிற்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச் சோறு, மகப்பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடல், அறவைத் தூரியம், சுண்ணம், நோய் மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண் மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர் துயர் களைதல், தண்ணீர்ப்பந்தர், மடம், தடம், கா, ஆவுறுஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலை கொடுத்து உயிர் காத்தல், கன்னிகாதானம் [19] என்பன அவை.

"அறச்செயல்கள் முப்பத்திரண்டையும் அவற்றின் பெயர்களையும் சேந்தன் திவாகரம் குறிப்பிடுகின்றது " [20]

'அறம் - சமயம், ஞானம், புண்ணியம், நோன்பு, ஒழுக்கம், தவம், தருமம், நீதி, நீர்மை, இல்லறம், துறவறம், கற்பு, தானம் ' [21] கையறம், தருமம், நீர்மை, நூற்பயன்நாளகினொன்று, பெரியாரியல்பினென்று என்று அறத்திற்கும், அம்பு, அறம், அஃது இராசத குணத்துளொன்று ,இயல்பு, உபநிடதம், ஒப்பு, சுத்தம், தொழில், நல்லொழுக்கம், நியாயப்பிரமாணம், யாகாதிகருமம், வேதம், கடமை, என்று தர்மத்திற்கும் [22] தமிழ் அகராதி சொற்பொருள் விளக்கம் தருகிறது.

அறம் - குடும்ப வாழ்வும் பொது வாழ்வும் சீராக இயங்க ஒருவர் கடைப்பிடிக்கும் சமயச் சார்பான அல்லது ஒழுக்கக் கண்ணோட்டத்துடன் கூடிய நெறிமுறைகள் அல்லது கடமைகள்; ethical or religious code of conduct [23]

"அறம் என்பது நல்வினை மாந்தர் யாவரும் நல்வினை செய்ய விரும்புதல் வேண்டும் என்பது ஔவையாரின் கட்டளை . [24]

அறம் என்பதற்கு மறப்புறம், தருமம் (பிங்.) புண்ணியம், தகுதியானது [25] என்று தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி கூறுகிறது.

தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் தாம் எடுத்துக் கொண்ட பொருளை விளக்க வருமிடத்தெல்லாம் அறத்தைக் கைக்கொள்கின்றன. நற்செயல்களை, தீயசெயல்களை விளக்க வரும்போதெல்லாம் அறம் என்னும் சொல் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

*"அறம்சாரான் மூப்பே போல்"* [26]

என்னும் கலித்தொகைப் பாடலில், தரும நெறியைப் பொருந்தாமல் வறிதே மூப்பெய்திய ஒருவனின் நிலையைப் போலத் தலைவி பொலிவிழந்து காணப்பட்டாள் என்று கூறப்பட்டிருக்கிறது.

*" அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு*
*மொழிந்தவாயான் முக்கணாகி மேயதுமு துகுன்றே "* [27]

என்று திருஞான சம்பந்தர் தம் தேவாரத்திலும்,

*" அருந்தவருக்கு ஆலின்கீழ் அறம் முதலா நான்கினையும்*
*இருந்தவருக்கு அருளும்அது எனக்குஅறிய இயம்பு; ஏடீ*
*அருந்தவருக்கு அறம்முதல் நான்கு அன்றுஅருளிச் செய்திலனேல்*
*திருந்த அவருக்கு உலகுஇயற்கை தெரியாகாண் ; சாழலோ"* [28]

என்று மாணிக்கவாசகர் திருவாசகத்திலும் குறிப்பிடுகின்றார்.

தன்னைப் பிரிந்திருக்கும் தலைவன் அறமில்லாதவன் என்னும் நோக்கில் தம்மை வருந்தச் செய்தால் "அறனில்லாளன்" [29] என்ற தலைவி கூற்றால் அறம் ஒழுக்கமாகப் போற்றப்பற்றப்பட்ட நிலையை அறிய முடிகின்றது. புறநானூறு

*" ................. ...................... மாண்ட*
*அறநெறி முதற்றே அரசின் கொற்றம் "* [30]

என்று அரசுக்கு அறத்தையே முதன்மைப்படுத்துகின்றது.

திருக்குறள் அன்பை அறமாகக் கூறுகிறது.

*" என்பி லதனை வெயில்போலக் காயுமே*
*அன்பி லதனை அறம்"* [31]

பதிற்றுப்பத்து அறம் புரியும் அந்தணர் வழி நடக்க வேண்டும் என்பதை,

*" அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி "[32]*

என்கிறது.

அறத்தால் இன்பமும் நற்செயல்களும் விளைவதைப் பல்வேறு பாக்கள் எடுத்துக் காட்டுகின்றன. இதனை,

*'அறத்தின்ஊங்கு ஆக்கமும் இல்லை'[33]*

*' அறத்தான் வருவதே இன்பம்'[34]*

*' மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அறம்'[35],*

*' இன்சொ லினிதே அறம்'[36]*

*'.........................பொருளும் இன்பமும்*
*அறத்து வழிப்படூஉம்'[37]*

*' அறத்திற்கே அன்புசார்பு என்ப'[38]*

*' அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை'[39]*

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

" மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு "[40]

என்னும் குறளில் அறத்தை வலிமையான ஒன்றாகக் கையாள்கிறார் வள்ளுவர்.மறந்தும் பிறருக்குத் தீமை விளைவிக்கும் செயல்களை

எண்ணக்கூடாது.அவ்வாறு எண்ணியவனுக்கே கேடு விளையும் என்கிறார். " எது உனக்கு இன்னல் புரியுமோ அதனால் அடுத்தவரைப் புண்படுத்தாதே என்கிறது பௌத்தம் " [41]

"அறம் என்னும் தமிழ்ச் சொல்லுக்குப் பொருத்தமான "எதிக்ஸ்"Ethics என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு ஆங்கில அகராதி, தனிமனிதன் பிறருடன் தொடர்புகொள்ளத் துணை செய்யும் பொது இயல்பான ஒழுக்கம்" [42] என்கிறது.

"அறமே அறிவு, அறிவே அறம் எனக் கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானிகளாகிய சாக்கிரடீசு, பிளாட்டோ போன்றவர்கள் அளித்த வரையறைகளுக்கேற்ப மனிதனுக்குச் செயற்பாட்டு அறிவைத் தந்து, அவனைச் செயலறம் பேணும் அறப் பேரறிஞனாக வாழத் துணை நிற்பது 'அறவியல்' என விளக்கம் கூறுவது மரபு" [43] என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

மனிதச் சிந்தனை நல்ல நோக்கத்தில் இருக்கின்ற போதுதான் நற்செயல்கள் நடைபெறும். சிந்தனைகளே செயலாவதால் சிந்தனையில் கவனம் இருக்க வேண்டும். " அறம் என்பதை முப்பட்டைக் கண்ணாடியாகக் கொண்டால், அதன் மூன்று பக்கங்களாக எண்ணம், சொல், செயல் விளங்குகின்றன. எண்ணம் அறத்தின் நிலையாற்றலாகும். சொல் இயக்க ஆற்றலாகும். செயல் இயங்கும் ஆற்றலாகும். இம்மூவகை ஆற்றலும் செயல்படும் போது அதுவே ஒழுக்கமாகின்றது. அவ்வொழுக்கமே அறமாகின்றது " [44] என்பார்.

அறம் என்னும் சொல் பல்வேறு நிலையில் ஆழ்ந்த பொருளுடன் எல்லையற்ற வகையில் விரிந்து கிடக்கின்றது. அதன் முடிபான பொருளைத் தேடுதல் இயலாத ஒன்றாகிறது. தனிமனிதனின் ஒழுக்க நடைமுறைகள் அவனளவில் நற்செயல் விளையும் களமாகி அவன் மூலமாகச் சமுதாயத்திற்கு நகரும் நற்செயல்களின் தொகுதியே அறம் எனக் கொள்ளலாம். அறம் என்னும் சொல் பொருள் நெகிழ்ச்சி உடையது. நற்செயல்களைத் தன்னில் இருத்திக் கொண்டு பொருள் தரும் இயல்பு உடையது.

நற்செயல்களால் நன்மையும் தீயசெயல்களால் தீமையும் விளையும். அறம் போற்றாதவர்க்கு அழிவே உண்டாகும்.

*" ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்*
*மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்*
*குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்*
*வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன*
*நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்*
*செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என*
*அறம் பாடிற்றே"* [45]

பசுவின் மடியை அறுத்த பாவிகள், மங்கையின் கர்ப்பத்தை அழித்தவர்கள், அறம் கூறும் பார்ப்பனர்களுக்குத் தீமை செய்தவர்கள் முதலியோர்களுக்கெல்லாம் பாவத்தைப் போக்கிக் கொள்ளும் கழுவாய்கள் உண்டு. ஆனால் ஒருவன் செய்த நன்றியை மறந்தவர் நரகம் செல்வதில் இருந்து தப்பவே முடியாது என்று கூறுகிறது இப்பாடல். அறச் செயல்களுள் நன்றியும் ஒன்றாக இங்குக் குறிப்பிடப்பெறுகிறது.

அறம் தனிமனிதனோடும் சமுதாயத்தோடும் நெருங்கிய தொடர்புடையது ஆகலின் செயல்பாடுகளில் மிகுந்த கவனம் தேவை. மனிதனின் சமுதாய, சமய, பொருளாதார, பண்பாட்டு நிலைகளில் அறம் முக்கியமான பங்களிப்பைத் தருகிறது. அதனால் " ஆசைகளும் உணர்ச்சிகளும் அறிவுக்குக் கட்டுப்பட்டிருந்தால் அதுவே அறமாகும். அறத்தின் குறிக்கோள் மனிதனை முழுமையடையச் செய்ய வேண்டும் என்று பிராட்லி குறிப்பிடுகிறார்." [46] உனக்குப் பிறர் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறாயோ அதனைப் பிறருக்குச் செய்வாயாக " [47] என்கிறது வேதாகமம்.

"வாழ்வு முழுவதும் பின்பற்றத்தகுந்த ஒரு கனிவான அன்பு என்று உரைக்கிறது " [48] வேதாகமம்.

எனவே, மேற்கூறிய வரையறைகளிலிருந்து அறம் என்பதற்கு தருமம், புண்ணியம், வாய்மை, ஈகை, சொற்காத்தல், பெரியவர்களை மதித்தல், கற்பு, அன்பு, ஊழ், தகுதி, சமயம், ஞானம், துறவு தியாகம், கொடை, எனப் பல பொருள்கள் இருப்பதை அறிய முடிகிறது.எனவே, அறம் என்பதற்குச் சொல்லாலும் செயலாலும் பண்பட்டநிலையில் நற்சிந்தனை மேலோங்க வாழ்வதையே பொருளாகக் கொள்ளலாம்.

## அறத்தின் தோற்றம்

மனித சமுதாயம் நீண்ட நெடிய வரலாற்றை உடையது. காட்டுமிராண்டி நிலையில் இருந்த மனிதன் ஒருவருக்கொருவர் ஒத்துழைக்கத் தொடங்கிய போதே, வரலாறு அறியாக் காலத்திற்கு முன்பே அறம் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். மனிதன் கூட்டமாகச் சேர்ந்து வாழத் தலைப்பட்ட

ஆற்றங்கரை நாகரிகங்கள் சிறப்பான அறங்களின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உரியதாகத் திகழ்ந்திருக்க வேண்டும்.கி.மு. வின் முதல் சில நூற்றாண்டுகளில் மிகச் சிறந்து விளங்கிய சிந்து சமவெளி ஹரப்பா நாகரிக நகரங்கள் நல்ல கட்டமைப்போடு கூடியனவாய் விளங்கியவை. இவ்வளவு வளர்ச்சியும் பெற்ற நகரங்களில் அறிவார்ந்த அறம் நிறைந்த மக்களும் வாழ்ந்திருத்தல் கூடும். தொல்பொருள் ஆய்வில் கண்டெடுக்கப்பட்ட பல்வேறு தெய்வ உருவங்கள் வழிபாட்டுத் தன்மையிலான அறங்களையும் நகர அமைப்புகளால் கடைப்பிடிக்கப் பட்ட வாழ்வியல் அறங்களையும் ஊகிக்கச் சான்றாய் அமைகின்றன.

நமக்குக் கிடைத்துள்ள தமிழ் இலக்கண இலக்கியங்கள் அறத்தைச் சிறப்பாகப் பேசுகின்றன. தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பிற்கால இலக்கியங்கள் எல்லாம் எல்லையற்ற நிலையில் அறச்சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளன.

வாழ்வில் அறங்கள் பலவழிகளில் நிகழ்கின்றன. பண்டைத் தமிழர்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களைக் கூறியுள்ளனர். அறம் - நல்ல செயல்களைக் கைக்கொள்ளுதல் ; பொருள் - நல்ல செயல்களின் மூலமாக வருவாயை, பொருளை ஈட்டல் ; இன்பம் - அறவழியால் ஈட்டிய பொருளைக் கொண்டு இன்பமாக வாழும் நிலை. இதன் இறுதியில் கிட்டுவது வீடுபேறு. ஆனாலும் இச்செயல்களுக்கெல்லாம் முழுமுதற்காரணமாய் அமைவது அறம் என்பதாகும்.

தொல்காப்பியர்,

*" அந்நிலை மருங்கின் அறமுத லாகிய*
*மும்முதற் பொருட்கும் உரிய வென்ப"* [49]

தொல்காப்பியர் வீடுபேற்றைத் தனியாக எடுத்துக் கூறவில்லை.

*" அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே"* [50]

என்பது நன்னூல் விதி.

வடமொழியாளர்கள் தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று நாற்பொருள்களைக் கூறுவர். இதனையே தமிழ் இலக்கியங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என ஒன்றன் வழித்தாக மற்றொன்று இயங்கும் என உரைக்கின்றன. அறம் விரிந்த பொருளை உடையது. மனிதர்கள் செய்யும் நற்செயல்களை எல்லாம் இதற்குள் அடக்கி விடலாம்.

"பழங்கால மக்கள் பசி, பிணி, பகை, வறுமை ஆகிய வாழ்க்கைப் போராட்டங்களுக்கிடையே இன்பமும், பொருளும் பெறப் பல்வேறு நெறிகளைப் பின்பற்றியிருப்பர். இந்நெறிகளில் பிறருக்குத் தீங்கு பயவாத நல்ல நெறியிலேயே ஒழுகவேண்டும் என்ற ஒழுகலாறு கட்டுப்பாடாக - கடமை உணர்வாக மக்களிடையே வளர்ந்து ஏற்றுக் கொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும். மரபொழுக்க நிலையில் இவ்வாறு ஏற்றுக் கொள்ளப் பெற்ற நெறிகளையே அறங்கள் என இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. அறநெறியில் ஈட்டப்பெறாத செல்வமும் இன்பமும் நிலையற்றவை என்று எண்ணும் நிலை ஏற்பட்டது. வஞ்சனையால் ஈட்டப்பெறும் செல்வமும் இன்பமும் பழியென்றும் கருதப்பட்டன. அறநெறி வாழ்தலே சிறப்பு என்றும்

பண்டைத் தமிழர் கருதினர். இத்தகைய கருத்துகளைத் தரும் அறநூல் இருந்தமையை அறம் பாடிற்றே என்ற தொடர் குறிக்கின்றது "[51] என்பர் முத்துலக்குமி.

மனிதச் சமுதாயத்தின் தொடக்கநிலை கரடுமுரடான தன்மை உடையன என்பதை வரலாறுகள் பலவும், அரசுரிமைப் போர்கள் பலவும், முரண்பாடான சமூக நிகழ்வுகளும் மெய்ப்பிக்கின்றன. தன் இச்சைப்படி வாழ்ந்த மனிதன் காலப் போக்கில் ஒருவரைப் பார்த்து ஒருவர் நன்னடத்தைகளைக் கற்று மேம்பட்டநிலையை அடைந்த போதுதான் சமுதாயம் அதன் அடுத்த நிலையான நாகரிகத்தை நோக்கி நகர்ந்திருக்க வேண்டும். நாகரிகம் வளர்வதற்கு முதலில் பண்பாடு அவசியம். பண்பட்ட நிலத்தில் பயிர் நன்கு விளையும். பண்பட்ட மனதில் நல்லறங்கள், நற்சிந்தனைகள் மலரும். புலனை உழுது நற்சிந்தனைகளை விதைத்த பண்டைக் காலப் புலவர்கள் பலர் சொல்லேர் உழவர் எனப் போற்றப் பெற்றனர்.

*" பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்*
*மண்புக்கு மாய்வது மன்."* [52]

என்னும் குறள், அறச்சிந்தனை உடையவர்களைப் பண்புடையவர்கள் என்று சுட்டிக் கூறி அச்சிந்தனையும் செயலும் இன்றேல் இவ்வுலகம் மண்ணோடு அழிவது உறுதி எனப் பகர்கிறது. சங்கப்பாக்கள் பலவும் அறச் சிந்தனையோடுதான் படைக்கப்பட்டிருக்கின்றன.

*" அத்தம் செல்வோர் அலறத் தாக்கி,*
*கைப்பொருள் வௌவுங் களவுஏர் வாழ்க்கைக்*
*கொடியோர் இன்று அவன் கடியுடை வியன் புலம் ;*
*உருமும் உரறாது ; அரவும் தப்பா*
*காட்டு மாவும் உறுகண் செய்யா"* [53]

என்னும் பாடல் அடிகள் அறநெறி நிறைந்த நாட்டின் மக்கள் வாழ்க்கை முறையை விவரிக்கிறது.

தமிழ் மன்னர்கள் பலரும் அல்லவற்றைக் கண்டித்து அறம் நிறைந்த ஆட்சியை நடத்தினர் என்பதை

*" அல்லது கடிந்த அறம்புரி செங்கோல் "* [54]

என்னும் பெரும்பாணாற்றுப்படையின் பாடலடியால் அறியலாம்.

தலைவன் பரத்தையிடம் இன்பம் துய்த்து இல்லம் திரும்பும் வேளை அவனைக் கடிந்துரைப்பதாகப் பாடப்பட்டிருக்கும் பாடல் அறச்சிந்தனை மிக்கதாகவே திகழ்கிறது.

*" வாழி யாதன் வாழி யவினி*
*நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க*
*எனவேட் டோளே யாயே யாமே*

*நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்*
*யாண ரூரன் வாழ்க*
*பாணனும் வாழ்க வெனவேட் டேமே"* [55]

என்னும் பாடலில் பொது நிலையில் நாடும் மன்னனும் வாழ வேண்டும், நாட்டில் நெல்லும் பொன்னும் பெருக வேண்டும் என்னும் அறச் சிந்தனை மிகப் பாடப் பெற்றுள்ளது.

அகப்பாடலாயினும் புறப்பாடலாயினும் தாம் எடுத்துக் கொண்ட அறத்தைத் தெளிவாய் அறிவுறுத்துகின்றன. புறநானூறு

*" ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம்அம் பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் என*
*அறத்துஆறு நுவலும் பூட்கை மரம்".* [56]

என்று போருக்கு முந்தைய அற நிகழ்வுகளைப் பட்டியலிடுகின்றது. இப்பாடல் ஒட்டுமொத்த மனிதச் சமூகத்திற்கும் பாடம் கற்பிப்பதாய் அமைந்திருக்கிறது.

சமணர்கள் மற்ற உயிர்களுக்குச் சிறிதும் துன்பம் தராத இயல்புடையவர்கள். தாங்கள் நடக்கும் பாதைகளை மயில்பீலியால் சுத்தப்படுத்திச் செல்லும் தன்மை உடையவர்கள். தமிழகத்தில் செழித்து வளர்ந்த சமண பௌத்த சமயங்கள் அறச் சிந்தனைகளையே பெரும்பாலும் வலியுறுத்தின.

"அறிவு, நோக்கம், வாக்கு, செயல், ஒழுகலாறு, முயற்சி, மனம், தியானம் என்ற எட்டும் தவறின்றி அற நேர்மையுடையதாக இருக்க வேண்டும்" [57] எனப் பௌத்தம் கூறுகிறது.

> " தெய்வீகமான மறைபொருள் அறம்" என்று கிரேக்க ஞானிகள் உரைக்கின்றனர். [58]

மரபு நிலை அறத்தின்பால் வருவதாகும். உயர்ந்தவர்களின் செயல்கள் காலம் காலமாகப் பின்பற்றப்பட்டு வரும் இயல்பை உடையன. அதனால் தொல்காப்பியரும்,

> *" வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே*
> *நிகழ்ச்சி அவர்கட் டாகலான "* [59]

என்று கூறுகிறார்.

வாழ்வியல் அறங்களான சுற்றம் பேணல், விருந்து உபசரித்தல், ஈகை, பொறையுடைமை, சினம் காத்தல் என வரும் இவையெல்லாம் இயல்பாக நடைபெற வேண்டியவை. சங்கப்பாக்கள் பலவும் அறம் செய்யவே பொருள் தேடும் நிலையை வலியுறுத்துகின்றன. இவ்வறங்கள் சரியாகக் கடைப்பிடிக்காத பொழுது அவ்வறங்களை எடுத்துச் சொல்லும் பக்குவமுடைய வழியாக இலக்கியம் திகழ்கிறது. இதற்கு இது முடிவென்ற பொருளும் உணர வாய்ப்பாக அமைகிறது.

தனிப்பட்ட மனிதனின் வாழ்வியல் சூழ்நிலைகளால் பல்வேறு விளைவுகள் ஏற்படுகின்றன.அவ்விளைவுகளால் நிகழும் செயல்கள் பல்வேறு

முரண்களால் மோதிக்கொள்ளும் போது புதிய விளைவுகள் ஏற்படுகின்றன. இப்புதிய விளைவுகள் தனிமனித நிலையிலிருந்து சமுதாயத்தையும் தாக்கும் இயல்பு கொண்டவை. மனிதனின் ஆசைகளும் செயல்களும் தான் துன்பத்தின் தொடக்கத்திற்கு அடித்தளமாக அமைகின்றன. இங்கு ஆசைகளற்ற அடித்தள மனத்தை உருவாக்க முனைகையில் அதுவே மிகப் பெரிய அறமாக விளங்கும் தன்மையைப் பெறுகிறது. மனிதர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழ்வதே அறம்.

சீனஞானி லாட்சூ " இந்த உலகமும் பிரபஞ்சமும் மனிதனுக்காகவே ஏற்படுத்தப்பட்டவையல்ல; மனிதனும் வாழ்வதற்காகப் படைக்கப்பட்டதே தவிர, மனிதனுடையது மட்டுமே என்பது உண்மையன்று ; இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் ஒன்றுக்கொன்று உதவியாக, ஒன்றை ஒன்று சார்ந்து வாழவே படைக்கப்பட்டிருக்கின்றன" [60] என்கிறார். மேலும் " ஆசையும் அதிருப்தியும், பேராசைக்கும், போட்டிக்கும் வழிவகுக்கின்றன. எனவே நல்ல வாழ்க்கை நெறிகள் கடைப்பிடிக்கப்படும் நாட்டில் பந்தயக் குதிரைகள், பந்தய மைதானத்தில் ஓடிப் போட்டியிடுவதில்லை. உரமாகப் பயன்படும் சாணத்திற்காக மேயவிடப்படுகின்றன". [61] இம்மேற்கோளில் நல்ல மனிதர்கள் தாங்கள் வாழும் சமுதாயத்தின் உயர்வுக்காகப் பாடுபடுவார்கள் என்ற அறத்தை உட்பொருளாகக் கூறியிருக்கிறார்.

நல்ல செயல்களே நன்மை விளையக் களமாக அமையும் என்பதைக் கூற " சான்றோருடன் பழகு; உயிர்க்கொலை தவிர்; புலால் உணவைக் கைவிடு; அறிவு பெரியது; கல்வி எல்லையற்றது; ஒருவர் தம் வாழ்நாளில் கற்பது மிகச் சிறிதே; எனவே கல்விச் செருக்கு கூடாது; கல்வியினும் மேம்பட்டது ஒழுக்கமே;உள்ளதைக் கொண்டு உள்ளம் மகிழ

வேண்டும்; கிடைக்காத பொருளுக்கு ஏங்கக் கூடாது; ஊழ்வினைப்படி யாவும் நடக்கும்; அதை எவராலும் மாற்ற முடியாது. மக்கள் வாழ்நாள் வரையறுக்கப்பட்டது; மாண்டவர் மீளார்; எல்லாம் ஈசன் செயல்; செல்வ நிலையாமை, யாக்கை நிலையாமையினை இவ்வுலகில் கண்டு உடனே இவ்வுலகைத் துறவாமல் தாமரை இலை நீர்போல் ஒட்டியும் ஒட்டாமலும் இவ்வுலக வாழ்க்கையை நடத்த வேண்டும்" [62] என்கிறார் ஔவையார்.

## அறத்தின் வளர்ச்சி

உயிர்களின் பரிணாம வளர்ச்சி போன்றே கருத்துகளும் படைப்புகளும் வளர்ச்சியை உடையவை.ஒரே கருத்து பல்வேறு பொருள்களில் பல்கிப் பெருகும் இயல்பு உடையது. ஒரே மரம் பல்வேறு மரங்களைத் தன் விதைகளால் பெருக வைப்பது போல ஒரு கருத்து சமூகப் பயன்பாட்டுக்குள் வரும்போது பல்வேறுபொருள்களில் ஆளப்படுகிறது. அறம் என்னும் சொல்லுக்கும் அத்தகைய சிறப்பு உண்டு. 'அறம்' என்னும் சொல் காலம்தோறும் புதிய புதிய பொருள்களைப் பெற்று வந்திருக்கிறது. பொதுவாகச் சங்க காலத்தில் நல்ல செயல்களுக்கு அடைமொழியாக அறம் பயன்படுத்தப்பட்டது. உயர்ந்த பொருளை, செயல்களை வகைப்படுத்த அறம் பயன்பட்டது. காலப்போக்கில் சங்கம் மருவிய காலம் அறச் சிந்தனையில் புதிய கருத்துகளைப் புகுத்தியது. சங்க காலம் போல் அல்லாமல் இக்காலத்தில் அறம் நீதி என்னும் பொருளில் ஆளப்பட்டது. இது செய்தால் இது பயன் என்னும் நோக்கில் படைப்புகள் வெளிவந்தன.

தீய செயல்களை எல்லாம் வகைப்படுத்தி அதற்கான பலன்கள், நல்ல செயல்களை எல்லாம் வகைப்படுத்தி அதற்கான பயன்கள் கூறுவதென இரண்டு பெரும் பிரிவுகளில் இக்கால இலக்கியப் பாக்களைக் கொண்டு வரலாம். இதற்குச் சான்றாக,

*" தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்*
*பெய்எனப் பெய்யும் மழை ".* [63]

*" ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய் ".* [64]

*" இனிய உளவாக இன்னாத கூறல்*
*கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று ".* [65]

*" எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுஉண்டாம் உய்வுஇல்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு ".* [66]

என்னும் குறள்களைக் கூறலாம். மேலும் பொய்யாமை சிறந்த அறமாகக் கூறப்பட்டது.

*" பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற*
*செய்யாமை செய்யாமை நன்று "* [67]

என்றது குறள்.

வாழ்வில் தொடர்ந்து துன்பங்கள் வருவதைக் கண்டு விலகித் துறவு கொள்ளாமல் வாழும் வாழ்வை நாலடியார்,

*" துன்பமே மீதூரக் கண்டும் துறவுள்ளார்*
*இன்பமே காமுறுவர் ஏழையார் - இன்பம்*
*இசைதொறும் மற்றதன் இன்னாமை நோக்கிப்*
*பசைதல் பரியாதாம் மேல் ".* [68]

என்கிறது.

*" குளந்தொட்டுக் கோடு பதித்து வழிசிவந்து*
*உளம்தொட்டு உழுவயல் ஆக்கி - வளம்தொட்டுப்*
*பாடுபடுங்கிணற்றோ டென்றிவ்வைம் பாற்படுத்தான்*
*ஏகும் சுவர்க்கத்து இனிது ".* [69]

என்று நல்லறம் புரிந்தவர்களுக்கு வீடு பேறு கிடைக்கும் தன்மையை வலியுறுத்துகிறது சிறுபஞ்சமூலம்.

*" நன்றியறிதல் பொறையுடைமை இன்சொல்லோடு*
*இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோடு*
*ஒப்புர வாற்ற வறிதல் அறிவுடைமை*
*நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்*
*சொல்லிய ஆசார வித்து ".* [70]

என்னும் பாடலில் நன்றி மறவாமை, பொறுமை, இன்சொல் பேசுதல், பிற உயிர்க்குத் துன்பம் செய்யாமை, கல்வி, உயர்ந்த தன்மை, அறிவுடைமை, நற்பண்பு உள்ளவரோடு நட்புச் செய்தல் ஆகிய செயல்களை உயர்ந்தவையாக ஆசாரக்கோவை குறிப்பிடுகிறது. இவையெல்லாம் அறத்தின்பாற்பட்ட செயல்களாகும்.

இவ்வாறான செயல்களின் மூலமாய்க் கூறப்பட்ட அறம் பக்தி இலக்கிய காலத்தில் பக்தி மார்க்கமாக நற்செயல்கள் செய்து இறைவனை அடையும் தன்மையை வலியுறுத்தியது. நிலையாமைத் தன்மையை உணர்ந்து இறைவனை அடையும் வழிமுறைகளை உணர்த்துவதாய் அமைந்தது. காப்பியக் காலத்தில் இந்நிலை உறுதிப் பொருள்கள் நிலைக்கு உயர்ந்து பெருங்காப்பியங்கள் எல்லாம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும்

நாற்பொருள்களும் சிறக்கும் நோக்கில் படைக்கப்பட்டன. பின்னர் ஆருயிர்க்கெல்லாம் அன்பு செய்வதே அறமாகப்பட்டது.

" எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர்அவர் உள்ளம்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம் என நான் தெரிந்தேன் அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட என்
சிந்தை மிக விழைந்த தாலோ " [71]

என வள்ளலார் கூறுவது அன்பறம்.

## உறுதிப் பொருள்களின் வாயிலாய் அறம்

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களும் ஒன்றை ஒன்று சார்ந்தவை. நல்ல செயல்களினால் ஈட்டப்படும் பொருளால் பெறும் இன்பம், அதைத் தொடர்ந்து பெறும் வீடு எல்லாமே ஒன்றை ஒன்று சார்ந்தவை. பொருள், இன்பம், வீடு என்னும் மூன்றும் அறத்தினால் மட்டுமே முடிவு செய்யப்படுகின்றன. வாழ்வியல் செயல்களை அறத்தை மட்டும் ஒதுக்கி வைத்துவிட்டு மதிப்பிட இயலாது. பொருளீட்டல், இன்பமான வாழ்க்கை என்னும் இரண்டும் அறத்தின் வாயிலாக விளைபவை.

நாற்பொருள்களும் உயர்ந்த குறிக்கோளை எட்டும் பொருட்டே இலக்கியங்களில் பாடப்பெற்றன. மனிதனுக்கு நேர்மையான வாழ்க்கையைக் கற்றுக் கொடுப்பதே இதன் நோக்கம். அறவழியாகப் பொருள் ஈட்டித் தானும்

பயன்படுத்திப் பிறருக்கும் கொடுக்கும் போது அறத்தின் வளர்ச்சி நிலை பல்வேறு பரிமாணங்களைப் பெறுகிறது.

" இன்பம் காரணமாகப் பொருள் தேடும் ஆகலானும், பொருளானே அறஞ்செய்யும் ஆகலானும் இன்பமும் பொருளும் ஏற்றம் என ஓதினார் என உணர்க "[72] என்று இளம்பூரணர் கூறியுள்ளார். வாழ்க்கைக்குப் பொருள் முக்கியமாதலால் சங்கப் பாக்களில் தலைவன் பாலைவழி நடந்து சென்று அரிதின் முயன்று பல துன்பங்களுக்கு இடையில் பொருள் ஈட்டுகிறான். கொண்டு வந்த பொருளைப் பகிர்ந்து கொடுத்து இன்பம் காண்கின்றான். அறத்தால் இன்பம் துய்த்தலும் சிறப்பிடம் பெறுகிறது. நன்னூல்

*" அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே "*[73]

என்று இலக்கணமாக்கிவிட்டது. பெருங்காப்பியங்கள் எல்லாம் நாற்பொருளை வலியுறுத்துவதில் கவனம் செலுத்தியதில் இருந்து நாற்பொருள்கள் இலக்கிய உலகில் ஏற்படுத்திய தாக்கத்தை உணரமுடிகிறது. பிறன்மனை நோக்காப் பேராண்மையை இராமாயணம் அறமாகக் கூறுகிறது. சூதின் தீமைகளைக் கூறி, தர்மம் நிலைக்கும் தன்மையை மகாபாரதம் கூறுகிறது. ஊழ்வினை, அரசியல் கூற்றாதல், பத்தினியின் சிறப்பு ஆகிய பொருள்களை அற நோக்கில் சிலம்பு கூறுகிறது. நிலையாமையை வலியுறுத்தித் துறவு பூணுவதை மணிமேகலையும், சீவக சிந்தாமணியும் கூறுகின்றன. உறுதிப்பொருள்களான அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருள்களைச் சுற்றி அறம் - அதன் சார்பான செயல்கள். பொருள் - தேடும் முறை, பகிர்ந்து வழங்கும் முறை. இன்பம் - ஈகை. வாழ்வியல் என்னும் நிலையில் அனைத்து அறங்களும் கூறப்பட்டு விடுகின்றன. அறத்தின் பெருமை கருதியேதான் முதலிடம் கொடுக்கப்பெற்றது." அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பொருளையும்

இலக்கியங்கள் பேசவேண்டும் என்பது பழம் மரபுக்கூறுகளில் ஒன்று. வாழ்வியல் கூறுகளில் ஏனையவற்றை விடவும் அறத்திற்கு முதன்மை கொடுத்தனர் தமிழர்கள் "[74] என்கிறார் அறிவுநம்பி.

## அறத்தின் பல்வேறு பரிமாணங்கள்

'அறம்' - என்னும் சொல் பல்வேறு - பொருள் பொதிவினைக் கொண்டது. இன்னதுதான் அறம் என்று முழுமையாய் பொருள் கூறிவிட இயலாது. அறத்தின் தோற்றத்திற்கான முதல் களம் மனம். மனிதன் இயற்கையான வாழ்க்கை வாழ்ந்த போது பொருள் பற்றிய சிந்தனையோ, இன்பம் பற்றிய சிந்தனையோ, வீடுபேறு எண்ணமோ ஏற்பட்டிருக்க சிறிதும் வாய்ப்பில்லை. அவனுடைய நாடோடி வாழ்க்கைமுறை நிலையில் தான் தேடல் தொடங்கியிருக்கும். ஓர் உயிர் இன்னோர் உயிரைச் சார்ந்தே வாழவேண்டும் - வாழும் என்பது டார்வினின் உயிரியல் கோட்பாடு. ஆதிமனிதன் தன் உணவுக்காகப் போராடவேண்டிய நிலையில் இருந்தான். இயற்கை உணவுகளை உண்ட மனிதன் விலங்குகளையும் வேட்டையாடி உண்டான். உயிர் பாவம் என்ற சிந்தனை அவனுக்கு எழவில்லை. சமுதாய அமைப்பான வீடு தோன்றிய நிலையில்தான் பொருள், இன்பம் என்னும் இரு கூறுகள் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். வீட்டில் தங்கி வாழத் தலைப்பட்ட நிலையில் தன் உணவுக்காகப் பயிரிடுதல் தொடங்கிக் காத்தல், அறுவடை செய்தல், பகிர்ந்தளித்தல் என்னும் நிலையிலேயே அறம் தொடங்குகிறது. இன்பமும் வருகிறது. சங்ககாலப் பாக்கள் பலவும் மக்களின் வழிபாட்டு முறைகளைக் கூறுகின்றனவேயன்றி நாற்பொருள் சிந்தனை முறைப்படி மேலோங்க வில்லை. சிவ வழிபாடு, திருமால் வழிபாடு இடம் பெற்றிருந்த போதும் மதங்கள் தோற்றம் பெறவில்லை. இயற்கையான நடுகல் வழிபாடு, கொற்றவை வழிபாடு, வேலன் வெறியாடல், இல்லுறை தெய்வத்தை வணங்குதல் என்னும் கூறுகளே மிகுந்திருந்தன.

*" வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட்டு அயர்ந்த காந்தளும் "* [75]

துன்பத்திற்குக் காரணம் முருகனே என்று வழிபட்ட தன்மை இங்குச் சுட்டப்படுகிறது. முருக வழிபாட்டை

*" திருமணி விளக்கின் அலைவாய்ச்*
*செருமிகு சேஎயொடு "* [76]

*" வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில்*
*நெடுவேள் "* [77]

என்னும் பாக்கள் குறிக்கின்றன. திருமுருகாற்றுப்படை இலக்கியம் ஆரிய நெறிக்கு வளர்ச்சியடைகிறது.

சேர மன்னர்கள் கொற்றவையை வழிபட்டனர் என்பதை

*" உருகெழு மரபி னயிரை பரவியும் "* [78]

என்னும் பாடலால் அறியலாம்.

சிவ வழிபாட்டை

*" ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை*
*மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும் "* [79]

என்று புறநானூறு குறிப்பிடுகிறது. நெல்லும் மலரும் தூவிப் பெண்கள் இல்லுறை தெய்வத்தை வழிபட்டமையை நெடுநல்வாடை கூறுகிறது. இவ்வாறாக வழிபாடு பற்றிய சிந்தனை இருந்த போதும் வீடுபேறு உணர்த்தப்பெறவில்லை. சங்கம் மருவிய கால இலக்கியங்களும் நன்மை தீமை என்னும் இரு நிலையில் மட்டுமே இருந்து அறம் உரைக்கின்றன. வள்ளுவரும் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளை மட்டுமே கூறுகிறார்.

இடைக்கால இலக்கியக் காலமான பக்தி இலக்கியப் படைப்புக் காலத்தில் இறைவனைத் தொழுது அவனது பாதத்தை அடையும் வழிகள் பெரும்பான்மையும் கூறப்பட்டன. சித்தர் பாடல்கள் பலவும் வாழ்க்கையின் பொய்யான பிம்பத்தைக் கூறித் துறவையும், வீடு பேற்றையும் கூறின. இதனைத் தொடர்ந்தே நாற்பொருள் சிந்தனை மேலோங்கி நிலைபெற்றது. முழுமையடைந்த இலக்கியப் படைப்புக் காலத்தின் கோட்பாடே அறம், பொருள், இன்பம், வீடு என்பது. உறுதிப் பொருள்களை நிலைநிறுத்துவதில் காப்பியக் கால இலக்கியங்கள் முழுமையும் வெற்றி பெற்றிருக்கின்றன. ஆனால் அதற்கு முந்தைய கால இலக்கியங்கள் எல்லாம் உறுதிப் பொருள்களைக் கோடிட்டுக் காட்டியதோடு இலக்கியப் பொருளை முடிவு செய்து நிறைவு பெறுகின்றன.

## பரம்பரையில் அறம்

' நல்லதொரு குடும்பம் பல்கலைக் கழகம் ' என்பார் பாரதிதாசன். குடும்ப வாழ்க்கை முறைக்குப் பெயர்பெற்ற நம் பாரத நாடு பல்வேறு பண்பாட்டுக் கூறுகளைக் கட்டிக் காத்து வரும் சிறப்புடையது.

" *அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்*
*முல்லை சான்ற கற்பின்*
*மெல்இயல்* " [80]

என விருந்து உபசரிப்பின் சிறப்பினை நற்றிணை மொழிகிறது. நள்ளிரவானாலும் விருந்தினர்கள் வந்தால் முகம் கோணாமல் உபசரிக்கும் பண்பைப் பல்வேறு சங்கப் பாக்களால் அறிகின்றோம். பிறருக்குப் பொருள் ஈதல், நலிந்தோர்க்கு உதவுதல் போன்ற பண்புகள் எல்லாம் பண்டைக் காலம் தொட்டுக் கடைப்பிடிக்கப்பட்டு வருபவை. இவ்வாறான பண்புகள் கடைப்பிடிக்கப்படும் இல்லம் அறம் வீற்றிருக்கும் இடமாய் விளங்குகிறது. " மரபொழுக்க நிலையில் வழக்கம், ஆசாரம், சம்பிரதாயம், சட்டம், ஸ்மிருதி, தேவகட்டளை என்பவற்றைக் கொண்டு சமுதாயம் தனி மனிதனுடைய நடத்தையைக் கட்டுப்படுத்தியது " [81] என்று தனி மனித நடத்தைக் கட்டுப்பாட்டைக் கலைக்களஞ்சியம் கூறுகிறது. தனி மனிதனின் நடத்தையும், செயல்பாடும் ஒட்டுமொத்தச் சமுதாயத்தையும் பாதிக்கக் கூடியதாகும்.

" *எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே* " [82]

என்பர் ஔவையார். நல்லவர்கள் நிறைந்துள்ள சமுதாயம் அறம் நிறைந்ததாய் இருக்கும்.

## மனப்பக்குவம்

நல்ல செயல்கள் மனதில் விளைய மனப்பக்குவம் அவசியம். நல்ல செயல்களை, நல்ல நினைவை மனதில் விதைத்தால் செயல்கள் நல்லவையாக இருக்கும். எண்ணங்களே செயல்களாவதால் சிந்தனையில் தெளிவு தேவை. அதனாலேயே

*" சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்*
*சுற்றமாச் சூழ்ந்து விடும் "*[83]

*" நிலத்துஇயல்பான் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு*
*இனத்துஇயல்பு அதுஆகும் அறிவு "*[84]

என்னும் குறள்கள் வாயிலாகச் சிற்றினத்தால் வரும் தீமைகளைக் கூறி நல்லினம் சேர்தலின் இன்றியமையாமையை மறை பொருளாய் உணர்த்தியுள்ளார்.

நற்செயல்கள் செய்ய மனம் உவந்து நிற்றல், தீய செயல்கள் செய்ய மனம் அஞ்சுதல் மனிதனின் இயல்பான குணமாக இருக்க வேண்டும்.

*" தீயவை தீய பயத்தலான் தீயவை*
*தீயினும் அஞ்சப்படும் "*[85]

என்னும் குறள் தீயசெயலைத் தீயை விடத் தீயதாகச் சித்திரிப்பதுபோல அதன் தீமையை நினைவால் உணர்ந்து ஒதுக்க வேண்டும்.

" ஒருவன் இது சரியான செயல்; இதனால் அனைவரும் பயனடையக் கூடும்; ஆதலால் இதனைச் செய்யக் கடமைப்பட்டவன் என்ற அறிவோடும் முழுமனத்தோடும் முடிவு செய்து செயற்படும் நிலை மனச்சான்று நிலையாகும். மனச்சான்று நிலை அற உணர்வு வளர்ச்சியின் இறுதி நிலை ஆகும்". [86] என்று மனச்சான்று நிலைக்கு வாழ்வியல் களஞ்சியம் விளக்கமளிக்கிறது. சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பெற்ற நற்செயல்கள் எவை தீமையான விளைவுகளை ஏற்படுத்தும் செயல்கள் எவை என்பதை அறிய முடிந்த மனத்தால் அறச் சிந்தனையோடு வாழ முடியும். தன்னையும் தன்னைச் சார்ந்தோரையும் தூண் போலக் காக்கும் ஒருவன் அக்குடும்பத்தையே தாங்கும் தூண் போன்றவனாவான் என்னும் வள்ளுவரின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

*" இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்*
*துன்பம் துடைத்தூன்றும் தூண்"* [87]

என்னும் குறள் இக்கருத்தை மெய்ப்பிக்கும். அறம் - அறிவுறுத்துகிறது, காரணம் காட்டி மக்களை நல்வழிப்படுத்துகிறது, மக்கள் மனதில் இயல்பாய் எழுவது, தனிமனிதப் பண்புகளை வளர்க்கிறது என்னும் மா. சண்முக சுப்பிரமணியத்தின் கருத்து சிந்திக்கத்தக்கது. [88] மனிதன் இப்படித்தான் வாழவேண்டும் என்னும் சட்ட திட்டங்கள் பண்பாட்டாலும் நாகரிகத்தாலும் வளர்ந்தவை. தனிமனித நடத்தை, சமுதாய நடத்தை என்பவை எல்லாம் நீண்ட காலமாகப் பயன்படுத்தப்பட்டு வழிவழியாக வந்த நம்பிக்கைகளும், பழக்கவழக்கங்களும், பக்குவப்பட்ட செயல்பாடுகளுமே ஆகும். நல்ல சிந்தனையானாலும், தீய சிந்தனையானாலும் அது தோன்றுவது தனிமனித மனத்தில் தான். மனமே மிகப் பெரிய ஆக்கச் சக்திக்கும், அழிவுச் சக்திக்கும்

காரணமாக அமைகிறது. எனவே பல்வேறு பட்ட மக்களின் குணநலன்களை எல்லாம் ஒப்பு நோக்கி இன்னார் செயல்பாடு அறம் சார்ந்தது, இன்னார் செயல்பாடு அறம் சாராதது, இன்னார் நடுநிலை உடையவர் என்று ஆய்ந்து சொல்லுதல் இயலாத ஒன்றாகும். எனவே பல்வேறு மக்கள் தொகுதியின் சார்பாய்ப் படைக்கப்பட்ட இலக்கியங்களின் துணை கொண்டு குறிப்பிட்ட நிலத்திற்குரிய பொதுவான பண்புகளையும் கூறுகளையும் ஆய்வது சிறப்பாகும். அவ்வகையில் இலக்கியங்கள் கூறும் அறம் பண்பட்ட சமுதாயத்தின் ஒருமித்த குரலாக எல்லாவிதமான நல்ல செயல்களுக்கும் அடித்தளமாக அமைந்திருக்கின்றது.

## தொகுப்புரை

அறம் என்னும் சொல் ஆழ்ந்த, செறிந்த ,நுணுக்கமான பொருள் நயமுடையது. அதைப் பகுத்து இலக்கணம் கூறுதல் எளிதன்று. அறமென்னும் சொல்லின் பொருளை வரையறுத்து விளக்கும் போது பல சிக்கல்கள் தோன்றுகின்றன. காரணம் அச்சொல் காலப்போக்கில் பல்வேறு பொருள்களை உணர்த்தும் செறிவு வாய்ந்த சொல்லாகச் சிறப்புற்று விளங்குகிறது. தெளிவாக ஒழுக்க நெறிகளுக்குரிய விதிமுறைகளின் தொகுப்பு என்று அறத்திற்கு விளக்கம் கூறலாம்.

1. வாழ்வியல் கூறும் இலக்கியப் படைப்பின் நற்செயல்கள் அறவழிப்படும்.

2. மக்களுக்கு உயர்ந்த அறத்தைப் போதிக்கும் பொருட்டு இலக்கியங்கள் அறத்தைக் கருவியாகக் கொண்டிருக்கின்றன.

3. அறம்என்னும் சொல் அறு என்னும் வினையடியை முதலாகக் கொண்டது.

4. அறம் என்னும் சொல் தன்னுள் பல்வேறு நற்செயல்களை உள்ளடக்கிய நெகிழ்வுத் தன்மை உடையது.

5. நல்ல செயல்களின் தொகுப்பே அறம்.

6. நல்ல மனதில் தோன்றும் எண்ணங்களின் வெளிப்பாட்டில் அறம் பிறக்கின்றது.

7. இயற்கையான வாழ்க்கை நிலையில் இருந்து பண்பட்ட நிலைக்கு மக்கள் வாழ்க்கை மாறக் கைக்கொண்ட பல்வேறு நற்செயல்களே அறங்கள்.

8. ஒட்டுமொத்த சமுதாயத்தின் நற்சிந்தனையால் வெளிப்பட்ட நற்செயல்களே அறங்கள்.

9. மனத்தளவில் குற்றமின்றி இருந்து தனக்கும் பிறருக்கும் பயன்பட வாழ்வதே நல்வாழ்க்கை.

10. தனிமனித நிலையில் எழும் ஒழுக்கங்கள் பலரால் கடைப்பிடிக்கப்பட்டுச் சமூகம் முழுமைக்கும் பயன்படும் பொதுக்கூறாக விளங்குகின்றன.

11. அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருள்களும் பண்டைக்காலத்தில் உறுதிப் பொருள்களாகக் கூறப்பட்டன.

12. வீடுபேற்றை உறுதிப் பொருள்களுடன் சேர்த்துக் கூறியது பிற்கால வளர்ச்சி நிலையாகும்.

13. சமயச் சிந்தனையும் இறையியல் சிந்தனைகளும் வளர்ச்சியடைந்த காலத்தில் உறுதிப் பொருள்கள் நான்கு என்னும் வழக்கு ஏற்பட்டது.

14. அறநெறியில் வாழ்வதே தமிழரின் வாழ்வியலாகும்.

15. அறம் செய்வதால் வருவதே முழுமையான இன்பமாகும்.

16. அறவழியில் பொருள் ஈட்டி இன்பம் நுகர்ந்து வாழ்தல் தமிழ்ச் சமுதாயத்தின் அற அமைப்பு முறை எனலாம்.

17. நல்ல சிந்தனைகள் நிறைந்த மனிதச் சமுதாயத்தால் சமூகம் அறவழிப்பட்டு உயரும் எனலாம்.

18. செய்கின்ற செயலின் தரம் பார்த்து நல்லது கெட்டதை ஆராயும் தன்மையால் நற்செயல்கள் பெருகும் நிலை சுட்டப்படுகிறது.

19. எண்ணம், சொல், செயல் என்னும் மூன்றும் தூயதாய் விளங்கும் போது அறம் பிறக்கின்றது.

20. அமைதியான சமுதாயம் படைக்கத் துணை நிற்பது அறம்.

## அடிக்குறிப்புகள்

1. தண்டபாணி விருத்தியுரை, **திருக்குறள் அறத்துப்பால்**, கழக வெளியீடு. சென்னை.1956, ப. 33.

2. **குறள்** . 34, ப. 30.

3. நா.கதிரைவேற்பிள்ளை, **தமிழ்மொழியகராதி**, ஏசியன் எஜூகேஷனல் சர்வீஸஸ், புதுடெல்லி, சென்னை, 1992, ப.151.

4. ஏ. சிங்காரவேலு முதலியார், **அபிதான சிந்தாமணி**, ஏசியன் எஜூகேஷனல் சர்வீஸஸ், புதுடெல்லி, சென்னை,1994, ப. 108.

5. க.த. திருநாவுக்கரசு, **திருக்குறள் நீதி இலக்கியம்** , சென்னைப் பல்கலைக்கழகம், 1977 ப. 24.

6. சீத்தலைச்சாத்தனார், **மணிமேகலை**, ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை, 228-231, ப. 306.

7. **குறள்**. 93, ப. 63.

8. **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்**, உரைப்பாயிரம், கழக வெளியீடு, சென்னை 1995, ப.1.

9. மேற்படி. பக்.2-5.

10. புகழேந்தி, **நளவெண்பா**, 218, ப.108.

11. வே. முத்துலக்குமி, **பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்**, ப 24.

12. **புறம்**. 397: 20, ப. 355.

13. **குறள்**. 39, ப. 33.

14. மேற்படி. 754, ப. 427

15. **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி**, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித்திட்ட இயக்கக வெளியீடு, சென்னை 1985, ப.523.

16. தொல்காப்பியர், **தொல்-கள- நூ**. 89, ப.158.

17. சி. பாலசுப்பிரமணியம், **உருவும் திருவும், நறுமலர் திருப்பதிகம்**, சென்னை, 1967, ப.32.

18. **கழகத் தமிழ்க் கையகராதி**, கழக வெளியீடு, 1990, ப.28.

19. ஏ. சிங்காரவேலு முதலியார், **அபிதான சிந்தாமணி**, ப. 108.

20. திவாகர முனிவர், **சேந்தன் திவாகரம்**, கழக வெளியீடு, சென்னை, 1958, பக். 307-308.

21. **மணிமேகலைத் தமிழ் - தமிழ் அகராதி**, மணிமேகலைப் பிரசுரம், சென்னை -17, 1985, ப.48.

22. **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி**, இன்ஸ்டிடியூட் ஆப் ஸவுத் இந்தியன் ஸ்டடீஸ், சென்னை, 1991, ப. 684.

23. பா.ரா. சுப்பிரமணியம், **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி**, தமிழ் - தமிழ் - ஆங்கிலம், க்ரியா வெளியீடு, 1992, ப.56.

24. மாங்காடு. வ. பாலசுப்பிரமணிய முதலியார், **கருத்தும் எழுத்தும்**, ஆக்கியோர் வெளியீடு, சென்னை 1947, ப.31.

25. சி.பி. கோபால், **தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி**, இலட்சுமி பதிப்பகம், கோவை 2000, ப.35.

26. **கலி.** 38: 19, ப. 106.

27. பேரா. அ.ச. ஞானசம்பந்தன்(பதி.), **தேவாரத் திருப்பதிகங்கள்**, திருஞான சம்பந்தர் தேவாரம், முதல் திருமுறை, பாடல் 575, கங்கை புத்தக நிலையம், சென்னை -17, 1998, ப. 84.

28. திருவாசகன்(உரை.), மாணிக்க வாசகர், **திருவாசகம்**, பாடல் 274, அருள் சுடர் பதிப்பகம், சென்னை 87, 1991, ப. 202.

29. **அகம்.** 20:137, ப. 226; 219 : 10, ப. 253.

30. **புறம்** : 55: 11-12, ப.121.

31. **குறள்**. 77. ப. 55.

32. **பதிற்**: 24: 8, ப. 95.

33. **குறள்.** 32. ப.29.

34. மேற்படி. 39, ப. 33.

35. மேற்படி. 34, ப.30.

36. மேற்படி. 93, ப. 63.

37. **புறம்** 31 : 1-2, ப. 77.

38. **குறள்.** 76, ப. 54.

39. மேற்படி. 49, ப. 39.

40. மேற்படி. 204, ப. 120.

41. ஆ. பூமா, **பாரதத்தில் அறச்சிக்கல்கள்,** முனைவர் பட்ட ஆய்வேடு, செ.ப.க., 2003.

42. **Universal Dictionary,** Readers Digest Association, New York, USA 1998, P. 527.

43. **வாழ்வியல் களஞ்சியம்** (தொகுதி 2), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், பக்.45 - 46.

44. க.த. திருநாவுக்கரசு, **திருக்குறள் நீதி இலக்கியம்** , ப. 27.

45. **புறம்.** 34: 1-7, ப. 83.

46. **வாழ்வியல் களஞ்சியம்** (தொகுதி 2),ப. 38.

47. ஆ. பூமா, **பாரதத்தில் அறச்சிக்கல்கள்,** முனைவர் பட்ட ஆய்வேடு, செ.ப.க., 2003.

48. மேற்படி.

49. **தொல்.** செய்.-இளம். நூ.411, ப. 473.

50. ச. தண்டபாணி தேசிகர், **நன்னூல் விருத்தியுரை**, நூ.10, பாரி நிலையம், சென்னை -108, 1998, ப.53.

51. வே. முத்துலக்குமி, **பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்**, பக். 27- 28.

52. **குறள்**. 996, ப. 572.

53. **பெரும்**. 39-43, ப. 70.

54. மேற்படி. 36, ப. 70.

55. **ஐங்**. 1, ப.1.

56. **புறம்**. 9: 1-6, ப. 32.

57. **வாழ்வியல் களஞ்சியம்** (தொகுதி 2),ப. 36.

58. சி. பாலசுப்பிரமணியம், **உருவும் திருவும்**, ப. 25.

59. **தொல்**. மரபு- இளம். நூ. 638, ப. 574.

60. **அமுதசுரபி** - தீபாவளி மலர், 1997, ப.51.

61. மேற்படி.

62. மேற்படி. ப.93.

63. **குறள்**. 55, ப.43.

64. மேற்படி. 69, ப. 50.

65. மேற்படி. 100, ப. 65.

66. மேற்படி. 110, ப. 71.

67. மேற்படி. 297, ப. 166.

68. **நாலடியார்,** 190, பாரி நிலையம், சென்னை, 1988, ப.28.

69. அ. மாணிக்கனார், **பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும்** (மூன்றாம் தொகுதி), சிறுபஞ்ச மூலம், 66, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-17, 1991, ப. 474.

70. மேற்படி. **ஆசாரக்கோவை,** ப. 409.

71. அ.பேரா. மாணிக்கம்(உரை), **திருவருட்பா மூலமும் தெளிவுரையும்** (ஏழாம் தொகுதி), பாடல்.5297, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-17, 2002, ப. 3031.

72. **தொல்.** பொருள். இளம்- உரை. ப. 3.

73. ச. தண்டபாணி தேசிகர், **நன்னூல் விருத்தியுரை,** நூ.10, ப. 53.

74. அ. அறிவுநம்பி, **கம்பரின் அறவியல்,** ப. 5.

75. **தொல்.** புற. இளம்- நூ.63, ப. 80.

76. **அகம்.** 266: 20, ப. 353.

77. **புறம்.** 55: 20, ப. 121.

78. **பதிற்.** 90: 19, ப. 427.

79. **புறம்**. 56: 1-2, ப. 123.

80. **நற்**. 142: 9-11, ப. 258.

81. **கலைக்களஞ்சியம்** (தொகுதி 1), ப. 255.

82. **புறம்**. 187, ப. 351

83. **குறள்**. 451, ப. 253.

84. மேற்படி. 452, ப. 253.

85. மேற்படி. 202, ப. 119.

86. **வாழ்வியல் களஞ்சியம்** (தொகுதி 2),ப. 49.

87. **குறள்**. 615, ப. 347.

88. தாமரைக்கண்ணன், **பண்டைத் தமிழிலக்கியங்களில் நீதி**, முனைவர் பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 2004.

தனித்தனி மனிதர்களின் தொகுப்பே சமுதாயம். நீண்டகாலமாகப் பண்பட்டு வளர்ந்த அமைப்பு இது. பண்டைக்காலம் முதல் பண்பாடு, பழக்கவழக்கம் முதலியவற்றால் காலந்தோறும் பண்பட்டு வந்தது மனிதமனம். தனிமனிதச் சிந்தனைதான் பல்வேறு நன்மைகள் நடைபெறுவதற்கும், தீமைகள் நடைபெறுவதற்கும் காரணமாக அமைபவை. மனதில் நற்சிந்தனைகள் தோன்றுகிற பொழுது நற்செயல்களும், தீய செயல்களை நினைக்கையில் தீமைகளும் நடைபெறுகின்றன.' வினை விதைத்தவன் வினை அறுப்பான்' என்னும் முதுமொழியும் இதனைத் தெளிவுபடுத்தும்.

இன்றைய நிலையில் இருந்து சங்ககாலத்தை நோக்குகிற போது பல்வேறு நிலைகளிலும் பண்பட்டிருந்த சிறப்பானதொரு அறவாழ்க்கை சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியக் கிடக்கிறது.

*" தனிமரம் காடாத லில்"* [1]

என்பர் பழமொழி ஆசிரியர். மனிதன் தனித்து நின்று எதையும் சாதிக்க இயலாது. சமூகத்தோடு சார்ந்து செயல்பட வேண்டும் எனப் பழமொழி இலக்கியம் வலியுறுத்துகிறது. தனிமனிதன் நினைக்கின்ற அறம் நல்லதாக இருக்கும் பொழுது சமூகம் முழுமைக்கும் பயன்தரும். அறநிகழ்வுகள் காலந்தோறும் கடைப்பிடிக்கப்பட்டு வருபவை சொல்,செயல் அனைத்திலும் அறம் போற்றப்பட்டு வந்த நிலையை நாம் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. தனிமனிதன் சார்ந்த அனைத்து நிகழ்வுகளிலும் அறம் ஊடாடுவதைச் சங்க இலக்கியங்கள் மெய்ப்பிக்கின்றன. பிற உயிர்களிடம் அன்பு செலுத்துவதில் இருந்து வாழ்வின் ஒவ்வொரு நிகழ்விலும் அறம் போதிப்பனவாகச் சங்கப்பாக்கள் திகழ்கின்றன. தனிமனித நிகழ்வுகள் அறம் வழுவிப் போகும் நிலை இருப்பின் தகுந்த உவமைகளால் சுட்டிக்கூறி

இடித்துரை வழங்குவதிலும் இவ்விலக்கியங்கள் அறவளர்ச்சிக்கு மிகச் சிறந்த பங்காற்றியுள்ளன.

மனித வாழ்வின் இயல்பு பற்றிப் பேசவரும் கணியன் பூங்குன்றனார்

*" யாதும் ஊரே யாவரும் கேளிர்*
*தீதும் நன்றும் பிறர்தர வாரா*
*நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன*
*சாதலும் புதுவது அன்றே வாழ்தல்*
*இனிதுஎன மகிழ்தன்றும் இலமே முனிவின்*
*இன்னா தென்றலும் இலமே மின்னொடு*
*வானம் தண்துளி தலைஇ ஆனாது*
*கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று*
*நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்*
*முறைவழிப் படூஉம் என்பது திறவோர்*
*காட்சியின் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்*
*பெரியோரை வியத்தலும் இலமே*
*சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"* [2]

என்னும் பாடலில் உலக நிலையாமையைக் கூறுகிறார். காட்டாற்று வெள்ளத்தில் செல்லும் தெப்பம் போல வாழ்வும் ஊழ்வினை வழியாகச் செல்லும் என்கிறார். அதனால் நற்செயல்கள் செய்யின் வாழ்க்கை நல்வழிச் சென்று முக்திநிலை அடையும் என்பது இங்குக் கூறப்படும் உட்பொருள்.

நற்செயல்கள் நடைபெறுவதற்கு அன்பும் அருளும் தேவை. நம்மைச் சார்ந்தோரிடம் உருவாவது அன்பு. நம்மைச் சாராத பிறரிடம் உருவாவது அன்பு சார்ந்த அருள். இரக்கமாகிய பண்பாகும். அதனால் தான்,

*" அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த*
*இன்னா உலகம் புகல்"* [3]

அருள் நிறைந்த நெஞ்சினர்க்குத் துயரம் தரும் நரக உலகம் இல்லை என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. அருள் நிறைந்த நல்வாழ்வு குடும்பத்தின் பிற கூறுகளான மக்கட்பேறு, இன்பம், ஈகை, விருந்தோம்பல், பொருள் செயல்வகை, வினை செயல்வகை என்பனவற்றிலும் தொடர்கிறது.

தனி மனிதனைப் பொறுத்த வரையில் நல்ல ஒழுக்கமே எதிர்பார்க்கப்படுகின்றது. மனிதன் அன்றாடம் பின்பற்ற வேண்டிய முக்கிய நியமங்களை வேதநூல்கள் வகைப்படுத்தியுள்ளன.

*" ஸத்யம் வத, தர்மம் சர,ஸ்வத்தியாயன் மா ப்ரமத;*
*பூத்யை நப்ரமதி தவ்யம்; தேவ பித்ரு கார்யாபயம்*
*நப்ரமதி தவ்யம்; மாத்ரு தேவோ பவ; பிதுருதேவோ பவ;*
*ருதம் வதிஸ்யாமி, ஸத்யம் வதிஸ்யாமி*

என்பன அவற்றில் சிலவாகும். நேர்மையானதைச் செய்; தெரிந்ததை மட்டும் செய்; தெரிந்ததை மட்டும் சொல்; இனிமையாகப் பேசு; கடுமையாகப் பேசற்க; நல்லோரை நாடு; உயிர்கள் அனைத்திடமும் அன்பாயிரு; உயர்வான உபதேசங்களைக் கேட்க; தாய், தந்தை, குரு, விருந்தினர் அனைவரிடமும்

அன்பாகவும் பணிவாகவும் இரு என்பன மேற்குறிப்பிட்ட மேற்கோளின் சாரமாகும்." [4]

தனிமனித அறங்கள் சமுதாய அறங்களாக விரிவடையும் தன்மை மிக்கன. தனிமனிதர்களால் கடைப்பிடிக்கப்பட்டு ஒழுகப்படும் பல்வேறு அறங்கள் காலப்போக்கில் பலரால் கடைப்பிடிக்கப்படும் பொது அறங்களாகத் தோற்றம் பெற்று அது பண்பட்ட அறநிலையாக இடம் பெற்று விடுகிறது. பிற உயிர்க்குத் தீங்கு செய்யாத அறங்கள், நல்லனவற்றையே நினைக்கவும், பேசவும், செயல்படுத்தவும் உருவாகி வளர்ந்து நிற்கும் அறங்கள் எல்லாம் இம்முறையின் வாயிலாக உருவானவையே.

## குடும்பம்

மனிதச் சமுதாயத்தின் உயிர்நாடியான குடும்பம் என்னும் அமைப்பு மிகமிகப் பண்பட்டதாகும். மனிதர்கள் நாடோடி நிலையில் இருந்து நாகரிக வளர்ச்சிக்கு மாற வித்திட்டதே குடும்பமுறை அமைப்பு. ஆற்றங்கரைகளில் மனிதன் தங்கி வாழத் தலைப்பட்ட போது கூட்டுக் குடும்ப அமைப்பு தோற்றம் பெற்றது. இன்றைய நிலையில் பெரும்பான்மையான நிலையில் கூட்டுக் குடும்ப முறை கைவிடப்பட்டுத் 'தன் பிள்ளை, தன் பெண்டு, சோறு, வீடு' என்னும் நிலை உருவாகிவிட்டது. ஒருவருக்கொருவர் புரிந்து கொள்ளும் நிலையும், உதவும் மனப்பான்மையும், விட்டுக் கொடுக்கும் மனநிலையும் கூட்டுக் குடும்ப அமைப்பில் தோற்றம் பெற்றவை. கூட்டுக் குடும்ப அமைப்பை நாம் புறக்கணித்தாலும் அப்பாதையில் இன்னும் வாழும் பழங்குடியினர் மலைவாழ்மக்கள் ஆகியோர் இம்முறையை இன்னும் கடைப்பிடித்து வருகின்றனர்.உயரிய அறங்கள் எல்லாம் பிறக்கும் இடமாகக் குடும்பங்கள் திகழ்கின்றன.

கணவனும் மனைவியும் அறவழிநின்று நல்லறமாக நடத்தும் இல்லறத்தில் இருவருக்குமே இணையான பங்கு இருக்கிறது. அதனால் தான் *"வினை செய்து பொருளீட்டுவது ஆடவன் கடமை என்றும் வீட்டில் உள்ளோரைப் பேணுதல் பெண்களின் கடமை"* [5] என்றும் குறுந்தொகை வலியுறுத்தியது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைகளில் பாடப்பட்ட வாழ்க்கையை விவரித்துக் கூறும் பாக்கள் தலைவன் தலைவியின் உள்ளார்ந்த அன்பினை வெளிக்கொணர்பவை.

ஒரு பிறவியில் பெற்ற நல்ல கணவன் மறுபிறவியிலும் கணவனாகக் கிடைக்க வேண்டும் என நினைக்கும் தலைவியைக் குறுந்தொகையில் காணமுடிகிறது. அவள்,

*" இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீயா கியரென் கணவனை*
*யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே"* [6]

எனக் கூறுகிறாள். தலைவன் பொருள் தேடிப் பிரியும் காலத்தில் தான் தலைவன் தலைவி இருவரின் மனதிலும் காதல், அன்பான உணர்வுகள் மிகுகின்றன.எத்தனை பொருள் இருந்தாலும் கணவன் மனைவி இருவரும் சேர்ந்து வாழும் வாழ்வே இனியது.

*" மருவின் இனியவு முளவோ"* [7]

மனைவியோடு சேர்ந்து வாழும் நாட்கள் தான் வாழ்ந்த நாட்களாகக் கணக்கில் கொள்ளப்படும். தனித்து வாழ்தலின் என்ன இனிமை இருக்கிறது. அந்நாட்கள் எல்லாம் வாழாநாட்களாகும்.

*" எல்லாம் எவனோ பதடி வைகல்*
*அரிவைத் தோளிணைத் துஞ்சிக்*
*கழிந்த நாளிவண் வாழு நாளே"* [8]

இன்பங்கள் நுகர்ந்து வாழும் இனிய வாழ்வு ஒரு நாள் முடிந்து போகும். அன்பின் வயப்பட்ட தலைவியானவள் வாழ்க்கையின் இறுதி பற்றிச் சிந்திக்கிறாள். அப்போது அவளுக்குச் சிறப்பும் மறுபிறப்பும் பற்றிய சிந்தனை எழுகிறது.

*" சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவிற்*
*பிறப்புப்பிறி தாகுவது ஆயின்*
*மறக்குவேன் கொல்என் காதலன் எனவே "* [9]

என்னும் பாடலில் தலைவி, சாவதற்கு அஞ்சவில்லை. ஆனாலும் அஞ்சுகிறேன்.வேறு - மறுபிறப்பு உண்டென்றால் அப்பிறவியில் நான் என் காதலனை மறந்து விடுவேனோ என வருத்தம் கொள்கிறாள்.

தலைவன் பிரிந்திருக்கும் போது தலைவியை நினைக்கிறான். பொருள் தேடும் காலத்து உலக இன்பங்களிலேயே பேரின்பமாகிய காமநினைவு அவனுள் எழுகிறது. தலைவியை அடைந்ததும் அவ்வுணர்வு வற்றிப் போய் அன்பு மட்டுமே மனதுள் நிறைந்திருக்கிறது. இதனை,

*" உள்ளினென் அல்லனோ யானே உள்ளி*
*நினைத்தனென் அல்லனோ பெரிதே நினைத்து*
*மருண்டனென் அல்லனோ உலகத்துப் பண்பு"* [10]

என்னும் பாடலால் அறியலாம்.

வாழ்வில் எல்லா இன்பங்களும் கூடிவருதல் இல்லை. இரவுபகல், இன்பதுன்பம் போன்று வாழ்வும் பல்வேறு நிகழ்வுகளின் தொகுப்பே. இவ்வாழ்வில் இன்பம் கிடைக்கும். அவ்வின்பம் நீடிக்க, வறுமை இன்றி வாழப் பொருள் தேவை. பொருள் ஈட்டப் போகும் காலத்தில் தலைவியைப் பிரிந்திருக்க வேண்டும்.அக்காலத்தில் இல்லற இன்பமான புணர்தல் கிடைக்காது. இன்பமே மேல் என இல்லத்தில் இருந்தால் பொருள் கிட்டாது. இதனை,

*" புணரின் புணராது பொருளே : பொருள்வயிற்*
*பிரியின் புணராது புணர்வே "* [11]

என்கிறது நற்றிணைப் பாடலடிகள். தலைவன் பொருள் தேடச் செல்ல நினைத்தலும், நெஞ்சம் தடுத்தலும், தலைவனின் உள்ளக்குறிப்பை உணர்ந்த தோழி தலைவியிடம் கூறுவதும் , தலைவி தோழியை ஆற்றுவதும், தோழி தலைவியை ஆற்றுவதுமாகப் பாடல்கள் இடம் பெற்றிருக்கின்றன. தலைவன் நம்மைப் பிரிவான் என்னும் எண்ணம் ஏற்பட்ட போதும்,

*" புரையமன்ற, புரையோர் கேண்மை"* [12]

தலைவர் சான்றாண்மை மிக்கவர். அதனால் நம்மைப் பிரியமாட்டார் என்று கூறுகிறாள் தலைவி.

பிரிவுத் துன்பம் உடையது. பிரிந்திருக்கும் காலத்துத் துயரம் தருவது. சிறு பூ இடைப்பட்டாலும் "யாண்டு கழிந்தன" என வருந்தும் மகன்றில் பறவை போல மனம் துயர்படும். தலைவனும் தலைவியும் பிரிந்திருக்கும் காலத்து இருவரின் நிலையும் வேதனைக்குரியதே.

*" புலம்புகொண்டு உறையும் புண்கண் வாழ்க்கை"* [13]

சிறுபிரிவே ஆனாலும் புலம்பும்படியாக அமைகிறது பிரிவு வாழ்க்கை. பிரிவு பற்றிக் குறிப்பிடும் வள்ளுவர்,

*" செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்*
*வல்வரவு வாழ்வார்க்கு உரை."* [14]

தலைவனே, பிரியாத நிலை இருந்தால் சொல். அவ்வாறு பிரிந்து செல்வதாக இருந்தால் அதுவரை பிரிவைத் தாங்கிக் கொண்டு உயிர் வாழ்பவர்க்குச் சொல் எனத் தலைவியின் கூற்றாகக் கூறுகிறார்.

உறவு ஏற்பட்ட உடனேயே மனம் பிரியக்கூடாது என்பதைச் சிந்திக்கிறது நற்றிணை,

*" மணம்கமழ் கானல் இயைந்தநம் கேண்மை*
*ஒருநாள் பிரியினும் உய்வுஅரிது"* [15]

நறுமணம் வீசுகின்ற கடற்கரைச் சோலையின் கண்ணே காதலரோடு கொண்ட நட்பானது ஒருநாள் பிரிந்தாலும் தாங்கொணாத துயரம் தரும். வாழ்தலே அரிதானதாகும். பிரிந்து சென்ற தலைவன் நிறைந்த காம உணர்வுடன் திரும்பி

வராவிட்டாலும் அவனைக் காண்பதே மனதிற்கு இனிமையானதாகும் என்கிறாள் தலைவி,

*" துனிதீர் கூட்டமொடு துன்னார் ஆயினும்*
*இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல் "* [16]

தலைவனும் தலைவியும் இணைந்து வாழ்வதே இனிமையான வாழ்க்கை. இன்பத்தை நுகர்வதற்கு இளமைக் காலமே இனிமையான காலமாகும். கணவன் மனைவி உறவானது விட்டுக்கொடுத்தலில் இருக்கிறது. ஒருவரை ஒருவர் அடக்கியாள முயற்சிக்காமல் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்துவதில் தான் வெற்றி நிறைந்திருக்கிறது. குடும்பம் கோயில் போன்றது என்றால் அக்கோயிலில் உள்ள இருளை அகற்றி தெய்வீக நிலை ஏற்படுத்துவது விளக்கு. அதைப் போல இல்லம் சிறப்புப் பெறப் பெண்கள் முக்கியமாவர். இக்கருத்துகளை எல்லாம்

*"மெய்யுற விரும்பிய கைகவர் முயக்கினும்"* [17]
*" மனைக்குவிளக் காயினண் "* [18]
*" இனிதுடன் கழிக்கி னிளமை"* [19]
*" உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மை"* [20]

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

பொருள் தேடும் முயற்சி மிகவும் கடுமை உடையதாகும். நினைத்தபடிப் பொருளைக் கைக்கொள்வது என்பது எளிமையான காரியமன்று. இளமைக் காலமும் இனிய வாழ்வும் பொருளை விடச்

சிறந்தவை.பெருமை உடையவை. வாழ்விற்குப் பொருள் இன்றியமையாததுதான். அதற்காக வாழ்வை விடுத்துப் பொருள் தேடுதல் அறியாமை உடையதென மொழிகிறது இப்பாடல்,

*" சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது ;*
*ஒழிந்தவர் எல்லாரும் உண்ணாதும் செல்லார் ;*
*இளமையும், காமமும் ஓராங்குப் பெற்றார்*
*வளமை விழைதக்கது உண்டோ "* [21]

பொருள் எந்த அளவு வாழ்விற்கு அவசியம் எனச் சங்க இலக்கியங்கள் பகர்கின்றனவோ அதே அளவிற்கு இல்லற இனிமைக்கும் சமஅளவு முக்கியத்துவம் கொடுக்கின்றன. பல இடங்களில் இன்பத்தை உயர்த்திக் கூறுகின்றன.

*" ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்,*
*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"* [22]

கணவன் மனைவி சேர்ந்து நடத்தும் இல்லறத்தில் பொருளால் வறுமை ஏற்பட்டாலும் ஒரே ஆடையை இரண்டாகக் கிழித்து உடுத்துமளவு வறுமை ஏற்படினும் இணைந்து வாழும் வாழ்வை இனிதெனக் கூறுகிறது.

ஒருவனுக்கு ஒருத்தி என்னும் மரபு தமிழ்ச் சமூகத்தின் உயிர்நாடியாகும். சான்றோர்கள் தம் வாழ்க்கைக்காக அறம் வழுவிய செயல்களைச் செய்ய மாட்டார்கள். அது போலக் கடல் சூழ்ந்த இந்த உலகமே கிடைப்பதாயினும் முல்லை நில மகளிரான ஆயர்கள் இருமணம் செய்வதில்லை என்னும் உயரிய பண்பாட்டை



*" விரிநீர் உடுக்கை உலகம் பெறினும் ,*
*அருநெறி ஆயர் மகளிர்க்கு*
*இருமணம் கூடுதல் இல்இயல் பன்றே ? "* [23]

என்கிறது இப்பாடலடிகள்.

உலக இன்பங்கள் நிலையானவை அல்ல. உணர்வுகள் அனைவருக்கும் பொதுவானவை. உறவு உள்ள நிலையில் இன்பமும், பிரிவில் துன்பமும் இயல்பானவை. உலகின் நிலையான பல்வேறு நிகழ்வுகள் போன்று இவையும் நடைபெறும். இதனை,

*" மகளிர் தோள் சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்,*
*நீள்சுரம் போகியார் வல்லை வந்து அளித்தலும்,*
*ஊழ் செய்து, இரவும் பகலும்போல், வேறாகி,*
*வீழ்வார்கண் தோன்றும் ; தடுமாற்றம் ஞாலத்துள்*
*வாழ்வார்கட்கு எல்லாம் வரும் ; "* [24]

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

இல்வாழ்க்கை அறம் செய்யச் சிறந்தது. அறம் செய்வதனால் பெருமை வந்து சேரும். அதனால் தான் இலக்கியங்கள் வாழ்விற்குப் பொருள் இன்றியமையாதது என்கின்றன.

*" அறன்கடைப் படாஅ வாழ்க்கையு மென்றும்*
*பிறன்கடைச் செல்லாச் செல்வமும் இரண்டும்*
*பொருளின் ஆகும்"* [25]

பொருள் தேடுதலில் முயற்சி தேவை. பொருள் தேடுதலில் மனம் தளராத முயற்சிகள் தான் வெற்றியைத் தரும். பொருள் இல்லாது போனால் சுற்றத்தாரையும், நண்பர்களையும் போற்ற இயலாத சூழல் உருவாகும்.பொருள் சேர்த்துக் குடும்பத்தைத் தாங்குபவனை வள்ளுவர், குடும்பத்தைத் தாங்கும் தூண் போன்றவன் எனக் குறிப்பிடுகிறார். அந்நிலை முயற்சியால் வரும். எனவே முயற்சியின் பெருமையை உயர்த்திச் சோம்பி இருக்கக் கூடாது என அகநானூறு வலியுறுத்துகிறது. இதனை,

*" நட்டோர் இன்மையுங்கேளிர் துன்பமும்*
*ஒட்டா துறையுநர் பெருக்கமுங் காணூஉ*
*ஒருபதி வாழ்தல் ஆற்றுவ தில்லை"* [26]

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

குழந்தைகள் இல்லத்தைப் பெருமைப்படுத்துபவர்கள்.அந்நிலை அடைய வளர்ப்பு முறை சரியாக இருக்க வேண்டும். வளர்ப்பு முறை சரியின்றிப் போனால் துயரமே வந்து சேரும். நல்ல பிள்ளைகளைப் பெற்றவர்கள் பெருமை உடையவர்கள். புகழைப் பெற உரிமையானவர்களாவர். நல்குடிப் பிறந்து நல்வாழ்வு வாழ்வதே குடிமக்களின் சிறப்பாகும் என்கிறது அகநானூறு.

*" இம்மை யுலகத் திசையொடு விளங்கி*
*மறுமை யுலகமும் மறுவின் றெய்துப*
*செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்*

*பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்*
*வாயே யாகுதல் வாய்த்தனம்"* [27]

## வாழ்வியல்

வாழ்க்கை பலநிலைகளை உடையது. தலைவனும் தலைவியும் இணைந்து வாழ்வது மட்டுமே வாழ்க்கையன்று. அதற்கு மேலும் சமுதாயநிலை நோக்கி நகர்கையில் பல விளைவுகளை எதிர் கொள்ள வேண்டியிருக்கிறது. பலவற்றில் தேர்ச்சியும், பன்முகப் பார்வையும், ஆய்ந்தறியும் திறனும் வாழ்விற்கு அவசியம்.

*" அஞ்சுவது அஞ்சாமை பேதைமை"* [28]

என்பர் வள்ளுவர். அஞ்சுவதற்கு அஞ்சி வாழ வேண்டும். அஞ்சாமை பேதைமை என்றும் கூறுகிறார். அதற்கு முன்னோடியாகக் கலித்தொகை,

*" அஞ்சுவது அஞ்சா அறனிலி அல்லன், என்*
*நெஞ்சம் பிணிக்கொண் டவன் "* [29]

அஞ்ச வேண்டாததற்கு அஞ்சுவது துன்பம், அஞ்ச வேண்டுவனவற்றிற்கு அஞ்சாமையும் அறிவற்ற செயல் என்கிறது.

வாழ்க்கை இன்பதுன்பம் நிறைந்தது. நிலவு தேய்ந்து வளரும் இயற்கை நிலை போன்றது இன்பமும் துன்பமும். நிலவு தேய்ந்து வளர்வதை எவ்வாறு தவிர்க்க இயலாதோ அதே போல தான் இன்பமும் துன்பமும் தவிர்க்க இயலாதன.

*" திங்கள் அரவுறின், தீர்க்கலா ராயினும்,*
*தங்காதல் காட்டுவர் சான்றவர்"* [30]

ஒரு மனிதனின் குறைந்த அளவுத் தேவை உண்பதற்கு உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் தாம். பிற எல்லாம் நம் நாகரிக மோகத்தால் நம்மைப் பற்றிக் கொண்டவை. போதும் என நினைத்ததால் தான் பல சான்றோர்கள் எளிமையான வாழ்க்கையை வாழ்ந்து முடித்தார்கள். அது கருதியே ஔவையார்,

*" உண்பது நாழி உடுப்பவை இரண்டே "* [31]

மனிதனாகப் பிறப்பெடுத்தவர்கள் மனவள வளர்ச்சியில் கவனம் செலுத்த வேண்டும். வாழ்வதில் வரன்முறை தேவை. வாழ்க்கை இப்படித்தான் இருக்க வேண்டும் என்னும் எண்ணம் உடையவராக இருத்தல் வேண்டும். மனிதரில் சிறந்தவராக உருவாகிப் பிறர் நம்மைப் பின்பற்றும்படி எடுத்துக்காட்டாகத் திகழ வேண்டும். பிறர் நமக்கு உவமையாகக் கூடாது என்கிறது புறநானூறு. இதனை,

*" பிறர்க்கு உவமம் தான்அல்லது*
*தனக்கு உவமம் பிறர்இல் என"* [32]

என்று குறிப்பிடுகிறது.

*" வாழ்தல் வேண்டும்இவண் வரைந்த வைகல்*
*வாழச் செய்த நல்வினை அல்லது*
*ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை "* [33]

என்னும் பாடலடிகளில் தான் மட்டும் வாழ்தல் இனிமையானதன்று; தன்னைச் சார்ந்தவரையும் உயர்த்தி வாழச் செய்ய வேண்டும் என்னும் சிந்தனையை விதைக்கிறது. தன்னலமின்றிப் பொதுநலம் பேணலே நல்வினை எனக் குறிப்பிடுகிறது.

(இப்புவியில் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒரு கடமை இருக்கிறது. அக்கடமையை ஒவ்வொருவரும் சரிவரச் செய்யும் போது தான் சமுதாயம் உயரிய நிலையை அடைகிறது. குழந்தையைப் பெற்றெடுப்பது தாயின் கடமை. அவனுக்குக் கல்வி அறிவு தந்து அறிவுடையவனாக ஆக்குதல் தந்தையின் கடமை. குடிமகனுக்கு நல்ல ஒழுக்கத்தைக் கற்பித்தல் அரசனின் கடமை. போர் புரியப் படைக்கலன்கள் உருவாக்கிக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடன். இளமை வாய்ந்த இளைஞனின் கடமை என்னவெனின் பரந்த போர்க்களத்தில் யானையைக் கொன்று போரில் வெற்றி பெறுதல் என்கிறது இப்பாடல்.

*" ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே*
*சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே*
*வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடனே*
*நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே*
*ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்*
*களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே "* [34]

என்பதாகும்.)

தீயசெயல்கள் செய்தல் கூடாது என்பதைப் பண்டைய சமுதாயம் சிறந்த அறமாகப் பின்பற்றியது.

*" நல்லதுசெய்தல் ஆற்றீர் ஆயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின் "* [35]

என்கிறது ஒரு புறப்பாடல்.நல்லது செய்யாவிட்டாலும் தீமை செய்யாமல் இருப்பதே சிறந்த அறமாகும்.

குடும்ப வாழ்வில் கணவன் மனைவி இருவரும் முக்கிய பங்கு பெறுபவர்கள். ஆயினும் ஒருவர் இன்றி மற்றவருக்குச் சிறப்பில்லை. அதனால் கணவன் குடும்பத்தின் ஒளிவிளக்காகக் கூறப்பட்டான்.

*" மனைக்கு விளக்காகிய வாள்நுதல் கணவன் "* [36]

கணவன் பொருள் திரட்டிப் பிறருக்கும் கொடுத்து வாழும் இனிய வாழ்வைச் சிறப்பிக்கும் தலைவனை,

" தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன் " [37]

தனக்கென வாழாமல் பிறர்க்கெனவே வாழ்பவன் என அகநானூறு சிறப்பிக்கிறது.

அக்கால மக்கள் பொய் பேசாத அறவாழ்க்கை வாழ்ந்தமையை நாழிகைக் கணக்கர் வழியாக அறிய முடிகிறது. இதனை

*" பொழுது அளந்தறியும் பொய்யா மாக்கள் "* [38]

என்னும் பாடலடியால் அறியலாம்.

## விருந்தோம்பல்

பண்டைக்கால மக்களால் பெருமளவில் போற்றி வளர்க்கப்பட்ட பண்பாட்டு முறைகளுள் விருந்தோம்பலும் ஒன்று. தமிழ் இலக்கியங்கள் பலவும் விருந்தின் சிறப்பைப் பரவலாகப் பேசுவதைக் காணலாம்.பசித்துன்பத்தின் கொடுமையை மணிமேகலை எடுத்துக் கூறுகிறது. உண்டி கொடுத்தோரை உயிர் கொடுத்தோர் எனச் சிறப்பிக்கிறது.

*" இருந்துஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்துஓம்பி*
*வேளாண்மை செய்தற் பொருட்டு "* [39]

பொருள்களைப் பாதுகாத்து இல்வாழ்க்கை நடத்துவது விருந்தினரைப் போற்றி உபசரிப்பதேயாகும் என்கிறது குறள்.

கோவலனைப் பிரிந்த காலத்து விருந்தோம்புதலைச் செய்ய முடியாததை நினைத்து கண்ணகி வருந்தியதைப் பின்வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

*" அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும்,*
*துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின் "* [40]

சீதை அசோகவனத்தில் இருந்த போது இராமன்

*" விருந்து கண்டபோ(து) என்உறு மோ "[41]*

என்று கலங்கியதாகக் கூறப்பட்டுள்ளது.

பசியோடு இல்லம் நாடி வந்தவர்களுக்கு வயிறார உணவு கொடுத்துத் தங்குவதற்கு இடமும் தந்து போற்றினர் சங்க காலத்தவர். இரவில் விருந்தினர் வந்தாலும் முகம் கோணாமல் விருந்தோம்பிய தலைவியின் திறத்தை,

*" அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்*
*முல்லை சான்ற கற்பின்*
*மெல்லியல் "[42]*

எனச் சிறப்பிக்கிறது நற்றிணை. வீட்டுக்கு வரும் விருந்தினரை உபசரிப்பதில் விருப்பமோடு இருக்கும் உள்ளத்தை

*" நல்மனை நனிவிருந்து அயரும்*
*கைதூ இன்மையின் எய்தாம் மாறே "[43]*

என்ற பாடலடிகள் வெளிக்காட்டுகின்றன.

உயிர் சாவாமைக்குக் காரணமாகிய அமுதமே கிடைத்தாலும் அதைச் சான்றோர்கள் தாம் மட்டுமே தனித்து உண்ணமாட்டார்கள் என,

*" உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்*
*அமிழ்தம் இயைவ தாயினும் இனிது எனத்*
*தமியர் உண்டலும் இலரே "* [44]

புறநானூறு மொழிகிறது. பொருள் இல்லையென்றால் விருந்தினரை உபசரிக்க இயலாது. பொருள் இல்லாமல் துயர்படும் தலைவன்

*" விருந்துகண்டு ஒளிக்கும் திருந்தா வாழ்க்கை"* [45]

என்று விருந்தினரை உபசரிக்க முடியாத நிலையைக் கடிந்து கொள்கிறான்.

பண்டைக்காலத்தில் விருந்தினரை உபசரித்தல் சிறப்பாக நடைபெற்றமையைப் பறைசாற்றும் மற்றோர் இலக்கியம் பட்டினப்பாலை.

*" புகழ் நிலைஇய மொழிவளர*
*அறன் நிலைஇய அகன் அட்டில்*
*சோறு வாக்கிய கொழுங் கஞ்சி*
*யாறு போலப் பரந்து ஒழுகி"* [46]

இவ்வடிகளில் காவிரிப்பூம்பட்டினத்தில் அட்டில் சாலைகள் அமைந்திருந்த செய்தி அறியக்கிடக்கிறது. சோறுவடித்த கஞ்சி ஆறு போல ஓடியதாக இவ்விலக்கியம் குறிப்பிடுகிறது.

**ஈகை**

தமது பொருளைப் பிறருக்கும் பகிர்ந்து கொடுத்தல், வறுமையால் வாடி வந்தவர்க்குத் தனது பொருள்களை ஈதல் என வாழ்வியல் அறங்கள் பல இருக்கின்றன. அரசனிடம் சென்று பொருள் பெற்று வந்த சங்கப் புலவர் ஒருவர் அறம் செய்ய என் அனுமதி அவசியம் இல்லை. நாடி வந்த வறியவர்களுக்கு பொருளை வழங்கு எனத் தன் மனைவிக்கு அறிவுரை கூறுகிறார்.செல்வம் பெற்றதன் பயன் ஈதல் தான்.பழுத்த மரத்தை நாடிப் பறவைகள் செல்வது போலும் வறியவருக்கு ஈயும் குணமில்லாதவன் பொருள் இருந்தும் இல்லாதவனாகிறான்.

*" ஈதல் இசைபட வாழ்தல் அதுஅல்லது*
*ஊதியம் இல்லை உயிர்க்கு "* [47]

வறியவர்க்கு ஈதலும், அதனால் உண்டாகும் புகழால் வாழ்வதும் மனிதவாழ்விற்கு இன்றியமையாதது எனக் குறள் மொழிகிறது. குறளுக்கு முன்னரே( நற்றிணை, புகழோடு வாழ்பவரின் செல்வம் அனைவருக்கும் பயன்பட்டு நிற்குமாற்றை,

*" இசைபட வாழ்பவர் செல்வம் போல "* [48]

என்று குறிப்பிடுகிறது. பிறருடைய துன்பத்தை நீக்கி வேண்டியதைக் கொடுத்து வாழ்வதே இனிய வாழ்வு. தலைவன் எப்போதும் முயற்சி உடையவனாதலால் நாடி வரும் அனைவருக்கும் உதவும் குணம் உடையவன். அதனால் இல்லை என்று சொல்லும் நிலையை அறியாதவன். அவனது மனம் பிறருக்கு உதவுவதையே குறிக்கோளாகக் கொண்டு எப்போதும் செயல்படுமாற்றை,

*" இரந்தோர் மாற்றல் ஆற்றா*
*இல்லின் வாழ்க்கை "* [49]

*" பிறர்க்குஎன முயலும் பேர்அருள் "* [50]

என்னும் பாடலடிகளால் அறியமுடிகிறது.

சரியான காலத்தில் ஒருவர் செய்யும் உதவி மிகவும் பெரியது. இதனை,

*" காலத்தி னால்செய்த நன்றி சிறிதுஎனினும்*
*ஞாலத்தின் மாணப் பெரிது "* [51]

எனக் குறள் கூறுகிறது.

*" பெருநன் றாற்றிற் பேணாரும் உளரே "* [52]

என்னும் குறுந்தொகைப் பாடலடி பெரிய உதவி செய்தால் அவரை யாவரும் விரும்புவர் எனக் குறிப்பிடுகிறது. ஈகை செய்யும் மனப்பான்மை அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் மனதில் வேரோடிக் காணப்பட்டது. ஈதல் இல்லா நாட்களும் இரவலர்கள் இல்லம் தேடி வராத நாட்களும் பயனற்றவை எனக் கருதப்பட்டன.

*" இரவலர் வாரா வைகல்*
*பலவாகுக "* [53]

அறத்தால் புகழ் பெற விரும்புபவர்கள் பொருளைச் சேமித்து வைத்து அழகு பார்க்க மாட்டார்கள். பிறருக்கு உதவுவதிலேயே கவனம் கொள்வர்.

*" நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்*
*கடப்பாட் டாள னுடைப் பொருள் போலத்*
*தங்குதற் குரிய தன்று"* [54]

எப்போதும் ஈகை நன்மை தரும். ஈயாமல் இருப்பது நற்செயல் அன்று. வறியவருக்கு ஈந்து அன்புடையவராக வாழ்தல் நலம் தரும்.

*" நல்கின் வாழும் நல்கூர்ந் தோர்வயின்*
*நயனில ராகுதல் நன்று"* [55]

நாட்டை வாழ்த்தும் போதும், மன்னரை வாழ்த்தும் போதும் ஈகை போற்றப்பட்டது. நாட்டின் வளத்தோடு ஈகையும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. விளைபொருள் நிறைய விளைய வேண்டும். பொருள் பெற்று மகிழ இரவலர் வர வேண்டும் என விழையும் மக்களின் அற நெஞ்சத்தின் உணர்வை அறியமுடிகிறது.

*" விளைக வயலே வருக விரவலர்"* [56]

செல்வம் பெற்றவர்கள் அச்செல்வத்தைத் தனது எனக் கருதாமல் செல்வ நிலையாமையை உணரவேண்டும். அந்நிலையாமையை உணர்ந்து பிறருக்கு வழங்குவதில் மகிழ்வு கொள்ள வேண்டும். தன் சுற்றத்தார் வறுமையுடன்

வாடி இருக்கத் தான் மட்டும் மகிழ்ந்திருப்பது தவறான செயலாகும். ஈதல் என்னும் பண்பு மனித மனதை மேலே உயர்நிலைக்கு உயர்த்தும். ஈகை புரியாமல் வாழ்தலை விட இறப்பதே மேலானதாகும்.

*" .....ஈதல் இரந்தார்க்கு ஒன்று, ஆற்றாது வாழ்தலின்,*
*சாதலும் கூடுமாம் மற்று"* [57]

கொடுக்கக் கொடுக்கச் செல்வம் வளரும். கர்ணணைக் கூறும் போது வலது கை கொடுப்பதை இடது கை அறியாதவன் என அவனது வள்ளன்மைச் சிறப்பைக் குறிப்பிடுவர். தன் சுற்றம் வாடத் தான் மட்டும் செல்வம் பெற்று மகிழ்ச்சியாக வாழ்வதினால் எந்தச் சிறப்பும் இல்லை. அச்செல்வம் பொலிவற்ற செல்வமேயாகும்.

*" கிளை அழிய வாழ்பவன் ஆக்கம்போல் புல்லென்று*
*வளையானா நெகிழ்போடும் தோள் "* [58]

யாருக்காக நன்மை செய்யும் பொருட்டுப் பொருள் தேடிச் சென்றவர்கள் அறம் சான்ற மனமுடையவராகக் கருதப்பட்டனர். அறம் செய்வதற்காக அவர்கள் ஈட்டச் சென்ற பொருள் உயிரைவிடச் சிறந்ததாகப் போற்றப்படுகிறது.

*" உயிரினுஞ் சிறந்த வொண்பொரு டருமார்*
*நன்றுபுரி காட்சியர் சென்றனர் "* [59]

பிறருக்குக் கொடுப்பதன் மூலம் மகிழ்வடையும் மனம் இல்லாதவர்கள் வறுமையாளர்களாகக் கருதப்பட்டனர்.

*" தந்நயந் துறைவோர்த் தாங்கித் தாநயந்*
*தின்னமர் கேளிரோ டேமுறக் கெழீஇ*
*நகுத லாற்றார் நலகூர்ந் தோரென "* [60]

செல்வம் பெறுதலே ஈவதற்காகத்தான். அதனால் ஈகையைப் போற்ற வேண்டும். ஒரு பொருளைக் கொடு எனப் பிறரிடம் இரந்து நிற்பது இழிவான செயலாகும். ஈயாமல் இருப்பது அதைவிட இழிவானது.

*" செல்வத்துப் பயனே ஈதல்"* [61]

*" ஈயென இரத்தல் இழிந்தன்று அதன்எதிர்*
*ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று"* [62]

செல்வம் பெற்றால் மட்டும் போதாது. அதனை நேரிய வழியில் பயன்படுத்திப் பிறருக்கும் கொடுத்து வாழ்வதே வாழ்வின் பயனாக இருந்திருக்கின்றது.

## நட்பு

மனிதமனம் விரிவடையத் துணை நிற்பது நட்பு. சங்ககாலம் முதல் இன்றுவரை உயிர்களுக்குப் பொதுவான குணங்களுள் ஒன்று இது. உயர்திணையாயினும் அஃறிணையாயினும் எவ்வுயிரும் தனித்து இயங்குவதில் அமைதியோ இனிமையோ பெறுவது கிடையாது.நாம் காணும் எவ்வுயிராயினும் தனக்கென ஒரு குழுவைப் பெற்றிருக்கும். பறவைகள் சேர்ந்து கூட்டமாகப் பறக்கின்றன. மனிதர்கள் ஒருவருக்கொருவர் நட்புக் கொண்டு எண்ணங்களைப் பகிர்ந்து கொள்கின்றனர். காட்டில் ஓரின

விலங்குகள் தங்களுக்குள் நேசம் கொள்கின்றன. நட்பைப் பற்றி வள்ளுவர் நட்பு என்னும் அதிகாரத்தில் விரிவாகப் பேசுவார். உண்மையான நண்பன் என்பவன் துன்பத்திலும் நம்மைவிட்டு நீங்கிப் போகாதவன்.எனவே நல்ல நண்பனை அறிய, நட்பை அளவிட நமக்கு வந்த துன்பமே அளவுகோலாகும் என்பார்.

*" கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை*
*நீட்டி அளப்பதோர் கோல் "* [63]

நண்பர் நல்ல கண்ணோட்டம் உடையவராக இருத்தல் நலம்.அப்படிப்பட்ட நண்பரும் விடத்தைக் கொடுத்து உண்ணச் சொன்னால் உயிரைப் பறிக்கும் என்பதை அறிந்தும் உண்ணுபவரே உண்மையான நண்பர் என்கிறது நற்றிணை.

*" முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்*
*நஞ்சும் உண்பர் நனிநா கரிகர் "* [64]

உயரிய குணமுடைய சான்றோர்கள் பன்முறை ஆராய்ந்த பின்னரே நட்புக் கொள்வர். நட்பில் கண்ணோட்டமும் ஆய்ந்தறியும் திறனும் அவசியம். நட்புக் கொண்ட பின்னர் அவர்களது குறையை எண்ணி வருந்துவது பொருத்தமற்ற செயலாகும். அதனால் வள்ளுவர் சொன்னது போல் எதையும் எண்ணித் துணிய வேண்டும்.

*" பெரியோர்*
*நாடி நட்பின் அல்லது*
*நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே "* [65]

நட்பு, பொருளாலோ, கைம்மாறு செய்தலாலோ தோன்றுவது கிடையாது. அது மனதின் விருப்பத்தால் தோன்றுவதாகும்.

*" தசைபெரி துடையர் நல்கலு நல்குவர் "* [66]

சான்றோரின் நட்பு நீண்டகாலம் நீடித்து நிற்கும் தன்மை உடையதாகும். அந்நட்பு காலத்தால் பழமை உடையதாக இருப்பதால் ஒருவரது குணத்தை இயல்பாக அளந்தறியும் குணம் இயல்பாகவே வாய்த்துவிடும். அத்தகைய நட்பினைப் பகைவர்கள் கூடப் போற்றுவர்.

*" செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை "* [67]

நட்பில் உண்மை - பொய்மை பெறும் இடம் அதிகம். வெற்றி தோல்விகளால் வரும் படிப்பினைகள் சிலநேரங்களில் நட்பினை உறுதி செய்யும் அளவுகோலாக ஆவது உண்டு. கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் கொண்ட நட்பு காலத்தால் பழமையானது. மனதால் பண்பட்டது.அத்தகைய புரிந்துணரும் தன்மை எல்லா நட்பிலும் வாய்க்கும் என்று சொல்ல இயலாது. கூற்றுவனைக் கூட வெல்பவன் நண்பரிடம் தோற்கிறான் என்கிறது கலித்தொகை.

*" கூற்றம் வரினும் தொலையான், தன் நட்டார்க்குத்*
*தோற்றலை நாணாதோன் "* [68]

தக்க சமயத்தில் உதவுதல், நண்பனுக்குத் துயரம் வந்தவழி உதவுதல், உயிரைக் கொடுக்கும் சூழ்நிலைவரினும் அதையும் செய்தல் ஆகியவவை மிகச் சிறந்த நட்பினுடைய இலக்கணம் எனலாம்.

*" உலந்துழி உலக்கும் நெஞ்சறி துணையே"* [69]

மிகச் சிறந்த வீரனாக இருப்பவன் தன் பகைவர்களுக்கு நெருங்கமுடியாத தொலைவில் இருப்பவனாவான். அதே நேரம் அவனை நண்பன் என்ற நிலையில் பார்க்கும் போது மிகவும் அண்மையில் இருப்பவனாவான். நட்பு உள்ளத்தை மிருதுவாக்கி அன்பை ஊற்றெடுக்கச் செய்யும்.

*" துப்புஎதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்*
*நட்புஎதிர்ந் தோர்க்கே அங்கை நன்மையன் "* [70]

சான்றோர்கள் பழிக்கு அஞ்சும் இயல்பு உடையவர்கள். தனக்குப் புகழ் தரும் செயல்கள் எனில் உயிரையும் கொடுக்கத் துணிவர்.அதே நேரம் பழி வரும் செயல்களை உலகையே பெறுவதாக இருந்தாலும் செய்யாத இயல்புடையவர்கள். பொய்மை கலந்த நட்பு என்றுமே துன்பம் தரக்கூடியது. பெரிய பேறுகள் கிடைக்கப் பெறுவதாயினும் அது தீமையே. மனம் நிறைந்த உண்மையான நட்பு மனித வாழ்விற்குத் தேவையான ஒன்றாகும்.

*" உயர் நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்,*
*பொய்சேண் நீங்கிய வாய் நட்பினையே "* [71]

## பொருள் சிறப்பு

மக்கள் வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. வாழ்வில் வரும் இடர்ப்பாடுகளைக் களையக் கூடிய சக்தி பொருளுக்கே உண்டு.' அறிவை ' அற்றம் காக்கும் கருவி என்பர்.துன்பத்தை நீக்குவதற்கு அறிவு மட்டும் போதாது. பொருளும் தேவை. இல்லறம் நடத்துவதற்கு அறம்,

பொருள் இரண்டும் தேவை. அறம் நிரம்பிய செயல்கள் மட்டும் செய்தால் போதாது. பொருளையும் ஈட்டுதல் இன்றியமையாதது. சங்ககாலம் ஈகைக் குணம் நிறைந்தது. ஈகைக் குணத்தைச் செயல்படுத்துவதற்குப் பொருள் அவசியம். அப்பொருளை ஈட்ட முயற்சி மிகமிக அவசியம். தலைவன் பொருள் தேடச் செல்லும் இடத்து அவனது போக்கைத் தடுக்கும் முகமாகத் தலைவி சொல்லும் சொற்கள் பலவும் பொருளின் இயல்பைக் குறைத்துக் கூறித் தலைவனின் பிரிவை உயர்த்திக் கூறும் போதெல்லாம் பானையில் கசியும் நீராய்ப் பொருளின் சிறப்பு வெளிப்படுகிறது.

உலகில் கிடைக்கும் பொருள்கள் அனைத்துமே ஒவ்வொரு வகையில் சிறப்புடையது. ஒரு பொருளை விடச் சிறந்த மற்றொரு பொருள் இருக்கவே செய்கிறது. பொருள் தேடப் பிரிவதாகக் கூறும் தலைவனிடம் தலைவி,

*" இனிதின் இனிது தலைப்படுதும்"* [72]

என்று கூறுகிறாள்.நீ தேடிச் செல்லும் பொருளைவிடச் சிறந்த பொருள் கிடைக்கும். இளமைக் காலத்தில் தலைவியின்மாட்டுக் கிடைக்கும் பொருள் அவை எல்லாவற்றையும் விடச் சிறந்தது எனும் நிலையை இங்குக் காணமுடிகிறது. சிறந்த செல்வம் என்பது வசதியாக வாழ்வதும், சத்தான உணவுகளை உண்பதும், நாகரிகமாக இருத்தலும், இனிமையாகப் பேசுதலும்,உயர்ந்த வாகனங்களில் பயணம் செய்வதும் அன்று.

உண்மையான சிறந்த செல்வம் என்பது தன்னைச் சார்ந்து அடைக்கலமாக வந்தவரின் துன்பத்தை நீக்குவதே என நற்றிணை மொழிகிறது.

*" நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்*
*செல்வம் அன்று தன்செய்வினைப் பயனே*
*சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்*
*புன்கண் அஞ்சும் பண்பின்*
*மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே "* [73]

வசதிவாய்ப்புகள் ஊழ்வினைப் பயனால் தொடர்பவை.செல்வம் நிலையற்ற தன்மை உடையது. அதனால் மற்றோரை ஈகையால் மகிழ்வித்தல் அவசியம் என்பதை இப்பாடலடிகள் வலியுறுத்துகின்றன.

செல்வத்தினுடைய தன்மை பிறருடைய துன்பத்தைத் தீர்ப்பதாக அமைய வேண்டும். வள்ளுவர் இதனை,

*" பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்*
*பொருள்அல்லது இல்லை பொருள் "* [74]

ஒரு பொருளாக மதிக்கத்தகாதவரையும் பொருளாக மதிக்கச் செய்வது பொருள். அவ்வாறு மதிக்கச் செய்யும் பொருளும் பிறருக்குப் பயன்படவேண்டும் என்ற வலிமையான கருத்தைச் சங்க இலக்கியங்கள் முன்வைக்கின்றன.

*" இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்*
*அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர் வின்மென "* [75]

இம்மைக்கும் மறுமைக்கும் பயன்தருவது செல்வம்.செல்வம் இருந்தால்தான் ஈகைக் குணத்தைச் செயல்படுத்த முடியும். இம்மூன்றும் நடைபெறச் சோம்பி

இருத்தல் கூடாது. சோம்பல் உள்ளோர்க்கு மேற்கண்ட செயல்கள் கைகூடி வருதல் இயல்பில்லை. அதே போலப் பொருட்களால் இன்பத்தை அனுபவிப்பதும், பிறருக்குக் கொடுக்க நினைப்பதும் பொருள் இல்லாதவரால் செய்ய முடியாதவை. பற்றுள்ளமாக இருக்க முடியுமே தவிர நிறைவேற்றிக் கொள்வதில் இடர்கள் ஏற்படும். அதனாலே,

*" ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில் "* [76]

என்கிறது குறுந்தொகை. இன்பத்தை விரும்புவதனால் அது நம்மை அடையும் வழிகளை ஆராயவேண்டும். அவ்வின்பத்தைப் பெறப் பொருள் அவசியமாகும். எனவே பொருள் இல்லாத வறுமையாளன் இன்பத்தை விரும்ப முடியாது என்கிறது குறுந்தொகை. இதனை,

*" இல்லோன் இன்பங் காமுற் றாஅங்கு "* [77]

என்னும் பாடலடியால் அறியலாம்.

செல்வம் பெற்றதன் பயன் ஈதல் தான். உழைத்துப் பெற்ற பொருளைப் பிறருக்குக் கொடுத்து உதவும் போது இன்பம் இருமடங்காகிறது. தன்னுடைய முன்னோர் சேர்த்து வைத்த செல்வம் ஊழினால் கிடைத்ததாயினும் எந்த முயற்சியும் இல்லாமல் அப்பொருளைக் கொண்டு வாழ்தல் சிறப்புடையதன்று. தன்னுடைய முயற்சி இன்றிப் பிறர் பொருளில் வாழும் வாழ்க்கை இரந்து வாழ்தலை விட இழிவானதாகும்.

*" உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்*
*இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு"* [78]

குந்தித் தின்றால் குன்றும் மாளும் என்னும் பழமொழியும் இக்கருத்திற்கு அரண் செய்யும். ஈகைக் குணமின்றி, உழைக்கும் திறனின்றிக் கொஞ்சம் கொஞ்சமாக அழியும் செல்வத்தின் இறுதியில் இரத்தல் நிகழும் என்பதை உட்கருத்தாகக் கொண்டு விளங்குகிறது இப்பாடல்/ ஈகைக் குணம் இல்லாதவனிடம் சேர்கின்ற செல்வம் பயனற்றது. /கருமியிடம் கிடைத்த செல்வம் யாருக்கும் பயன்படாது. இந்நிலையை ' நாய் பெற்ற தெங்கம் பழம்'[79] என்று பழமொழி குறிப்பிடும். அச்செல்வம் அவனுக்கும் பயன்படாது. பிறருக்கும் பயன்படாது. அதனால் கருமியைச் சிறுமைக் குணம் கொண்டவனாகக் குறிப்பிடுகிறது. இதனை,

*" சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழல் இன்றி "* [80]

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது. பொருளின் தன்மை அளவற்ற வலிமை உடையதாகும். " பணம் பத்தும் செய்யும் ", பணம் பாதாளம் வரை பாயும்" என்னும் முதுமொழிகள் இதனை உணர்த்தும்.

*" அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்,*
*பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்,*
*பிரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தரும் "* [81]

அறம் செய்வதற்குப் பொருள் அவசியம். உயர்ந்த அறத்தைப் பொருள் அடையச் செய்யும். அருள் நிரம்பிய மனத்தால் பிறருக்கு அளிக்கச் செய்யும். தன் பகைவர்களை வீழ்த்தும் இயல்புடையது. அப்பொருளால் இன்பம் நிறைந்த வளமான வாழ்க்கை கிடைக்கும். )

செல்வத்திற்கு மக்களின் தன்மை தெரியாது. அதற்கு மக்களின் தன்மை கருதிச் சேரும் குணம் கிடையாது. நல்வினை ஆற்றும் அருள் நெஞ்சினோரையே பொருள் சென்றடையும் எனக் குறிப்பிடுகிறது கலித்தொகை. இதனை,

*" கிழவர் இன்னோர் என்னாது, பொருள்தான்,*
*பழவினை மருங்கின் , பெயர்புபெயர்பு உறையும் "* [82]

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

நல்வழியில் ஈட்டப்படக்கூடிய பொருள் இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் தரக்கூடியதாகும்.தீயவழியில் ஈட்டப்படும் பொருள் இப்பிறவிக்கு மட்டும் அல்லாமல் மறுபிறவிக்கும் நீங்காத துயரத்தைத் தரக்கூடியது. இதனை,

*" செம்மையின் இகந்துஒரீஇப் பொருள் செய்வார்க்கு, அப்பொருள்*
*இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ ? "* [83]

என்கிறது கலித்தொகை.

வாய்மை எனப்படும் உண்மைத் தன்மை மனிதனை உயர்த்தும் தன்மையது. பெற்ற பொருளைக் குறித்த காலத்தில் திருப்பித் தருதலால் பிறரிடம் அவரைப் பற்றிய நல்லெண்ணம் உயரும். ஆனால் உறவானாலும் நட்பானாலும் வாய்மை தவறும் போது உறவில் விரிசல் ஏற்படுதல் தவிர்க்க இயலாது. பொருள் பெற்ற போது மகிழ்தலும், திரும்பக் கொடுக்கும் போது முகவேறுபாடு கொள்வதும் நன்மையாகாதெனக் கலித்தொகை,

*" உண்கடன் வழிமொழிந்த இரக்குங்கால் முகனும், தாம்*
*கொண்டது கொடுக்குங்கால் முகனும், வேறு ஆகுதல்*
*பண்டும்இவ் வுலகத்து இயற்கை "* [84]

என்று குறிப்பிடுகின்றது.

பிறருடைய துன்பத்தைப் போக்கும் அருள் உள்ளம் கொண்டவர் ஆயினும் அவரிடம் பொருள் இல்லாமல் போனால் அவ்வருள் உணர்வால் எந்தப் பயனும் விளைவது கிடையாது.எனவே துன்பம் நீக்கும் முயற்சிக்கும் அருள் மனத்தைச் செயல்பட வைக்கும் முயற்சிக்கும் பொருள் தேடுதல் முதன்மையாகின்றது.

*" இருள்படு நெஞ்சத் திடும்பை தீர்க்கு*
*மருணன் குடைய ராயினும் ஈதல்*
*பொருளில் லோர்க்கஃ தியையா தாகுதல்*
*யானு மறிவேன் "* [85]

இல்லோர் எனக் கூறுவது பொருள் இல்லோரை அன்று. தானாக முயன்று சேர்க்காத செல்வத்தைக் கொண்டு வாழ்வோரையே இல்லோர் எனக் கூறுவர். இத்தன்மையுடையவரைப் பகைவர் கூடப் பழிப்பர் என

*" உள்ளாங் குவ த்தல் செல்லார் கறுத்தோ*
*ரெள்ள னெஞ்சத் தேச்சொ னானி "* [86]

என்று அகநானூறு பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

பொருளே வாழ்க்கையை உறுதி செய்கிறது. எனவே அறவாழ்வில் பொருளைப் பெறுதலும், ஈகை செய்தலும், இன்பமாக வாழ்தலும் தலையாய கடமைகள் எனச் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன.

## வினைசெயல்வகை

எண்ணிய செயலை முடித்தல் என்பது மானிடரின் தலையாய கடமை. எடுத்துக் கொண்ட செயலில் இடையீடின்றி மனத்தைச் செலுத்தினால் தான் அச்செயல் வெற்றி பெறும்.இல்லையெனில் செயல் நிறைவேறாது போகும்.பழியும் வந்து சேரும். அதனால் தான் வள்ளுவர்

*" இதனை இதனால் இவன்முடிக்கும் என்றுஆய்ந்து*
*அதனை அவன் கண்விடல் "* [87]

என்று கூறுவார். நன்மை விளையும் செயல் ஒன்றைத் தொடங்கி முயன்று முடிக்கும் போது தான் பெருமை வந்து சேரும்.

*" செய்வினை முடியாது எவ்வம் செய்தல்*
*எய்யா மையோடு இளிவு தலைத்தரும் "* [88]

செயல் முடியாமையோடு முயற்சியின்மை இழிவையும் தரும். வள்ளுவரும் இதனை,

*" வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை*
*தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு "* [89]

தன் கடமையைச் சரியாகச் செய்யாதவரை இவ்வுலகமானது கைவிட்டு விடும். அதனால் செய்தொழிலில்- வினையில் முயற்சியுடன் இருக்க வேண்டும் எனக்

குறிப்பிடுவார். வாழ்வில் இன்பம் முயற்சியினால் வருவதாகும்.

*" இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்*
*அசையுநர் இருந்தோர்க்கு அரும்புணர் வின்மென "* [90]

*" வினையே நினைந்த உள்ளம் "* [91]

*" அழிவில முயலும் ஆர்வ மாக்கள் "* [92]

என்னும் பகுதிகளில் இம்மைக்குரிய இன்பமும், மறுமைக்குரிய இன்பமும் சோம்பி இருந்தோர்க்கு இல்லை. எடுத்த செயலை நிறைவேற்றுவதற்குத் தளர்ச்சியில்லாச் சிந்தனை உடைய ஒருமைப்பட்ட மனம் தேவை. வினையை இடையீடின்றிச் செய்யும் பெருமை,ஆர்வத்தில் தான் அடங்கி இருக்கின்றது. கொடை வழங்கலும், ஈதல் என்னும் உயரிய பண்புகள் எல்லாம் முயற்சியின் வழிப்பட்டவைதாம். முயற்சி இன்றேல் எச்செயலும் கைகூடிவராது. ஒருவருக்கு உதவி செய்ய வேண்டும் என்னும் உயரிய எண்ணம் மனதில் தோன்றும் போது அதைச் செயல்படுத்த முயற்சி தேவை. முயற்சி இன்றி உதவி செய்ய முற்படல் ஆண்தன்மை குறைந்த ஒருவன் போர்க்களத்தில் சண்டையிடுவதற்கு ஒப்பாகும் என்பார் வள்ளுவர் . மேலும் தன் கையில் பொருளை வைத்துக் கொண்டு ஒரு செயலில் இறங்குதல் குன்றின் மேல் இருந்து பயமின்றி யானைப்போர் காண்பதற்கு ஒப்பாகும் என்றும் கூறுவார். எனவே பிறருக்கு வழங்கலுக்கும், தளராத மனதிற்கும் வினை அவசியம். இதனை,

*" தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை*
*வாளாண்மை போலக் கெடும் "* [93]

*" குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று*
*உண்டாகச் செய்வான் வினை "* [94]

என்னும் குறட்பாக்களால் அறியலாம்.

ஆண்மக்கட்கு வினை செய்தல் தான் முதற் கடமை. சோம்பி இருப்பதனால் எத்தகைய வரவும் நிகழ்வதில்லை. பொருள்தேடும் முயற்சி சங்க இலக்கியங்களில் பரவலாகப் பேசப்படுவதாகும். அப்பொருளின் பயன்பாடுகளும் நிறையவே பேசப்படுகின்றன. ஆடவர்க்கு உயிர் கடமையைச் செய்தல் என்றும், பெண்களின் கடமை இல்லறம் போற்றல் என்பதையும் குறுந்தொகை,

*" வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்*
*மனையுறை மகளிர்க் காடவர் உயிர் "* [95]

என்னும் பாடலடிகளால் உணர்த்துகிறது.

நன்றாகச் சீர்தூக்கி ஆராய்ந்து ஈடுபட்ட செயல்களில் சிலநேரங்களில் பிழைகள் ஏற்படுதல் உண்டு. அந்நிலையில் மனம் தளராது நன்மை தீமைகளை ஆராய்ந்து முடிவெடுக்க வேண்டும்.அவ்வாறு முடிவெடுக்கும் போது பொருத்தமில்லாக் கூறுகளை விலக்கி நீர் விடுத்துப் பாலை மட்டும் உண்ணும் அன்னப்பறவை போல நற்செயல்களை எடுத்துக் கொண்டு அதை வெற்றியடையச் செய்ய முயலவேண்டும். இதனையே நற்றிணை,

*" பேணா ராயினும் பெரியோர் நெஞ்சத்துக்*

*கண்ணிய ஆண்மை கடவ தன்றென "* [96]

எனக் குறிப்பிடுகின்றது.

*"உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் "* [97]

என்பார் வள்ளுவர் . நினைப்பதெல்லாம் உயர்ந்ததாக நினைக்க வேண்டும். அப்போது தான் அதில் நாம் இயன்ற வரை ஈடுபட்டு வெற்றியடைய முடியும். மேற்கொண்ட செயல்கள் அனைத்துமே வெற்றியைப் பெற்றுத் தரும் என்று சொல்லிவிட முடியாது. ஏனெனில் செயலைச் செய்ய எடுத்துக் கொண்ட காலம், செயல்பாடுகள் எல்லாம் ஒன்றையொன்று சார்ந்து இயங்குவன. யானை வேட்டைக்குச் செல்பவர்கள் முயல்கள் ஏதேனும் கொணர்வதுண்டு. காடை, கௌதாரி என எண்ணம் கொண்டு செல்பவர்கள் வெறும் கையோடு திரும்புவதும் உண்டு. அதனால் பொருள் தேடும் முயற்சியில் தோல்வியும் உண்டு என்பது பெறப்படும். இதனை,

*"அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே "* [98]

என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

செய்யவேண்டிய பணிகளைக் குறித்த காலத்தில் நிறைவேற்றுதல் தான் அறம் நிறைந்த செயலாகும். தன்னுடைய கடமைகளைச் சரிவரச் செய்பவர் எப்போதும் புகழுக்கு உரியவராகிறார். வலிமையான அலைகளையும் அடக்கியாளக் கற்றுக் கடலுக்குப் போகும் மீனவன் நிறைந்த மீனோடு திரும்பி வருதல் போல வினையைத் திறம்பட நிர்வகிப்பவன் வெற்றியாளனாகிறான்.

*" அறந்தலைப் பிரியா தொழுகலுஞ் சிறந்த*
*கேளிர் கேடுபல வூன்றலு நாளும்*
*வருந்தா வுள்ளமொ டிருந்தோர்க் கில்லெனச்*
*செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதன் "* [99]

என்னும் அகநானூற்றுப் பாடலடிகள் இக்கருத்துக்கு அரண் செய்யும் நோக்கில் அமைந்துள்ளன. கடமையைச் சரிவரச் செய்பவர்களுக்கே புகழும், இன்பமும், வள்ளண்மையும் வாய்க்குமெனக் குறிப்பிடுகின்றது.

தனிமனிதனாக வாழும் நிலையில் அவனது தேவைக்கேற்ப ஒருவன் முயலுகிறான். அவனே குடும்பத்தோடும் சுற்றத்தோடும் வாழ்கின்ற போது தனது தேவைகளையும் தன்னைச் சார்ந்தோரின் தேவைகளையும் நிறைவேற்ற அதிகமான முயற்சி எடுக்க வேண்டியவனாகிறான். அவ்வாறு எடுக்கும் முயற்சியே அவனுக்குப் பெருமையினையும் வெற்றியினையும் தேடித்தரும். இதனையே அகநானூறு,

*" கேள்கே டூன்றவும் கிளைஞ ராரவுங்*
*கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவு*
*மாள்வினைக் கெதிரிய வூக்கம் "* [100]

என்று குறிப்பிடுகின்றது. எடுத்துக் கொண்ட செயல் இடையீடுபட்டு எண்ணியவாறு முடியாது போதல் ஒருவகையாக இருப்பினும் எண்ணிய செயலை எண்ணியவாறே முடித்தலும் வினையாண்மை என்கிறது புறநானூறு. இதனை,

*" முருகுஓத் தீயே முன்னியது முடித்தலின் "* [101]

என்று குறிப்பிடுகின்றது.

ஒரு பொருளை விட ஒரு பொருள் சிறந்தது. ஒரு பொருளை விட ஒரு பொருள் பெரியது.எனவே கிடைத்ததோடு நின்று விடாமல் மேலும் மேலும் சிறந்த பொருளுக்காக முயற்சி செய்தல் வேண்டும் என்கிறது புறநானூறு. இதனை,

*" புலிபார்த்து ஒற்றிய களியற்றுஇரை பிழைப்பின்*
*எலிபார்த்து ஒற்றாது ஆகும் "* [102]

என்று குறிப்பிடுகின்றது. எனவே பொருள் தேடும் முயற்சிக்கும், சுற்றம் தழுவும் குணத்திற்கும் இடையூறுபடாத மனம் தேவை என்பது பெறப்படும்.

## வாய்மை

வாய்மை எனப்படுவது தீமை இல்லாத சொற்களைப் பேசுதலாகும். உண்மைத்தன்மை மனிதப் பண்பை உயர்த்திக்காட்டும் இயல்புடையது. சொற்களைத் தேர்த்தெடுத்துப் பேசும் முறைக்கு வள்ளுவர் காயையும் கனியையும் உவமையாக

*" இனிய உளவாக இன்னாத கூறல்*
*கனியிருப்பக் காய்கவர்ந் தற்று "* [103]

என்னும் குறளில் குறிப்பிடுவார். பேசுவதற்கு இனிமையான சொற்கள் இருக்க அதை விட்டு விட்டுக் கடுமையான சொற்களை ஏன் பேசவேண்டும் என்னும் நோக்கில் இனிய சொற்களுக்குக் கனியையும், கடுமையான சொற்களுக்குக் காயையும் உவமையாகக் கூறுவார். ஒருவன் பேசும் சொற்கள் அவனது

மனநிலையை, ஆழ்மனத் தன்மைகளைத் தெளிவாக வெளிக்காட்டும் தன்மை உடையவை. எப்போதும் பிறருக்குத் தீமையைக் கொடுக்கும் பொருட்டுப் பொய் பேசி மறைந்து வாழ்பவன் ஒருநாள் தன் நாவினாலேயே துன்பப்பட நேரிடும் என்பதை

*"நுணலும்தன் வாயால் கெடும் "* [104]

பழமொழி இலக்கியம் மூலமாக உணர்த்துகிறது.

ஒவ்வொருவரும் செய்யும் தவறுகள் புறத்தே தெரியாத போதும் மனம் அதற்குச் சாட்சியாக நிற்கும். ஒவ்வொருவரும் தன் மனசாட்சிக்குப் பயந்து நடந்தால் பெருமளவில் தவறுகள் குறையும்.தன் உள்ளத்திற்குப் பொய்யாக நடக்காமலும் பிறருக்குக் கொடுத்த வாக்கில் மாறாமல் இருப்பதும் வாய்மை என,

*" பழையன் வேல்வாய்த்து அன்னநின்*
*பிழையா நன்மொழி "* [105]

என்னும் நற்றிணைப் பாடலடிகள் உணர்த்துகின்றன. கள்ள மனம் படைத்தவர்கள் இயல்பாகவே ஒரு செய்தியை மாற்றிக் கூறுவதும் , நன்கு அறிந்த செய்தியைத் திரித்தும் மறைத்தும் கூறும் இயல்புடையவர்கள். ஆனால் சான்றோர்கள் நன்மை பயக்கும் செயல்களையே சிந்திப்பவர்கள். மனசாட்சிக்கு மாறுபடாமல் வாழ்பவர்கள். அதனாலே

*" அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை "* [106]

என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

தவறு செய்தலைவிடத் தவற்றுக்குத் துணை போவதையும், பொய்சாட்சி சொல்வதையும் இலக்கியங்கள் பெரிதும் கண்டிக்கின்றன. பொய்சாட்சி சொன்னவன் நிழலுக்கு ஒதுங்கிய மரமும் பட்டுப் போகும் எனக் கலித்தொகை குறிப்பிடுகின்றது. இதனை,

*" கரிபொய்த்தான் கீழ்இருந்த மரம்போல "* [107]

என்னும் பாடலடியால் உணரலாம். வறுமையால் வாடித் தன் மனைவியோடு பசியும் பட்டினியுமாகச் செல்லும் புலவர் ஒருவர் ஒரேயொரு பொய்யைச் சொன்னால் அவருக்கு வேண்டியன கிடைக்கும் என்னும் நிலையிலும் தன்னுடைய நலம் பாராமல்,

*" வாழ்தல் வேண்டிப்*
*பொய்கூறேன் மெய்கூறுவல் "* [108]

என்று கூறுகிறார் சங்கப்புலவர் ஒருவர். இதிலிருந்து அவர் உண்மைக்கு எத்தனை முக்கியத்துவம் கொடுத்திருப்பார் என்பது புலனாகும்.

திருவள்ளுவர் வாய்மை என்பதை தீமை இல்லாத சொல்லைச் சொல்வதாகும் என்பார். இதனை,

*" வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்*
*தீமை இலாத சொலல் "* [109]

என்பார்.

## நிலையாமை

மண்ணில் தோன்றிய உயிர்கள் அனைத்தும் ஒருநாள் அழிந்தாக வேண்டியது படைப்பின் சூட்சுமம். ஒவ்வோர் உயிரும் வாழ்வதற்கான காலம் சில வரையறைக்குள் அடங்குகிறது. அந்நிலை உயிர்களின் இயக்க நிலையிலும், சமூக நிலையிலும் பல்வேறு மாற்றங்களைத் தந்து கொண்டு இருக்கிறது. உயிர்களின் பிறப்பும் இறப்பும், பொருள்களின் நிலைமாற்றமும், தன்மை மாற்றமும் தொடர்ந்து நிகழ்பவை. சுருங்கக்கூறின் இந்த உலகம் நிலையாமை என்னும் தத்துவத்தைத் தொடர்ந்து செயல்படுத்திக் கொண்டே இருக்கிறது. நாம் காணும் பொருட்கள் எல்லாம் காலந்தோறும் தங்களின் நிலையை இழந்தவண்ணம் உள்ளன. கருவில் இருந்து குழந்தையாக வளர்ந்து, இளைஞனாகி, முதியவனாகித் தளர்ந்து மனிதன் இறக்கிறான். செடிமுளைத்து, வளர்ந்து, கிளைத்து, வானோங்கி வளர்ந்து ஒருநாள் அடியற்று வீழ்ந்து மண்ணோடு மண்ணாக மக்கிப் போகிறது. தேடும் செல்வம் வயது, இளமை, பொன் இவையெல்லாம் நிலையின்றிக் கைமாறி, அழிந்து போகிறது. இன்றிருப்பது நாளை இல்லை. இன்றுள்ள தன் நிலை நாளை இருப்பதில்லை என்னும் சித்தாந்தத்தில் தெளிவாகப் பயணிக்கிறது நிலையாமை.பொருள் நிலையாமையை, வாழ்க்கை நிலையாமையைச் சங்க இலக்கியங்கள் தெளிவாகப் பறைசாற்றுகின்றன. இன்றிருப்பார் நாளை இல்லை என்னும் சித்தாந்தம் சங்க இலக்கியத்தில் வெளிப்படையான பொருளாக அறியக் கிடக்கின்றன.

*" முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்*
*வாழ்நாள் வகைஅளவு அறிஞரும் இல்லை "* [110]

என்னும் பாடலடிகள் வயதில் முதிர்ந்தவர்கள் இளமையை மீண்டும் பெறுவதில்லை. வாழும் நாட்கள் இவ்வளவு தான் என அறுதியிட்டு

அறிந்தவர்களும் இல்லை எனக் குறிப்பிடுகிறது.

நிழல் நிலையாமையை வெளிப்படுத்துகிறது. அதற்குச் சங்கப் புலவர் ஒருவர் எய்யப்பட்ட அம்பின் நிழலை உவமையாக்குகிறார். வில்லில் இருந்து விடுபட்ட அம்பின் நிழல் எவ்வாறு தான் செல்கின்ற பாதையில் அழியுமோ அதைப் போல இளமைக் காலமும் இன்பமும் அழியும் எனக் குறிப்பிடுகிறார். இதனை,

*" இளமையும் காமமும் நின்பாணி நில்லா "* [111]

*" வைகல் தோறும் இன்பமும் இளமையும்*
*எய்கணை நிழலின் கழியுமிவ் வுலகம் "* [112]

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

தலைவன் பொருள்தேடச் செல்லும் நிலையில் அவனைத் தடுக்கும் தோழியும் தலைவியும் பொருளின் நிலையாமையையும், இளமை நிலையாமையையும் ஒருசேர வலியுறுத்துகின்றனர்.

*" இளமையின் சிறந்த வளமையு மில்லை "* [113]

என்னும் பாடலடிகளில் பொருளைவிட இளமையே சிறந்த செல்வம் என்னும் கருத்து வலியுறுத்தப்படுகிறது. உலகில் உள்ள எல்லாம் மாற்றத்திற்கு உரியன என்னும் கருத்து,

*" நில்லா மையே நிலையிற்று "* [114]

என்னும் பாடலடியால் அறியக்கிடக்கின்றது.

மண்ணில் வாழும் எவரும் தங்களுடைய வாழ்நாள் இவ்வளவுநாள் தான் என்பதை அறிய முடிவதில்லை. ஒவ்வொரு நாளும் இளமை கழிந்து கொண்டிருக்கிறது.இயலாமை அதிகமாகி முதுமை வந்து சேர்கிறது.

*" கடைநாள் இதுவென்று அறிந்தாரும் இல்லை "* [115]

*" நாளினும் நெகிழ்பு ஓடும் நலன் உடன் நிலையுமோ?*
*கூற்றூழ்போற் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ?*
*முகைவாய்த்த தடம் போலும் இளமையும் நிலையுமோ ? "* [116]

என்னும் பாடலடிகள் இளமை வாழ்க்கையின் நிலையாமையை வலியுறுத்துகின்றன. ஆற்றுநீர் ஓடிக் கழிவது போல இளமைக் காலமும் கழியும். ஆற்றுநீர் நிலையின்றி ஓடுவது போல இளமையும் கழியும் இயல்பு உடையது. இதனை,

*" ஆறுநீர் கழிந்தன்ன இளமை "* [117]

என்னும் பாடலடி உணர்த்துகிறது.

கனவில் தோன்றிய நிகழ்வுகள் நினைவில் நிற்பதில்லை. அதைப் போல வாழ்க்கையும் நிலையானதன்று.

*" கனவுக் கழிந்தனைய வாகி நனவி*
*னாளது செலவு மூப்பினது வரவும் "* [118]

என்னும் பாடலடிகள் கனவில் தோன்றி மறையும் தன்மையனவாக இளமை கழிந்து முதுமை சேரும் என்பதை வலியுறுத்துகின்றன.

திருவிழா நடந்த நாளில் ஆரவாரமுடன் இருக்கும். அவ்விடம் திருவிழா முடிந்த மறுநாள் பொலிவற்றுத் தோன்றுதல் இயற்கை. வாழ்க்கையும் விழாக்கோலம் கொண்டது தான். இன்று இளமையும் வளமையும் இருக்கின்ற வாழ்க்கை நாளை மாற்றம் அடையலாம்.

*" கோடியர் நீர்மை போல முறைமுறை*
*ஆடுநர் கழியும்இவ் உலகம் "* [119]

என்று புறநானூறு திருவிழா நிகழ்வின் வாயிலாக நிலையாமையை எடுத்துக் கூறுகிறது.

மண்ணில் பிறந்த அனைவரும் பிறப்பில் வேறுபாடு காண்பதும், குலத்தில் வேறுபாடு காண்பதும் இயற்கை. அவர்களுக்குள் இருக்கும் ஒருமைப்பாடான கூறுகள் சிலவே. அவற்றுள் முக்கியமான ஒன்று இறப்பாகும். இறத்தல் அனைவருக்கும் பொதுவானது. மதத்தால்,இனத்தால், மொழியால்,செய்தொழிலால், இன்னபிற வகையால் மாறுபட்டிருந்த போதும் அனைவரும் ஒன்று படுவது இறப்பில்தான் என்கிறது புறப்பாடல். இதனை,

*" மன்உயிர்ப் பான்மையும் கூற்றத்து ஒருமையும்*
*நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய "* [120]

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

வெற்றி தோல்வி என்பது நிலையாமையின் பாற்பட்டது.வெற்றியும் தோல்வியும் ஒருவரிடம் நிலையாக நில்லாதவை. இன்று தோற்றவர் நாளை வெல்லலாம். இன்று வென்றவர் நாளை தோற்கலாம். இது உலக இயற்கை. இது புதுமையானதன்று என்கிறது புறநானூறு.

*" ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்*
*புதுவது அன்றுஇவ் உலகத்து இயற்கை "* [121]

இறப்பின் பின் வீடுபேறு என்பது முக்கியம் உடையதாகக் கருதப்படுகிறது. இயற்கையாகவே ஒருவன் செய்யும் நன்மை தீமையைக் கொண்டு அவன் சுவர்க்கம் புகுவானா அல்லது நரகம் புகுவானா எனச் சொல்லுதல் மரபு. மனிதன் தான் வாழ்நாளில் பிறருக்கு நன்மை செய்து இறவாப் புகழடையும் போது தான் சுவர்க்க நிலையை அடையமுடியும் என்கிறது புறநானூறு. இதனை,

*" இவண்இசை உடையோர்க்கு அல்லது அவணது*
*உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை "* [122]

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

உடலோடு ஒன்றிப் பிறந்த உயிர் என்றாவது உடலை விட்டு நீங்கும் என்பது உண்மையான ஒன்று. விலகிப் போக வேண்டிய நாளில் அது விலகிப் போகும். அதுவே உண்மை. இதில் மயக்கம் ஏற்படுவது அறியாமை. அதனால் அறியாமையை நீக்கி நிலையாமை உண்டென்பதை உணர வேண்டும் என்பதை,

*" உடம்பொடு நின்ற உயிரும் இல்லை*
*மடங்கல் உண்மை மாயமோ அன்றே "* [123]

என்னும் பாடலடிகளால் உணரலாம்.

வானத்தில் வலம் வரும் நிலவு இவ்வுலகில் நிலைபெற்றிருக்கும் நிலையாமை என்னும் இயற்கையை உணர்த்திக் கொண்டிருக்கிறது. முழுநிலவாக இருந்து தேய்ந்து மறைந்து வளர்பிறையாகி வளர்ந்து முழுமையடைகின்றது. இவ்வுலகம் நிலையாமை உடையது என்பதை வானில் இருந்து உணர்த்தி நிற்கிறது. இதனை,

*" தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்*
*மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்*
*அறியா தோரையும் அறியக் காட்டித்*
*திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து "* [124]

என்னும் பாடலடிகள் காலந்தோறும் நிலைத்து நிற்கும் நிலவின் வாயிலாக நிலையாமையை எளிமையாக உணர்த்தி நிற்கின்றன.

மனிதன் தான் தேடும் பொருட்கள் நிலையற்றவை என்ற கருத்தைப் பொருள் நிலையாமை பற்றிய பாடல்கள் எடுத்துக் கூறுகின்றன. பல்வேறு முயற்சிகளால் தேடப்படும் பொருள் நிலையில்லாதது எனத் தெரிந்தும் அதன் மேல் ஏன் ஈடுபாடு கொள்ள வேண்டும் என வினாக்கள் கேட்பதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

*" வாடாப் பூவின் பொய்கை நாப்பண்*

*ஓடுமீன் வழியின் கெடுவ "* [125]

நீர் நிலையற்று ஓடிக் கொண்டிருப்பதைப் போல, நீரில் ஓடும் மீனைப் போலப் பொருள் நிலையின்றி ஒருவர் கை மாறி ஒருவருக்குச் செல்லும் இயல்புடைத்து எனக் கூறுகிறது இப்பாடல்.

நிலையில்லாமல் கைவிட்டுக் கைமாறும் பொருளே நோய் என நற்றிணை என்னும் பாடலடி குறிப்பிடுகிறது.

*" நில்லாப் பொருட்பிணி "* [126]

தலைவியை விட்டுப் பொருள் கருதிப் பிரிய நினைக்கும் தலைவனைத் தலைவி,

*" ....நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ "* [127]

என்கிறாள். செல்வம் ஒருவரை வந்து சேர்கின்ற போது அவரைப் பெருமைக்கு உரியவராக்கும். அதே பொருள் அவரை விட்டு நீங்கும் போது பெருமையினையும், புகழினையும் சேர்த்துக்கொண்டு சென்று விடும் இயல்பை உடையது. இக்கருத்தை,

*" மரீஇத் தாம் கொண்டாரைக் கொண்டக்கால் போலாது*

*பிரியுங்கால் பிறர் எள்ளப் பீடின்றிப் புறமாறும்*

*திரு "* [128]

என்னும் கலித்தொகைப் பாடலடிகள் வலியுறுத்துகின்றன.

வாழ்விற்குத் தேவை பொருள். ஆனால் பொருள் மட்டுமே வாழ்க்கையாகிவிடாது. அதனால் பொருள் நிலையாமையைக் கருத்தில் கொண்டு பொருளின் மேல் உள்ள பற்றுகளை நீக்க வேண்டும் எனச் சங்க இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

## சான்றோர் இயல்பு

நன்கு கல்வி அறிவு பெற்ற சான்றோர்கள் நல்ல செயல்களை மனதால் உணர்ந்து கடமையாற்றும் திறன் கொண்டவர்கள். தாம் மேற்கொண்ட செயல்களில் கருத்துடையவர்கள். சிறியவர்களின் செயல்களுக்குத் தக்க அறிவுரை கூறித் தவறுகளைச் சுட்டிக் காட்டி நல்வழிப்படுத்தும் குணம் உடையவர்கள். தங்களின் முன்னோர்கள் சென்ற நெறிப்படி கொள்கைப் பிடிப்புடன் நல்வழியைப் பின்பற்றி வாழ்பவர்கள். அதனால் தான் நற்றிணை,

*" ஆன்றோர் செல்நெறி வாழாஅச்*
*சான்றோன் "* [129]

எனச் சிறப்பித்துக் கூறியது.

சிலர் தவறு செய்த போது உடனே அவர்களைத் தண்டிக்கும் குணம் உடையவராக இருப்பர். அக்குணம் தண்டித்தபோது பயனுடைத்தாகுமே தவிரப் பயன் ஒன்றும் விளையாது. ஆனால் சான்றோர்கள் தவறு செய்தவர் தானாக உணர்ந்து திருந்தும் வரை பொறுத்திருப்பர். இதனை,

*" தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்*
*தாமறிந்து உணர்க என்ப "* [130]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

பெரியோர் பல குணங்களில் உயர்ந்தோராக இருப்பர். ஒப்புரவு அறிதல், பழியஞ்சுதல், நல்ல நட்புக் கொள்ளல், சூழ்நிலைக்கு இணங்கிப் போதல் என்பவை எல்லாம் பெரியோர் இயல்புகளில் சில. இக்குணங்கள் சான்றோரை அவர்களின் நிலையில் இருந்து உயர்த்திக்காட்டும் தன்மையன. அதனால் தான் நற்றிணை,

*" நயனும் நண்பும் நாணும்நன்கு உடைமையும்*
*பயனும் பண்பும் பாடு அறிந்து ஒழுகலும் "* [131]

எனக் குறிப்பிட்டது. உயர்ந்த நெறியில் செல்வது சான்றோரின் இயல்பு. பழிவரத்தக்க செயல்களுக்கு அஞ்சி நன்மை விளைவிக்கும் செயல்களை மட்டும் விரும்பிச் செய்யும் இயல்புடைய அவர்களைக் குறுந்தொகை,

*" திறவோர் செய்வினை அறவ தாகும் "* [132]

என்கிறது. சான்றோர் அறநெறியிலேயே செல்வர் எனக் குறிப்பிடுகிறது.

சான்றோர்கள் தங்களைப் புகழ்கின்ற போது நாணம் கொள்வர். அதன் காரணம் புகழை விரும்பாததே ஆகும். உயர் கல்வியும் இயற்கையாக உண்டான பணிவும் அவர்களை மேலும் உயர்வுடையவர்களாக ஆக்குகின்றன.

*" ............ சான்றோர்*
*புகழு முன்னர் நாணுப*
*பழியாங் கொல்பவோ "* [133]

என்னும் குறுந்தொகைப் பாடலடிகள் புகழ்தலால் சான்றோர் நாணுவர். ஆனால் பழியைப் பெற மாட்டார்கள் எனக் குறிப்பிடுகிறது.

தான் செய்யும் வேலையில் கண்ணும் கருத்துமாக இருப்பது கடமை. அவற்றிலெல்லாம் சான்றோர்கள் சிறந்து விளங்குவார்கள். தாம் மேற்கொண்ட செயலில் சிறந்து விளங்குபவர்கள் கடமையில் வல்ல சான்றோரைக் கண்டால் முதலிடம் கொடுப்பர். இதனை,

*" தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட*
*கடனறி மாக்கள் போல இடன்விட்டு "* [134]

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

இன்பத்தின் மேல் அனைவருக்கும் உள்ள நாட்டம் இயல்பானதாகும். அவ்வின்பம் நேர்மையான வழியில் வருவதாயின் நன்று. ஆனால் அது தீய வழியில் வருவதாக இருப்பின் துயரத்தில் முடியும். எனவே அவ்வின்பம் விரும்பத்தக்கது அன்று.

*" கழியாக் காதல ராயினுஞ் சான்றோர்*
*பழியொடு வருஉம் இன்பம் வெஃகார் "* [135]

இப்பாடலடிகள் சான்றோர்கள் பழிவரத்தக்க செயல்களில் இன்பத்தை எதிர் நோக்கமாட்டார்கள் என்னும் கருத்தை வலியுறுத்திக் கூறுகின்றன.

தனது இன்பத்தை மட்டும் உயர்வாக நினைக்காமல் பிறரின் இன்பத்தையும் உயர்வாக நினைக்கும் இயல்பு உடையவர்கள் சான்றோர்கள். சான்றோர்கள் பிறருக்கு வந்த துன்பத்தைத் தமது துன்பமாகக் கருதுவர்.

*" பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி, அறன்அறிதல்*
*சான்றவர்க்கு எல்லாம் கடன் "* [136]

ந்தொகைப் பாடலடிகள் சான்றோர்கள் பிறருக்கு வந்த ரிந்து கொள்ளும் தன்மையினையும், அதனைத் தீர்க்கும் எடுத்து மொழிகின்றன.

ர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பூதங்களை ாறை விட்டு ஒன்று இயங்க முடியாத இயல்புடையன. ...ளை உலக இயல்பாகக் கூறி வாழ்க்கையும் இன்ப துன்பங்களை அடிப்படையாகக் கொண்டவை என்கிறது. இதனை,

*" தீயும் வளியும் விசும்புபயந் தாங்கு "*
*நோயும் இன்பமும் ஆகின்று "* [137]

என்னும் பாடலடிகளால் அறியலாம். தத்துவங்கள் அனுபவங்களின் வாயிலாகவும், படிப்பினைகள் வாயிலாகவும் பெறப்படுவதால் உயர்ந்த பொருளைத் தருவதாக அமைந்திருக்கின்றன. தத்துவங்கள், மனித வாழ்வின் பல்வேறு கோலங்களையும், கோணங்களையும் விவரிப்பதால் வாழ்வியல் நடைமுறைகளின் தன்மையை அறியலாம்.

## மருத்துவம்

மருத்துவனின் இயல்பு பற்றிக் குறிப்பிடும் போது வள்ளுவர்,

*" நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல் "* [138]

நோயின் காரணத்தை நாடி அதன் வீரியத்தை உணர்ந்து மருந்து கொடுப்பது மருத்துவனின் கடமை எனக் குறிப்பிடுவார். வள்ளுவருக்கு முன்பே நற்றிணைப் புலவர்,

*" அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாது*
*மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல "* [139]

என்னும் அடிகளில் தீர்த்தற்கு அரிய நோய் அடைந்தவருக்குத் தான் விரும்பிய மருந்தைக் கொடுக்காமல் நோயின் தன்மையை ஆராய்ந்து தகுந்த மருந்தைக் கொடுப்பவனே சிறந்த மருத்துவன் எனக் குறிப்பிட்டுள்ளார்.

## வீரம்

சங்ககால மக்களால் காதல் வீரம் இரண்டும் இரு கண்களெனப் போற்றப்பட்டன. சங்ககாலப் பெண்கள் காளையை அடக்க முடியாமல் அஞ்சுபவனை மணம்புரிந்து கொள்ள மாட்டார்கள் என்பதைக்

*" கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்*
*புல்லாளே, ஆயமகள் "* [140]

என்னும் பாடலடியால் விளக்குகிறார் புலவர். இப்பிறப்பு மட்டுமன்றி மறுபிறப்பிலும் அவனை மணக்க மாட்டார்கள் என உறுதியாகச் சொல்கிறார்.

## விதி

கடலால் சூழப்பட்ட இவ்வுலகில் மக்கள் வாழ்க்கை குறிப்பிட்ட சில நியதிக்குள் அடங்குகிறது. நாம் செய்யும் வினைகளுக்கேற்பவே நன்மை தீமைகள் நிகழ்கின்றன.

*" நன்றுசெய் மருங்கிற் றீதில் லென்னும்*
*தொன்றுபடு பழமொழி "* [141]

என்னும் அகப்பாடலடிகள் தன்மை செய்தால் நன்மை விளையும் என்றும் தீமை செய்தால் தீமை விளையும் என்றும், தொன்று தொட்டு நிகழ்ந்து வருவது என்றும் குறிப்பிடுகின்றது. எனவே நமது கருமங்களே நம் இன்பத்தையும் துன்பத்தையும் நிர்ணயம் செய்கின்றன. வாழ்வின் போக்கானது ஊழ்வினை வழிப்படும் எனக் கணியன் பூங்குன்றனார் குறிப்பிடுவார். சமுதாயம் என்பது வாழ்க்கையைப் பற்றிய கொள்கைகளும் கோட்பாடுகளும் நிறைந்தது . எவ்வழிச் சென்றால் என்ன பயன் விளையும் என்பதை எல்லாம் இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன.ஆனால் கணியன் பூங்குன்றனார்,

*" நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர்*
*முறைவழிப்படூஉம் "* [142]

என்னும் பாடலடிகளால் வாழ்வானது ஊழ்வினை வழியாகச் செல்லுமெனக் குறிப்பிடுகிறார். கடுமையான மழைபெய்து காட்டாற்றில் வெள்ளம் பெருக்கெடுக்கையில் நீர் தனது போக்கில் செல்லும். அதில் விடப்பட்ட தெப்பமும் முறையற்று நீரின் வழிச் செல்லும். அது போல வாழ்வும் விதி வழியாகவே நிர்ணயிக்கப்படும் என்பதைத் தெளிவாகத் தம் பாடலின் மூலம் விளக்குகிறார்.

## நன்றி

*" நன்றி மறப்பது நன்றுஅன்று நன்றுஅல்லது*
*அன்றே மறப்பது நன்று"* [143]

என்று வள்ளுவர் நன்றிமறவாமையின் சிறப்பைக் குறிப்பிடுகிறார்.

*" நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்*
*பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉம்*
*நயனின் மாக்கள் "* [144]

என்னும் பாடலடிகள் செல்வம் நிறைந்து இருந்த போது ஒன்றாகச் சேர்ந்திருந்து இன்பத்தைத் துய்த்து, செல்வம் இல்லாக் காலத்து விலகிப் போனவர்களை நன்றி மறந்தவர்கள் எனக் குறிப்பிடுகிறது. சரியான காலத்தில் செய்த உதவியும், நன்மை செய்தவர்கள் துயரப்படுகையில் துயரம் களையாமல் இருப்பதுவும் சரியான செயலன்று. அது நன்றி மறந்த செயலாகும் என்பதையும் இப்பாடலடிகள் எடுத்துக் கூறுகின்றன. நன்றி மனித உயிர்களிடம் இருக்க வேண்டிய சிறப்பான பண்புகளுள் ஒன்று. சரியான காலத்தில் ஒருவர் செய்த செயலை மனத்தில் நினைத்து அவரைப் போற்றிக் காலம் தோறும் நினைப்பவர் சிறந்த நன்றியுடையவராகப் போற்றப்படுவார். அத்தகைய குணமின்றி நன்றியை மறக்கும் இயல்பு உடையோரைப் பிறர் வெறுத்து ஒதுக்குவர். அவர்களுக்கு முன்பு உதவி செய்தோரிடம் இருந்தும், உடன் இருப்போரிடம் இருந்தும் ஆதரவு என்பது கிடைக்காத சூழ்நிலை உருவாகும்.

## நல்லியல்பு

மனிதனின் சிறந்த வாழ்வுக்கு நற்பண்புகள் இன்றியமையாதன. மனிதனின் நல்லியல்புகள் போற்றிக் காக்க வேண்டியவை. அவ்வியல்புகளில் குறைபாடு ஏற்பட்டால் மீட்டல் அரிது என்கிறது குறிஞ்சிப்பாட்டு இலக்கியம்.

*" முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை*
*நேர் வரும் குரைய கலம் கெடின் புணரும்,*
*சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்*
*மாசு அறக் கழீஇ வயங்கு புகழ் நிறுத்தல்*
*ஆசு அறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை*
*எளிய என்னார், தொல் மருங்கு அறிஞர் "* [145]

என்னும் அடிகளில் பொன்னாலும், மணியாலும், முத்தாலும் கட்டப்பட்ட மாலை கெடின் திருத்தி அமைக்கலாம். ஆனால் மனிதனின் நல்லியல்பு கெட்டால் அதனைச் சான்றோராலும் திரும்பப் பெற முடியாது என்கிறது இவ்விலக்கியம்.

தனிமனித அறம் முழுக்க முழுக்க வாழ்க்கை சார்ந்தது. இல்லறம் சார்ந்து அமைகின்ற செயல்கள் எல்லாம் குடும்பத்தின் அங்கத்தினர்களைச் சார்ந்து இருப்பதால் ஒவ்வொருவரும் தனது கடமையைச் சரியாகச் செய்ய வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றனர். ஒவ்வொருவருடைய செயல்களும் சரியான நோக்கில் செயல்படுகின்ற போது தனிமனிதனின் அறங்கள் சமூகத்தை நோக்கி விரிவடையும் தன்மையை உடையவை. அதனால் இல்லறம் நல்லறமாகச் சிறக்கும் போதுதான் தனிமனித அறங்கள் வெற்றி பெறுகின்றன.

## தொகுப்புரை

மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை நிகழும் நிகழ்ச்சிகள், அவன் செய்யும் செயல்கள் எல்லாம் நிறைவுடன் இன்பமாக அமைய அதற்குரிய அறநெறிகளை வகுத்தனர் ஆன்றோர். தனிமனிதனைப் படிப்படியாக உயர்த்தி அறம் கற்பித்து விட்டால் அவன் சமுதாய அறனின் காவலனாகி விடுவான் என்பது சங்கச் சான்றோர்களின் உள்ளக்கிடக்கை. தனிமனிதன் கடைப்பிடிக்க வேண்டிய வாழ்க்கை நெறிமுறைகளை உள்ளடக்கியே பாடல்கள் எழுதப்பட்டன.

1. பிற்காலத்தில் பண்பாட்டு வளர்ச்சியின் தோற்றத்திற்குத் தனிமனித அறம் காரணமாக அமைந்தது.

2. மனத்தளவில் தூய்மைநிலை, செயல்களில் நேர்மை, பிறர் நலனில் அக்கறை, தன்னைப் பற்றிய உண்மைநிலை ஆகியவை தனிமனித அறத்தோற்றத்திற்குக் காரணமாயின.

3. பல்வேறு மக்களால் கடைப்பிடிக்கப்பட்ட தனிமனித அறங்கள் காலப்போக்கில் சமூக அறங்களாக மாறும் தகுதி பெறலாயின.

4. தனிமனிதனின் அறமனப்பான்மையை உயர்த்தி நற்செயல்களை உருவாக்கும் சமுதாய அமைப்பாகக் குடும்ப அமைப்பு திகழ்கின்றது.

5. தலைவனும் தலைவியும் இணைந்து வாழும் குடும்ப வாழ்க்கை அறத்தின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தது.

6. எளிமையான வாழ்க்கையின் முக்கியத்துவத்தைக் குடும்ப அமைப்பு எடுத்துரைக்கிறது.

7. பண்பாட்டு வளர்ச்சியின்காரணமாக உருவான பகிர்ந்துண்ணும் பண்பு காலப்போக்கில் விருந்தோம்பல் அறமாக வளர்ந்தது.

8. அறங்களுள் உயர்வானதாக விருந்தோம்பல் கருதப்பட்டது.

9. தன்னை நாடி வந்தவர்களுக்குத் தன்னிடம் உள்ள பொருள்களைக் கொடுத்து உதவும் மனப்பான்மை ஈகையாக வளர்ந்தது.

10. பிறருக்குக் கொடுப்பதற்காகவே பொருள் தேடும் வாழ்க்கை தேவை என்பது வலியுறுத்தப்படுகிறது.

11. துன்பம் தீர்க்கும் உயரிய நட்பே சிறந்ததாகப் போற்றப்பட்டது.

12. நாட்டை ஆளும் திறமை பெற்ற மன்னர்களும் சிறந்த நண்பர்களாக விளங்கிய தன்மை புலப்படுகிறது.

13. உலக வாழ்க்கைக்குப் பொருளின் இன்றியமையாமை வலியுறுத்தப்படுகிறது.

14. கிடைக்கப்பெற்றிருக்கும் அளவிடற்கரிய செல்வம் முன்வினைப் பயனால் கிடைத்திருப்பதும், செல்வம் பெற்றதன் பயன் பிற உயிர்களைக் காத்தல் என்பதும் பெறப்படுகின்றன.

15. உழைப்பின் இன்றியமையாமை பொருள் ஈட்டச் சிந்தனையி விளைவாகக் கூறப்படுகிறது.

16. வாய்மை என்பது தீங்கில்லாத சொற்களைப் பேசுவதாகும்.

17. உலக வாழ்வில் பிறப்பும் இறப்பும் மட்டுமே மாறாதவை. உலக வாழ்க்கை நிலையற்றது என்னும் கருத்து வலியுறுத்தப்படுகிறது.

18. வாழ்வு ஊழ்வினை வழிச் செல்லும். ஆகையால் வாழும் போதே அறநெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்னும் கருத்து வலியுறுத்தப்படுகிறது.

19. சமூக அமைப்புகளை அறிந்து நன்மை தீமைகளை எடுத்துக் கூறுவதன் மூலம் பிறரை நெறிப்படுத்தும் சிந்தனைகளைச் சான்றோர்கள் கூறி வந்துள்ளனர்.

20. தத்துவங்கள் அறிவுரைகளாக நின்று வாழ்வியல் உண்மைகளைக் கூறுகின்றன.

21. நோயின் தன்மையை அறிந்து மருந்தளிப்பவனே சிறந்த மருத்துவன் என்பது பெறப்படுகிறது.

22. சங்ககால மக்கள் வீரத்தைப் போற்றிய திறம் எடுத்துக் கூறப்படுகிறது.

23. பிறர் செய்த உதவியை மறவாதிருத்தல் நன்றியாக நினைக்கப்படுகிறது.

24. நல்ல வழியில் நடப்பது சிறந்த அறமாகப் போற்றப்பட்டது.

## அடிக்குறிப்புகள்

1. **பழமொழி** . 286, ப. 154.
2. **புறம்.**192, பக். 359-360.
3. **குறள்.** 243, ப. 140.
4. கலைவாணி இராமநாதன், **இந்து தர்மமும் வர்ண தர்மமும்**, ஸ்ரீ ரங்கா பிரிண்டர்ஸ், மதுரை, 1992 ப. 4.
5. **குறுந்.** 135, ப. 196.
6. மேற்படி. 49,ப. 72.
7. மேற்படி. 322, ப. 482.
8. மேற்படி. 323, ப. 483.
9. **நற்.** 397: 7-9, ப. 719.
10. **குறுந்.** 99, ப. 143.
11. **நற்.** 16, ப. 32.
12. மேற்படி. 1, ப. 2.
13. மேற்படி. 124, ப. 228.
14. **குறள்.** 1151, ப. 671.✓
15. **நற்.** 203, ப. 367.
16. மேற்படி. 216, ப. 392.
17. **ஐங்.** 337, ப. 149.

18. மேற்படி. 405, ப. 175.

19. மேற்படி. 415, ப. 178.

20. மேற்படி. 419, ப. 179.

21. **கலி.** 17, ப. 66.

22. மேற்படி. 17, ப. 66.

23. மேற்படி. 113, பக். 314 - 315.

24. மேற்படி. 144, பக். 394-396.

25. **அகம்.** 155, ப. 105.

26. மேற்படி. 279, ப. 381.

27. மேற்படி. 66, ப. 213.

28. **குறள்.** 428, ப. 241.

29. **கலி.** 41, பக். 124-125.

30. மேற்படி. 139, பக். 375-376.

31. **புறம்,** 189, பக். 353-354

32. மேற்படி. 377, ப. 305.

33. மேற்படி. 367, பக். 279-280.

34. மேற்படி. 312, ப. 191.

35. மேற்படி. 195, ப. 365.

36. மேற்படி. 314, ப. 194.

37. **அகம்.** 54, பக். 177-178.

38. **முல்லை.** 55, ப. 165.

39. **குறள்.** 81, ப. 57.

40. **சிலப்பதிகாரம்,** மதுரைக்காண்டம், கொலைகளக்காதை, 71-73, ப. 246.

41. **கம்பராமாயணம்,** சுந்தர. காட்சிப்படலம், 296, ப.

42. **நற்.**142, ப. 258.

43. மேற்படி. 280, ப. 507.

44. **புறம்.**182, ப. 344.

45. மேற்படி. 266, பக்.124-125.

46. **பட்டின.** வரி 42-45, ப. 104.

47. **குறள்.** 231, ப. 134.

48. **நற்.** 217, ப. 394.

49. மேற்படி. 84, ப. 152.

50. மேற்படி.186, ப. 337.

51. **குறள்.** 102, ப. 68.

52. **குறுந்.** 115, ப. 167.

53. மேற்படி. 137, ப. 199.

54. மேற்படி. 143, ப. 207.

55. மேற்படி. 327, ப. 490.

56. **ஐங்**. 2, ப. 2.

57. **கலி**. 60, ப. 168.

58. மேற்படி. 33, பக். 99-100.

59. **அகம்**. 245, ப. 306.

60. மேற்படி. 151, ப. 95.

61. **புறம்**. 189, பக். 353-354.

62. மேற்படி. 204, ப. 14.

63. **குறள்**. 796, ப.452.

64. **நற்**. 355, ப. 644.

65. மேற்படி. 32, ப. 60.

66. **குறு**. 37, ப. 56.

67. **பரி**. 3(வையை) ப. 238.

68. **கலி**. 42, ப. 127.

69. **புறம்**. 324, பக். 208-209.

70. மேற்படி. 380, ப. 313.

71. **மதுரை**. 197-198, ப. 185.

72. **நற்**. 134 , ப. 244.

73. மேற்படி. 210, பக். 379-380.

74. **குறள்**. 751, ப. 426.

75. **நற்**. 214, ப. 387.

76. **குறு**. 63, ப. 92.

77. மேற்படி. 120, ப. 175.

78. மேற்படி. 283, ப. 421.

79. **பழமொழி**. 216, ப. 120.

80. **கலி**. 9, ப. 44.

81. மேற்படி. 10, பக். 47-48.

82. மேற்படி. 20, ப. 71.

83. மேற்படி. 13, ப. 56.

84. மேற்படி. 21, பக். 72-73.

85. **அகம்**. 335, ப. 72.

86. மேற்படி. 111, ப. 349.

87. குறள். 517, ப. 289.

88. **நற்**. 284, ப. 515.

89. **குறள்**. 612, ப. 345.

90. **நற்**. 214, ப. 387.

91. மேற்படி. 296, ப. 35.

92. மேற்படி. 9, ப. 19.

93. **குறள்**. 614., ப. 346.

94. மேற்படி. 758, ப. 429.

95. **குறு**. 135, ப. 196.

96. மேற்படி. 341, ப. 510.

97. **குறள்**. 596, ப. 336.

98. **ஐங்**. 302, ப. 135.

99. **அகம்**.173, ப. 149.

100. மேற்படி.93, ப. 283.

101. **புறம்**. 56, ப. 123.

102. மேற்படி. 237, பக். 71-72.

103. **குறள்**. 100, ப. 65.

104. **பழமொழி**.114, ப. 70.

105. **நற்**.10,ப. 21.

106. **குறு**.184, ப. 267.

107. **கலி**. 33, ப. 99.

108. **புறம்**.139, ப. 258.

109. **குறள்**. 291, ப. 164.

110. **நற்**. 314, ப. 568.

111. **கலி**.11, பக். 50-51.

112. **நற்**.46, ப. 87.

75. **நற்**. 214, ப. 387.

76. **குறு**. 63, ப. 92.

77. மேற்படி. 120, ப. 175.

78. மேற்படி. 283, ப. 421.

79. **பழமொழி**. 216, ப. 120.

80. **கலி**. 9, ப. 44.

81. மேற்படி. 10, பக். 47-48.

82. மேற்படி. 20, ப. 71.

83. மேற்படி. 13, ப. 56.

84. மேற்படி. 21, பக். 72-73.

85. **அகம்**. 335, ப. 72.

86. மேற்படி. 111, ப. 349.

87. குறள். 517, ப. 289.

88. **நற்**. 284, ப. 515.

89. **குறள்**. 612, ப. 345.

90. **நற்**. 214, ப. 387.

91. மேற்படி. 296, ப. 35.

92. மேற்படி. 9, ப. 19.

93. **குறள்**. 614., ப. 346.

94. மேற்படி. 758, ப. 429.

95. **குறு**. 135, ப. 196.

96. மேற்படி. 341, ப. 510.

97. **குறள்**. 596, ப. 336.

98. **ஐங்**. 302, ப. 135.

99. **அகம்**.173, ப. 149.

100. மேற்படி.93, ப. 283.

101. **புறம்**. 56, ப. 123.

102. மேற்படி. 237, பக். 71-72.

103. **குறள்**. 100, ப. 65.

104. **பழமொழி**.114, ப. 70.

105. **நற்**.10,ப. 21.

106. **குறு**.184, ப. 267.

107. **கலி**. 33, ப. 99.

108. **புறம்**.139, ப. 258.

109. **குறள்**. 291, ப. 164.

110. **நற்**. 314, ப. 568.

111. **கலி**.11, பக். 50-51.

112. **நற்**.46, ப. 87.

113. மேற்படி. 126, ப. 231.

114. **குறு**.143, ப. 207.

115. **கலி**.11, பக். 50-51.

116. மேற்படி.16, பக். 63-64.

117. மேற்படி.19, ப. 69.

118. **அகம்**. 353, ப. 112.

119. **புறம்**. 29, ப. 74.

120. மேற்படி. 19, ப. 52.

121. மேற்படி.76, ப. 160.

122. மேற்படி.50, பக். 111-112.

123. **புறம்**. 363, ப. 272.

124. மேற்படி. 27, ப. 70.

125. **நற்**. 16, ப. 32.

126. மேற்படி.126, ப. 231.

127. **கலி**. 7, ப. 39.

128. மேற்படி. 7, ப. 39.

129. **நற்**. 233, பக். 423-424.

130. மேற்படி. 116, ப. 213.

131. மேற்படி. 160, ப. 291.

132. **குறு**. 247, ப. 361.

133. மேற்படி. 252, ப. 370.

134. மேற்படி. 265, ப. 392.

135. **அகம்**. 112, ப. 352.

136. **கலி**.138, ப. 372.

137. **நற்**. 294, ப. 531.

138. **குறள்**. 948, ப. 544.

139. **நற்**.136, ப.247.

140. **கலி**.102, பக். 276-278.

141. **அகம்**. 101, ப. 311.

142. **புறம்**. 192, ப. 359-360.

143. **குறள்**. 108, ப. 70.

144. **அகம்**. 71, ப. 227.

145. **குறிஞ்சி**. 13-18, ப. 224.

மக்களால் மக்களுக்காக உருவாக்கப்பட்டது சமுதாயம் என்னும் அமைப்பு பல்வேறு வண்ணங்களால் ஆன மலர்கள் ஒன்றிணைந்து மாலையாவது போல மதத்தால், இனத்தால், மொழியால் வேறுபட்டவர்கள் ஒன்றிணைந்து வேற்றுமைகளுக்குள் ஒற்றுமை கண்டு வாழ்வது சமுதாயம். உலக நாகரிகத் தோற்றத்தின் உயிர்நாடியாக விளங்குவது சமூக அமைப்பாகும். தனிமனித நிலையில் இருந்து படிப்படியாக மன அளவில் வளர்ச்சி பெற்று ஆண் பெண் இணைந்து சந்ததிகளை உருவாக்கி, பின்னாளில் கூட்டுக்குடும்பமாக மாற்றமடைந்து மிகப் பெரிய சமூக அமைப்புக்கு வித்திட்டது எனலாம். தனிமனிதன் தன்னளவில் மேற்கொள்ளும் பல்வேறு அறங்களும் குடும்பச் சார்பானதாக இருக்கின்ற போது அதனுடைய பயன் சமூக அளவில் விரிவடைவதாக இருக்கும். சங்க காலத்தில் குடும்பத்தாரால் போற்றப்பட்ட விருந்தோம்பல் என்னும் பண்பு பலரால் கடைப்பிடிக்கப்படும் போது சமுதாய அறத்தின் மதிப்பு நிறைந்த தகுதியைப் பெறுவதாகிறது.

சமுதாயம் வாழ்க்கையை மட்டுமன்றி வாழ்வின் பல்வேறு முக்கியக் கூறுகளான பண்பாடு, வழிபாடு, சமயம் முதலியவற்றை எடுத்துக் கூறும் தன்மை பெற்றவை. தமிழர்கள் படைத்தளித்த சங்கப்பாக்கள் இத்தகுதியை முழுமையாகப் பெறுபவை. இதனைக் கருத்தில் கொண்டு, " தமிழரின் பண்டைய வாழ்வை எடுத்துரைப்பன சங்கப்பாடல்கள். அகம் புறம் எனப் பிரிக்கப்பெற்ற அப்பாடல்கள் தமிழரின் பண்பாடு, சமயம், வழிபாடு போன்ற வாழ்வியல் கூறுகளை முன்னிறுத்துகின்றன என்னும் கருத்திற்கு இரண்டாம் கருத்தில்லை "[1] என்பர் அறிவுநம்பி.

சங்கப்பாக்கள் அறத்தை எடுத்துக்கூறுவதில் பல்வேறு சிறப்புகளைப் பெற்றுத் திகழ்கின்றன. சமுதாய அறம் என்று

சொல்லப்படுபவை சமூகம் முழுமைக்கும் பயன் விளைவிக்கும் செயலைக் குறிப்பனவாகும்.

*" எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்*
*எண்ணுவம் என்பது இழுக்கு "* [2]

எனச் செயலை முடிக்கும் நிலையைத் தனி ஒருவனுக்குக் கூறினாற் போல் இருந்தாலும் ஒரு சமூகத்தில் உள்ள அனைவராலும் இப்பாடல் துய்க்கப்பட்டுப் பொருள் உணரும் நிலையில் சமுதாயம் முழுமைக்கும் பயன் தந்ததாகிறது.

மனிதன் தான் படைக்கும் இலக்கியத்தை எதன் சார்பும் இல்லாமல் படைத்துவிட முடியாது. தான் வாழும் சமூகம், வாழ்க்கை நிலை முதலியவற்றை ஏதேனும் ஒரு வகையில் படைப்பாளன் பதிவு செய்து விடுகிறான். மிகப்பெரிய சமுதாய அமைப்பில் தனிமனிதன் ஓர் அங்கம் தான். அவனால் சமூகத்தை விட்டுப் பிரிந்து நின்று செயலாற்ற முடியாது. அதனால் தான் " மனிதகுல சமுதாயத்தின் ஓர் அங்கமாய், அதனோடு இணைந்தும், முரண்பட்டும், மோதியும், இசைந்தும் குறிப்பிட்ட சூழலில் வாழ்கிறவன் மனிதன். மனிதகுலத்தில் தானும் ஒருவனாய் வாழும் அவன் வாழ்க்கை நடைமுறைகளின் காரணமாக அமையும் உணர்வு நிலையில் ஒரு வெளிப்பாடாக இலக்கியத்தைத் தோற்றுவிக்கிறான் " [3] என்பர்.

இலக்கியங்கள் எப்போதுமே குறிப்பிட்ட சில வரைமுறைகளுக்கு உட்பட்டுத்தான் படைக்கப்பட்ட காலத்தை மீக்கூர்ந்து நிற்கின்றன. அதனால் இலக்கியம் படைக்கப்பட்ட கால சமூகத்தின் சமூக, பொருளாதார, பண்பாட்டு நிலைகளைப் பற்றி அறிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு ஏற்படுகின்றது.

உயர்ந்த கருத்துகளை எடுத்துரைக்கும் இலக்கியங்கள் தீயவற்றை

ஒதுக்கி நல்லனவற்றை உணர்த்துவதில் முன் நிற்கின்றன. நல்ல கருத்துகளைச் சமுதாயத்திற்கு எடுத்துக் கூறி நெறிப்படுத்தியதன் காரணமாகப் புலவர்கள் சொல்லேர் உழவர், புலனேறு உழவர் எனச் சிறப்பிக்கப் பெற்றனர்.

தான் வாழும் சமுதாயத்தில் நிறைந்திருக்கும் பல்வேறு மனோபாவங்களும் போற்றிக் கடைபிடிக்கத் தக்க வகையில் பண்டைய அறங்கள் அமைந்திருந்தன. கலை கலைக்காகவே என்னும் நிலைமாறிக் கலை வாழ்க்கைக்கும் பயன்படும் என்னும் கருத்தை உணர்த்துவதாய் சங்க இலக்கியங்கள் தன்னைக் கற்பாருக்குக் காலம்தோறும் அறம் உணர்த்தும் சிறப்புகளைப் பெற்றுள்ளன. " பல காலங்களுக்கும் பொதுவான தன்மைகளைப் பெற்றிருப்பதும் தொடர்ந்து ஏற்றுப் போற்றப்படுவதும், பின்னவற்றிற்கு முன் மாதிரியாக அல்லது இலட்சியமாக இருப்பதும், மேலும் மேலும் வியப்பையும், விளக்கத்தையும் தரவல்லதாக இருப்பதும் ஆகிய பண்புகளைப் பெற்றிருப்பது, சிகரம் அல்லது உன்னதம் காலத்தைக் கடந்து வாழும் திறம் படைத்ததாகிய அதுவும், குறிப்பிட்ட சூழலமைவில் தோன்றியதே " [4] என்று இலக்கியத்தின் பொதுமை பற்றியும், சிறந்த இலக்கியத்தின் தன்மைகளையும் சுட்டிக் கூறுவர். இத்தகைய சிறப்புகளை எல்லாம் உள்ளடக்கிச் சொல்லப்படும் அறங்கள் எக்காலத்திற்கும் பொருந்துவதாய் அமைந்து சிறப்புச் சேர்க்கின்றன.

மனிதன் தான் மேற்கொள்ளும் செயல்கள் தங்கள் நிலையில் இருந்து விரிவடைந்து சமூகம் நோக்கிச் செல்பவை. மனிதன் இந்நிலையில் தனக்கும் சமூகத்திற்கும் கடமையாற்ற வேண்டியவனாகிறான். அதற்கு அவன் முயற்சி உடையவனாக இருத்தல் வேண்டும். பெரும்பான்மையான சங்க, சங்கம் மருவிய கால இலக்கியங்கள் பலவும் சுற்றம் காத்தலையும், தன்னை நாடி அடைக்கலமாக வந்தவரையும் காப்பதைப் பேரறங்களாகக்

குறிப்பிடுகின்றன. அதனால் தான், " சமூகம் என்பது மனித உறவுகள் பின்னிப் பிணைந்து அமைந்திருக்கும் இழைமம் " [5] எனக் குறிப்பிடுவர். எனவே ஒருவருக்கொருவர் பாலமாக அமைந்து சமூக அமைப்பைக் கட்டிக் காப்பது கடமை என்னும் கருத்து மனித உறவு நிலைகள் மூலமாக நிலை நிறுத்தப்படுகிறது.

## நாட்டின் சிறப்பு

மக்கள் கூடிவாழும் மிகப் பெரிய சமூக அமைப்பு நாடு என்பது. அதனுள் பல்வேறு வேறுபாடுகள் நிலவிய போதும் நாமெல்லாம் ஒரே நாட்டின் மக்கள் என்னும் சிந்தனை அவர்களைப் பிணிக்கத்தக்க ஒன்றாக இருக்கும். மொழி, இனம், சமயம் என்னும் நிலைகள் எல்லாம் நாட்டின் அங்கமாக இருக்கின்ற போது பரப்பளவு மனிதமனதுக்குள் ஆதிக்கம் செலுத்தி இது எனது நாடு எனப் பெருமை கொள்ளும் அளவு மனதில் வலிமையான எண்ண அலைகளை ஏற்படுத்துவது இச்சொல்

*" நாடுஎன்ப நாடா வளத்தன "* [6]

என்பர் வள்ளுவர். சிறந்த நாடு என்பது எதற்காகவும் பிற நாட்டை எதிர்பார்க்காமல் இருக்க வேண்டும். எல்லா வளங்களையும் ஒருங்கே பெற்றிருக்க வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்து.

சங்க காலத்தில் தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு என மூன்று பிரிவுகளாக வழங்கி வந்தது. இதனுள் பல குறு நாடுகளும் அமைந்திருந்தன. அவ்வப்பகுதியில் ஆண்ட மன்னர்கள் தங்களது நாடுகள் எல்லாத் துறைகளிலும் சிறந்து விளங்க வேண்டும் என விரும்பிப் பலவாறான போர்கள் செய்து பொன்னையும், பொருளையும், வரியினையும் பெற்று

மாடமாளிகைகளும் அரண்களும் கட்டி நாட்டை வளமும் வலிமையும் உடையதாக உருவாக்கினர். அத்தகைய நாட்டில் வாழ்ந்த மக்கள் தன் மன்னனின் உயரிய குணத்தால் ஈர்க்கப்பட்டு அவனது ஆட்சியில் வாழ்வதைப் பெருமையாகக் கருதினர். தலைவனின் சிறப்பைப் பாடும் தலைவியும் தோழியும் நாட்டையும் மன்னனையும் வாழ்த்தும் போற்றத்தக்க முறையைப் பல சங்கப் பாக்கள் எடுத்துக் கூறுகின்றன. தான் வாழும் நாட்டில் எல்லா வளமும் சிறந்து விளங்க வேண்டும் என்னும் மனநிலை கொண்ட தலைவியை ஐங்குறுநூற்றில் காணமுடிகிறது. நாட்டில் மக்கள் பசியற்று வாழ உணவு தேவை. அதற்கு நெல்விளைச்சல் அவசியம். பண்டமாற்றாகவோ, ஈகையாகவோ, கொடையாகவோ வழங்கப் பொன் தேவை. அதனால் ஒரு டில் நெல்வளம் பெருக வேண்டும், பொன் சிறக்க வேண்டும் டுகிறாள். இதனை,

*" நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க "* [7]

னும் பாடலடியால் அறியலாம். பண்டைக் காலத்தில் அறம் சிறந்திருந்ததால் இரவலர்க்கு வழங்கும் குணமும், விருந்தினரைப் போற்றும் திறமும் உயர்ந்து சிறந்திருந்தன. பொருள் இல்லாதவர்க்குப் பொருள் வழங்குதல் என்னும் எண்ணம் மனதில் இருந்தாலும் பொருள் இன்றேல் அவ்வெண்ணத்தால் பலன் இல்லை. எனவே பொருளையும் வேண்டித் தொடர்ந்து அதனைப் பெற இரவிரும் வரவேண்டும் என்னும் ஆர்வம் மிகக் கொண்டவர்களாகச் சங்கத் தமிழர்கள் வாழ்ந்திருக்கின்றனர்.

*" விளைக வயலே வருக விரவலர் "* [8]

நாட்டில் நெல் நிறைய விளைய வேண்டும். பொருளைப் பெற்றுச் செல்வதற்கு இரவலர் வரவேண்டும் என்னும் எண்ணம் மிகுந்திருந்ததை இப்பாடலடி மெய்ப்பிக்கின்றது. நினைப்பதெல்லாம் உயர்வாக இருக்க வேண்டும் என்னும் எண்ணம் சங்ககால மக்கள் மனதில் இயல்பாகவே குடிகொண்டிருந்த தன்மையைச் சங்கப் பாடல்களால் அறியமுடிகிறது. சிறு செயலாக இருப்பினும் அதை நாட்டின் வளர்ச்சியோடு ஒப்பிட்டுள்ளனர்.

*பால்பல ஊறுக பகடுபல சிறக்க "* [9]

என்னும் பாடலடி நாட்டில் பால்வளம் சிறக்க வேண்டும். நாடு உயர்வடைய வேண்டும் என்னும் சிந்தனையை விதைப்பதாக அமைகிறது.

*" குடிப்பிறப்பு அழிக்கும், விழுப்பம் கொல்லும்*
*பிடித்த கல்விப் பெரும்புனை விடூஉம் "* [10]

என்று மணிமேகலை பசியின் கொடுமையை எடுத்துரைக்கும். பசி மனிதனை வாட்டித் தன் இயல்பான குணங்களில் இருந்து கீழிறங்கச் செய்யும். அதனால் அதனை உணர்ந்து பாடும் நோக்கில்

*" பசியில் லாகுக பிணிசே ணீங்குக "* [11]

நாட்டில் பசி இல்லாமல் இருக்கட்டும். மனிதனை வாட்டும் நோய்கள் நீங்கிப் போகட்டும் என இப்பாடலடி வலியுறுத்துகிறது.

*" உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும்*
*சேராது இயல்வது நாடு "* [12]

என்பர் வள்ளுவர். மக்களை வருத்தும் அதிகமான பசியும், துன்பம் தரும் நோயும், மக்களை அச்சமுறச் செய்யும் பகையும் ஒரு நாட்டில் இல்லாமலிருக்க வேண்டும். அதுவே சிறந்த நாடு என்கிறார் வள்ளுவர். சங்க இலக்கியமான ஐங்குறுநூற்றில் ஓரம்போகியார் நாடு பகைவர்களின் அச்சுறுத்தல் இன்றி அமைதியாக இருக்க வேண்டும். நாட்டின் நலன் சிறக்க வேதங்கள் ஓதவேண்டும் என வேண்டுகிறார். இதனை,

*" பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக "*[13]

என்னும் பாடலடியால் அறியலாம். பசியில்லாமல் இருக்க வேண்டும். பிணிகள் நீங்கிப் போக வேண்டும். நல்லாட்சி செய்யும் அரசர்கள் நீண்ட காலம் வாழ வேண்டும் என்றவாறு பல்வேறு அறங்கள் வலியுறுத்தப் பெறுகின்றன.

*" அறநனி சிறக்க வல்லது கெடுக "*[14]

*" அரசுமுறை செய்க களவில் லாகுக "*[15]

*" நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக "*[16]

என்னும் பாடலடிகள் நாட்டில் அறம் சிறக்க வேண்டும், தீயவை அழிய வேண்டும், அரசு நிர்வாகம் நன்கு செயல்பட வேண்டும். நாட்டில் களவினால் பயம் ஏற்படக் கூடாது. நல்ல செயல்கள் நடைபெற வேண்டும், தீமைகள் அழிய வேண்டும் என்னும் கருத்துகளை எடுத்துக் கூறுகின்றன.

## அந்தணர்

பிற உயிர்களுக்குத் தீங்கு விளைவிக்காமல் கல்வியில் சிறந்து சான்றோர்களாய் வேதம் ஓதி, வேள்விகள் செய்து வாழ்பவர்கள் அந்தணர்கள். அவர்களின் சிறப்புகள் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணக் கிடக்கின்றன. அந்தணர்களின் இயல்பைக் கூறும் பாக்கள் அவர்களது வாழ்க்கை முறையினையும் உள்ள இயல்பையும் வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

பிறருக்கு நன்மை தருவதாகிய அறச்செயல்களைச் செய்வதில் விருப்பமுடைய அந்தணர்கள் வேதங்கள் ஓதி அதன் பொருள் வழி நல்வழியிலேயே நடக்கும் இயல்புடையவர்கள். இதனை,

*" அறம்புரி யருமறை நவின்ற நாவின்*
*திறம்புரி கொள்கை யந்தணிர் "* [17]

என்னும் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

சங்ககாலச் சமுதாயத்தில் அந்தணர்கள் சிறப்பாக மதிக்கப் பெற்றனர். அவர்களின் அறவாழ்க்கை முறையும் நெறிமுறை மாறாத முறைமையும் அனைவருக்கும் நல்வழி காட்டக் கூடியனவாக அமைந்திருந்தன. திருமுருகாற்றுப்படை பிரம்மச்சரியம் காத்து, அறம் கூறும் கோட்பாட்டை மனதில் கொண்டு பூணூல் அணிவதற்கு முன் ஒரு பிறப்பையும், பூணூல் அணிந்த பின் ஒரு பிறப்பையும் உடையவர்கள் என அந்தணரை அறிமுகம் செய்கிறது.

*" ஆறினில் கழிப்பிய அறன்நவில் கொள்கை*
*மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத்து*
*இரு பிறப்பாளர் பொழுது அறிந்து நுவல*
*ஒன்பது கொண்ட மூன்று புரி நுண்ஞாண் "* [18]

என்னும் பாடலடிகள் அக்கருத்துக்கு அரண் சேர்க்கின்றன.

வேதங்கள் பொருள் நிறைந்தன. அவற்றை ஓதும் சிறப்பினால் பெயர் பெற்றவர்கள் அந்தணர்கள். இறைவனுக்குச் சமமாக மதிக்கப்படும் தன்மையால் உயர்ந்து, அறத்தின் வழியில் இருந்து சிறிதும் விலகாத தன்மையுடன் அருள் நிரம்பிய நெஞ்சோடு வாழும் இயல்புடையவர்கள் என்கிறது மதுரைக்காஞ்சி.

*" சிறந்த வேதம் விளங்கப் பாடி,*
*விழுச் சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து,*
*நிலம் அமர் வையத்து ஒருதாம் ஆகி,*
*உயர்நிலை உலகம் இவண் நின்று எய்தும்*
*அற நெறி பிழையா அன்புடை நெஞ்சின்*
*பெரியோர் மேஎய் இனிதின் உறையும் "* [19]

என்னும் பாடலடிகளில் இருக்கையின் இயல்பைக் கூறவந்த மாங்குடி மருதனார் அதன் செம்மைக்கு அந்தணரை ஒப்பு நோக்கிக் கூறுவது நோக்கத்தக்கது.

*" செம்பூ முருக்கி னன்னார் களைந்து*
*தண்டொடு, பிடித்த தாழ்கமண் டலத்துப்*
*படிவ உண்டிப் பார்ப்பன மகனே*
*எழுதாக் கற்பி னின்சொல் உள்ளும் "[20]*

என்னும் குறுந்தொகை அடிகள் அந்தணர்கள் முக்கோலும் கமண்டலமும் விரத உணவையும் உடையவர்கள் என்னும் செய்தியைக் கூறுகிறது. எழுதாக் கிளவியாகிய வேதத்தைக் கற்ற அவர்கள் அறநெறி நின்று வாழும் இயல்பினை உடையவர்கள்.

*" ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்தல்*
*ஈதல் லேற்றலென் றாறுபுரிந் தொழுகும்*
*அறம்புரி யந்தணர் "[21]*

என்னும் அடிகள் வேதம் ஓதுதல் நல்ல நெறி நடத்தல் அந்தணர் இயல்பெனக் குறிப்பிடுகின்றது.

மேற்கண்ட பாடல்கள் அனைத்தும் அந்தணர்களின் செயல்களை ஒற்றுமைப்பட்ட முறையிலேயே கூறிச் செல்கின்றன. தங்களுக்கெனத் தனிப்பட்ட வாழ்க்கை முறை, அறநெறிப்பட்ட நல்ல வாழ்க்கை, வேள்வி செய்தல், வேதம் ஓதுதல் என்னும் நிலைகள் அவர்களது வாழ்வின் சாரங்களாக உள்ளன. பிறருக்கு நன்மை தரும் சொற்களைப் பேசுதலும், பிரிந்தவரைச் சேர்த்து வைத்தலும் இவர்களது செயல் சிறப்பின் உச்சம். சங்க இலக்கியத்தில் பரவலாக அந்தணர் எனும் பெயராலும், முக்கோல்பவர் என்னும் பெயராலும் அந்தணர்கள் சுட்டப்படுகின்றனர்.

## வணிகர்

சமுதாயம் சிறக்கவும் மக்கள் வாழ்க்கை முறை சிறக்கவும் பொருள் தேவை. இங்குப் பொருள் என்பது பணத்தைக் கொண்டு பெறப்படும் வணிகம் சார்ந்த பொருளைக் குறிக்கும். உணவுக்கும் அன்றாடத் தேவைக்கும் பல்வேறு பொருட்கள் தேவைப்படுகின்றன. நமக்குத் தேவைப்படும் பொருட்களை விளையும் இடங்களுக்கோ, தயாரிக்கப்படும் பகுதிகளுக்கோ நேரடியாகச் சென்று பெறுவது இயல்பான செயலன்று. எனவே நம் தேவைகளை நிறைவேற்ற வணிகர்களை நாட வேண்டிய நிலையில் உள்ளோம். அவர்கள் மூலமாக நமக்குத் தேவைப்படும் பொருட்கள் நமக்குக் கிடைக்கின்றன. மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை முதலிய இலக்கியங்கள் பல்வேறு அங்காடிகள் பற்றிக் குறிப்பிடுகின்றன. வணிகர்களின் இயல்பும் அவர்களது நேர்மையான வணிகச் செயல்களும் இலக்கியங்களில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

*" வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்*
*பிறவும் தம்போல் செயின் "* [22]

என்னும் குறளில் பிறர் பொருளையும் தம் பொருள் போல் போற்றிச் செய்தலே நல்ல வணிகம் செய்வார்க்கு உரிய முறை என்பார் வள்ளுவர்.நடுவு நிலைமை வாய்மையில் மட்டுமன்றி வணிகத்திலும் சிறப்பாக வேண்டக்கூடியதாகும்.

மதுரை மாநரில் பல்வேறு வணிகர்கள் வசித்து வந்தமையை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது.

*" வியல் மேவல் விழுச் செல்வத்து,*
*இரு வகையான், இசை சான்ற,*
*சிறுகுடிப் பெருந் தொழுவர் "* [23]

என்னும் பாடலடிகளில் சான்றோர்களால் புகழப்படுகின்ற சிறந்த செல்வங்கள் உழவும் வணிகமும் எனக் குறிப்பிடுகின்றது. மேலும் உழவு வணிகம் இரண்டிலும் சிறப்புப் பெற்ற மக்கள் பலர் வாழ்ந்ததாக அவ்விலக்கியம் குறிப்பிடுகின்றது.

மதுரை மாநகரில் பல்வேறு பண்டங்களை விற்பவர்கள் இருந்தமையை,

*" தீம்புழல் வல்சிக் கழல் கால் மழவர்*
*பூந் தலை முழவின் நோன் தலை கடுப்ப,*
*பிடகைப் பெய்த கமழ் நறும் பூவினர்,*
*பல வகை விரித்த எதிர் பூங் கோதையர்,*
*பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தார்,*
*தகைசெய் தீம் சேற்று இன் நீர்ப் பசுங் காய்,*
*நீடு கொடி இலையினர், கோடு சுடு நூற்றினர்,*
*இரு தலை வந்த பகை முனை கடுப்ப,*
*இன் உயிர் அஞ்சி, இன்னா வெய்து உயிர்த்து*
*ஏங்குவனர் இருந்து, அவை நீங்கிய பின்றை,*
*பல வேறு பண்ணியம் தழீஇத் திரி விலைஞர்*
*மலை புரை மாடத்துக் கொழு நிழல் இருத்தர "* [24]

என்னும் பாடல் பகுதியால் பூ விற்பவர், சுண்ணம் விற்பவர், களிப்பாக்கு, வெற்றிலை, சுண்ணாம்பு மற்றும் பல்வகைப் பண்டங்களை விற்பனை செய்யும் சிறு வணிகர்கள் பலர் நிறைந்திருந்தமையைப் பாடல் பகுதி சுட்டுவதால் பெருவணிகர் மட்டுமன்றிச் சிறு வணிகரும் அக்காலத்தில் நிறைந்திருந்தமையை மெய்ப்பிக்கின்றன.

பொருட்களை எடைபோடும் தராசு நடுநிலை உடையது. உழவர்களின் நுகத்தடியின் நடு இடத்தில் வைக்கப்படும் பகலாணி நடுநிலையாக இருந்து சமநிலையை உணர்த்துவது. அதனைப் போல வணிகர்கள் நடுநிலையான நெஞ்சினை உடையவர்கள்.

*" நெடு நுகத்துப் பகல் போல*
*நடுவு நின்ற நல் நெஞ்சினோர்*
*வடு அஞ்சி வாய் மொழிந்து*
*தமவும் பிறவும் ஒப்ப நாடி,*
*கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது*
*பல் பண்டம் பகர்ந்து வீசும்*
*தொல் கொண்டி, துவன்று இருக்கை "* [25]

என்னும் பாடலடிகள் வணிகர்கள் நடுநிலை உடையவர்கள். பணத்தை அதிகமாகப் பெற்றுக் கொண்டு குறைவான பொருளைக் கொடுப்பதும், குறைவான பொருளைக் கொடுத்து அதிகமாகப் பணத்தைப் பெறுவதும் இல்லை. தாம் பெறும் இலாபம் இவ்வளவுதான் என்று கூறி விற்பனை செய்வதாக இப்பகுதி குறிப்பிடுகிறது.

பட்டினப்பாலை இலக்கியம் புகார் நகரின் வணிகச் சிறப்பை விரிவாக எடுத்துக் கூறும் சிறப்பினது. பண்டைக் காலத்தில் வணிகம் சிறந்திருந்தமைக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குவது பட்டினப்பாலையின் வணிகத் தெரு பற்றிய வருணனையாகும்.

*" நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்*
*காலின் வந்த கருங்கறி மூடையும்*
*வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்*
*குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்*
*தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்*
*கங்கை வாரியும் காவிரிப் பயனும்*
*ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும் "* [26]

இப்பாடல் பகுதியில் அயல்நாட்டிலிருந்து கொண்டு வந்த குதிரைகள், மிளகு மூட்டைகள், பொன், மணி, சந்தனக்கட்டைகள், முத்து, பவளம், விளைபொருட்கள் முதலியன அறிமுகம் செய்யப்படுகின்றன.

*" அற நெறி பிழையாது ஆற்றின் ஒழுகி,*
*குறும் பல் குழுவின் குன்று கண்டன்ன,*
*பருந்து இருந்து உகக்கும் பல் மாண் நல் இல்*
*பல் வேறு பண்டமோடு ஊண் மலிந்து கவினி*
*மலையவும், நிலத்தவும், நீரவும், பிறவும்*
*பல் வேறு திரு மணி, முத்தமொடு, பொன் கொண்டு*
*சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும் "* [27] )

சான்றோராகிய அறநூலார் அறநெறியை எடுத்துக் கூறும் இயல்பினர். அவ்வாறான நெறியில் வாழ்பவர்களாக வணிகர்கள் அறிமுகம் செய்யப்படுகின்றனர். பல்வேறு மாட்சிமை உடையதும் பல்வேறு பொருட்கள் நிறைந்து கிடப்பதுமாக வணிகர் தெரு காட்சி அளிக்கிறது.

சங்கப்பாடல்கள் பலவற்றிலும் காணப்படும் பல்வேறு பாடற்குறிப்புகள் சங்ககால வணிகரின் அறநிலைப்பட்ட மனத்தை எடுத்துக் கூறுகின்றன. இலாபம் கொள்வது மட்டுமே நோக்கமாக இல்லாமல் தரமான பொருள்களை பயன்பாட்டாளர்களுக்குக் கொடுப்பதும் ,அதன் மூலமாகக் கிடைக்கும் வருவாயில் வளமாக வாழ்வதும் அவர்களது கொள்கைகளாக வலியுறுத்தப்படுகின்றது. நடுவுநிலை என்பது வணிகத்திற்கும் இன்றியமையாத் தேவையாகின்றது என்பதனையே சங்கப்பாக்கள் எடுத்துக் கூறுகின்றன.இவை தவிர, பல்வேறு வணிகர்கள், வணிகப் பொருட்கள், கடல் கடந்த வாணிகம் முதலிய செய்திகளையும் தருகின்றன.

## உழவர்

உலகிலேயே தலைமையான தொழில் உழவுத் தொழில். அதனால் தான் அதன் சிறப்பை உணர்த்த வந்த வள்ளுவர்,

*" சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்*
*உழந்தும் உழவே தலை "* [28]

உலகில் பல தொழில்கள் நடைபெற்று வந்தாலும் உணவு என்பது உழவைச் சார்ந்தது. உயிர்வாழக் காரணமாக இருப்பது உழவுத் தொழிலே ஆகும். சங்கப் பாக்கள் பலவற்றில் உழவுச் செய்திகள் இடம் பெற்றிருக்கின்றன.

நல்லியக்கோடனின் செங்கோல் சிறப்பைக் கூற வருகின்ற போது நல்லூர் நத்தத்தனார் அவன் உழவர் குடியானவரைக் காக்கும் தன்மையினை

*" ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும் "* [29]

என்னும் அடியில் சிறப்பிக்கிறார். ஏரினை உடைய குடிமக்களுக்கு நிழல் செய்து காக்கும் செங்கோலை உடையவன் என்பதால் உழவர்களிடம் அரசன் காட்டிய பாதுகாப்புணர்வு வெளிப்படுகின்றது. உழவுத்தொழில் உலகின் தலையாய தொழில். ஆகையால் உழவு பற்றிய செய்திகளும் இலக்கியங்களில் சிறப்பாகப் பேசப்படுகின்றன. பெரும்பாணாற்றுப்படை என்னும் இலக்கியம் உழவர்களின் செயல்கள், கழனிக் காட்சிகள் முதலியவற்றை விரித்துக் கூறுகின்றது. அறிவையும், நிலத்தையும் ஒன்றாக இணைத்து நிலபுலன் என்று குறிப்பிடுவர். நன்றாகப் பண்பட்ட மனதில் தான் நற்சிந்தனை உருவாகும்.அதே போல நன்றாக உழுது சமன் செய்த நிலத்தில் தான் சிறந்த விளைச்சலை எதிர்பார்க்க முடியும். அவ்வாறான நிலத்தைக் கையாளும் உழவர்களும் தங்கள் தொழில் வழி அறச் செயல்களை விளக்கி நிற்கின்றனர்.

*" குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்*
*நடை நவில் பெரும்பகடு புதவில் பூட்டி,*
*பிடி வாய் அன்ன மடிவாய் நாஞ்சில்*
*உடுப்பு முக முழுக் கொழு மூழ்க ஊன்றி,*
*தொடுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை*
*அரிபுகு பொழுதின், இரியல் போகி,*
*வண்ணக் கடம்பின் நறு மலர் அன்ன*
*வளர் இளம் பிள்ளை தழீஇ, குறுங் கால்*

*கறை அணல் குறும்பூழ், கட்சிச் சேக்கும்*
*வன்புலம் இறந்த பின்றை "* [30]

இப்பாடலடிகளில் உணவுப் பொருள்கள் நிறைந்ததாக உழவர்களின் வீடுகள் சுட்டப்பட்டு பின்பு, நிலத்தை நன்றாக உழுதல், விதை விதைத்தல், களை எடுத்தல், அறுவடை செய்தல் என்னும் செயல்கள் எல்லாம் கூறப்படுகின்றன.

*" ஏரின் வாழ்நர் "* [31]

என்று புறம் உழவர்களைச் சிறப்பிக்கிறது. " உழவுத் தொழிலைச் செய்து வாழ்ந்தோர் 'வேளாளர்' எனப்பட்டனர். வேளாளர் என்னும் சொல் ' ஈகையுடையவர்' என்னும் பொருளில் அவர்க்கே வழங்கலாயிற்று. ' வேளாண்மை' என்னும் சொல் இவ்வாறு பண்டு தொட்டு ஈகைப் பொருளில் வழங்குதல் வேளாண்மை யுபகாரம் ஈகையும் விளம்பும்' என்னும் பழைய திவாகரச் சூத்திரத்தால் அறியப்படுகிறது" [32] என்பர் க.த.திருநாவுக்கரசு.

மக்கள் முதன்முதலாக குடும்பமுறையை ஏற்படுத்தியதும், நிலையாக வாழத் தலைப்பட்டதும் மருத நிலத்தில்தான். எனவே பண்பாட்டிலும் நாகரிகத்திலும் மேலானவர்கள் மருத நில மக்கள் எனக் கொள்ளலாம். சங்ககாலத்தில் உழவுத் தொழில் தலைமையானதாக இருந்ததால் மன்னரின் வெற்றியும் நாட்டின் உணவுத் தேவையுடன் தொடர்பு உடையதாக இருந்தது. அதனால்,

*" பொருபடை தரூஉங் கொற்றமும் உழபடை*
*ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே "* [33]

என்று சிறப்பிக்கிறது புறம்.

## மருத்துவர்

மருத்துவத் தொழில் புரிபவர்கள் தங்கள் செயலால், மருத்துவமளிக்கக் கூடிய சிறப்பினால் மருத்துவர்களும் அறவோர் என்று சிறப்பிக்கப்பட்டனர். நோயாளியை அணுகும் முறை பற்றிக் குறிப்பிடும் போது திருவள்ளுவர்,

*" நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல் "* [34]

நோயின் காரணத்தை நாடி அதன் வீரியத்தை உணர்ந்து மருந்து கொடுப்பது மருத்துவனின் கடமை எனக் குறிப்பிடுவார்.

*" அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாது*
*மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல் "* [35]

என்னும் பாடலடிகள் மருந்தாய்ந்து கொடுக்கும் முறையை வலியுறுத்துகிறது.

## அறநிலையங்கள்

பண்டைக் காலத்தில் ஆங்காங்கே அறச்சாலைகள் நிறுவப்பட்டிருந்தன. ஓர் ஊரில் இருந்து மற்றோர் ஊருக்குக் கால்நடையாகச் செல்லும் பயணிகள் தங்குவதற்கும் இளைப்பாறுவதற்கும் தண்ணீர்ப் பந்தல்களையும், உணவளிக்கும் இடங்களையும் அமைத்தனர். தன்னை நாடி வந்தவர்களுக்கு உண்ண உணவும் உடுக்க உடையும் தருவதனைத் தலையாய அறங்கள் என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. குறிப்பாக, பிற்கால நீதி இலக்கியங்கள் பலவும் இக்கூற்றைச் சிறப்பாக வெளிப்படுத்தி நிற்கின்றன.

கரிகாலனின் புகழைப்பாடும் பட்டினப்பாலை அறக்கூழ்ச்சாலை அமைந்திருந்த செய்தியை எடுத்துக் கூறுகின்றது. அறச்சாலையின் சமையல் அறைகள் புலி அடையாளம் இடப்பட்ட கதவினையும் திருமகள் தங்கிய மதில்சுவரையும் உடையன எனக் குறிக்கப்படுகிறது. அறச்சாலையில் வடிக்கப்பெற்ற சோற்றின் கஞ்சி தெருவெங்கும் ஓடி சகதியாகி, தேர்கள் ஓடியதால் வெயிலில் காய்ந்த துகள்கள் அங்கிருந்த மாளிகைகளில் படிந்த செய்தியைக் கூறுகிறது. இதனை,

*" புகழ் நிலைஇய மொழிவளர*
*அறம் நிலைஇய அகன் அட்டில்*
*சோறு வாக்கிய கொழுங் கஞ்சி*
*யாறு போலப் பரந் தொழுகி*
*ஏறு பொரச் சேறாகி,*
*தேர் ஓடத் துகள் கெழுமி*
*நீறு ஆடிய களிறு போல*
*வேறுபட்ட வினை ஓவத்து*
*வெண் கோயில் மாசு ஊட்டும் "* [36]

என்னும் பாடலடிகள் எடுத்துக் கூறுகின்றன.

மதுரை மாநகரில் அறச்சாலைகள் இருந்தமையை மதுரைக்காஞ்சியால் அறியமுடிகிறது.

*" சேறும் நாற்றமும் பலவின் சுளையும்,*
*வேறுபடக் கவினிய தேம் மாங்கனியும்,*

*பல் வேறு உருவின் காயும், பழனும்*
*கொண்டல் வளர்ப்பக் கொடி விடுபு கவினி,*
*மென் பிணி அவிழ்ந்த குறு முறி அடகும்,*
*அமிர்து இயன்றன்ன தீம் சேற்றுக் கடிகையும்,*
*புகழ் படப் பண்ணிய பேர் ஊன் சோறும்,*
*கீழ் செல வீழ்ந்த கிழங்கொடு, பிறவும்*
*இன் சோறு தருநர் பல் வயின் நுகர "* [37]

என்னும் பாடல்கள் அறச்சாலைகளில் பழங்கள், காய்கள், உணவு வகைகள் வழங்கப்பட்ட செய்தியை எடுத்துக் கூறுகின்றன.

## நல்மாந்தர்

*" பண்புஉடையார்ப் பட்டுண்டு உலகம் அது இன்றேல்*
*மண்புக்கு மாய்வது மன் "* [38]

மக்கட்பண்பு உடையவர்கள் வாழ்வதனால் இவ்வுலகம் நிலைபெற்று இருக்கின்றது. இல்லையேல் மண்ணில் புகுந்து அழிந்து போகும் என்பார் வள்ளுவர். நல்மாந்தர்கள் நேர்மையான வழி நடப்பவர்கள். தங்கள் முன்னோர்கள் வகுத்துக் கொடுத்த நெறிவழி நடக்கின்ற இயல்புடையவர்கள்.

*" மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்*
*உரஞ்சா செய்யார் உயர்தவம் வளம்கெடப்*
*பொன்னும் கொள்ளார் மன்னர் "* [39]

இப்பாடலடியில் நல்மாந்தர்கள் தாவரமே அழிந்து போகும் அளவு அதில் உள்ள மருந்தை முழுவதுமாக எடுக்கமாட்டார்கள். வலிமை கெடுமாறு

உயர்ந்தோர்கள் கடுமையான தவம் புரியமாட்டார்கள் என்னும் கருத்தை எடுத்துக் கூறுகிறது. பொதுநலன் கருதிக் கூறப்படும் இக்கருத்துகள் சமூகம் நோக்கியவையாகும். மருந்துக்காகப் பயன்படுத்தப்படும் நெல்லி, வன்னித்தி, திருவாத்தி, திருநீற்றுப்பச்சை, வில்வம் முதலிய மருத்துவ குணமுடைய மரங்களை பெரும்பாலும் கோயில்களில் வளர்த்து வருவர். அதன் காரணம் அனைவரும் பயன்கொள்ள வேண்டும் என்பது தான். அதனால் அது தனி மனிதனின் ஆளுமையால் அழிந்து போகாது. சமூகத்திற்கும் பயன்படுமாறு அமையும்.

## சமத்துவம்

ஒற்றுமையைப் பற்றியும், ஒருமைப்பாட்டைப் பற்றியும் வலிமையான கருத்துகளைக் கூறிவரும் இந்நாளில் சங்கப்பாடல்களே அதன் முன்னோடி என்னும் கருத்து சங்க இலக்கியம் கற்பாருக்குப் புலனாகும் உண்மையாகும். மதம், இனம், மொழி, சாதி என்னும் அடிப்படையில் பெரும் பிரிவுகள் சமுதாயத்தில் நிலவிய போதும் அதையெல்லாம் மீறி இலக்கியங்கள் ஒற்றுமைத் தன்மையைப் பாடியிருக்கின்றன.

மகாகவி பாரதியார்,

*" சாதிகள் இல்லையடி பாப்பா; - குலத்*
*தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்;*
*நீதி, உயர்ந்தமதி, கல்வி - அன்பு*
*நிறைய உடையவர்கள் மேலோர் "*[40]

என்று சாதியின்மையைப் பாப்பா பாட்டின் மூலமாக வலியுறுத்துகிறார்.

*" வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்*
*கீழ்ப்பால் ஒருவன் கற்பின்*
*மேற்பால் ஒருவனும் அவன்கண்படுமே"* [41]

என்று புறநானூறு கல்வியின் இன்றியமையாமையைக் கூறி ஒற்றுமைத் தன்மையைக் கூறுகிறது. வாழ்க்கை முழுதும் தொடரும் அறிவுச் சாதனமான கல்வியே மனிதனைச் சாதிய நிலையில் இருந்து அவன் மனநிலையை மனித நிலைக்கு உயர்த்தும் தன்மை உடையது.

கணியன் பூங்குன்றனார் தன் பாடலில் சமத்துவத் தன்மையை வலியுறுத்துகிறார்.

*" யாதும் ஊரே யாவரும் கேளிர்*
*தீதும் நன்றும் பிறர்தர வாரா "* [42]

என்னும் பாடலில் உலகில் உள்ள ஊர்கள் எல்லாம் நம் ஊர்தான். எல்லா மக்களும் நம் மக்கள்தான் என்னும் எண்ணம் வேண்டும் என்கிறார். மேலும் பிரிவினைச் சிந்தனை ஏற்படாவண்ணம் ஒற்றுமைக்கு வழிகோலுகிறார்.

உலகப் பொதுமை என்னும் சமுதாயச் சிந்தனையைப் பல்வேறு பாடல்கள் வலியுறுத்துகின்றன.

*" உலகம் உவப்ப "* [43]

*" வையகம் பனிப்ப "* [44]

*" அகலிரு விசும்பில் "* [45]

*" நனந்தலை உலகம் "* [46]

*" ஓங்கு திரை வியன் பரப்பின்*
*ஒலி முந்நீர் வரம்பு ஆக,*
*தேன் தூங்கும் உயர் சிமைய*
*மலை நாறிய வியல் ஞாலத்து "* [47]

*" அகரமுதல எழுத்துஎல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு"* [48]

*" உலகம் யாவையும் தாமுள வாக்கலும் "* [49]

என்றவாறு இலக்கியப் பாடல்கள் எல்லாம் தொடக்கத்தில் படைப்பே உலகிற்காக என்னும் பொதுமைச் சிந்தனையை விதைப்பதாக அமைந்திருக்கின்றன. இலக்கியங்களின் வாயிலாகக் கூறப்படும் கருத்துகள் சமூகத்தில் சமத்துவச் சிந்தனை வளரவும் ஒருமைப்பாட்டுச் சிந்தனை மேலோங்கவும் பயன்படுவதாக அமைகிறது.

## அறத்தின் மேன்மை

அறம், செய்வார்க்கும் பெறுவார்க்கும் மகிழ்வளிப்பதாகும். மனிதனின் சிறப்பான குணங்களுள் ஒன்று அறம் செய்தல். அறச் சிந்தனை உடையவர்களைச் சங்க இலக்கியம் முதலாகப் பிற்கால இலக்கியங்கள் வரை பலவும் போற்றிப் புகழ்கின்றன.

*" அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது "* [50]

என்னும் குறள் இல்வாழ்வின் பயனே அறமியற்றல் எனக் கூறுகிறது. செல்வம் பெற்றதன் பயன் அனைவருக்கும் உதவுவதே என இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

*" சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்*
*கூனும் குறளும் ஊமும் செவிடும்*
*மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு*
*எண்பேர் எச்சம் என்றிவை எல்லாம்*
*பேதைமை அல்லது ஊதியம் இல்என*
*முன்னும் அறிந்தோர் கூறினர் இன்னும் "* [51]

இப்பாடல் செல்வம் பெற்றவர்கள் பாவத்தின் விளைவாகக் கருதப்படும் அறிவுக் குறைபாடு, கூன், குருடு முதலான குறைபாட்டிற்கு ஆளாவர் என்னும் கருத்து நிலவியதால் பெரும்பான்மையாகத் தங்களது மனநலனையும், பிறரின் வாழ்வையும் மேம்படுத்தும் பொருட்டு அறங்கள் செய்வதனை மேற்கொண்டனர்.

*" ஆடுநர் கழியும் இவ் உலகத்துக் கூடிய*
*நகைப் புறனாக நின் சுற்றம்*
*இசைப்புற னாகநீ ஓம்பிய பொருளே "* [52]

உலகம் அழிந்து போவது நிலையான கருத்து. சுற்றம் மகிழ்வடைதல் வேண்டுமானால் பெருகச் சேர்த்து வைத்த செல்வம் அனைவருக்கும் பயன்பட வேண்டும் என்னும் சிந்தனை மேற்கண்ட பாடலடிகளின் மூலம் முன்வைக்கப்படுகிறது.

*" குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத் தமண்*
*பொதுமை சுட்டிய மூவர் உலகமும்*
*பொதுமை இன்றி ஆண்டிசி னோர்க்கும்*
*மாண்ட வன்றே ஆண்டுகள் துணையே*
*வைத்த தன்றே வெறுக்கை வித்தும்*
*அறவினை யன்றே விழுத்துணை யத்துணைப்*
*புணைகை விட்டோர்க்கு அரிதே துணைஅழத்*
*தொக்கு உயிர் வெளவுங் காலை*
*இக்கரை நின்று இவர்ந்து உக்கரை கொளலே "* [53]

என்னும் பாடல் ஆணவத்தால் கைப்பற்றிய பெரிய நாடும், அதனால் உண்டான பெரும் செல்வமும் பெற்று என்ன பயன்? பணத்தால் எல்லாவற்றையும் பெறல் இயலுமா? வாழ்வில் நிலையாமையே நிலையானதென்று உணர்ந்து அறச் செயல்களை மேற்கொள்ள வேண்டும். அதுவே உயிர்க்கு நிறைவும் மேன்மையும் தருவதாகும் என வலியுறுத்துகிறது.

பெற்ற செல்வத்தைப் பகிர்ந்து கொடுக்காததால் பயன் ஏதும் விளைவது கிடையாது. அது தனக்கும் பயன்படாமல் பிறருக்கும் பயன்படாமல் அழியும் இயல்புடையது. சேர்த்த செல்வம் பகிர்ந்து கொடுப்பதால் பெருகுமே தவிர குறையும் இயல்புடையதாகாது. ஈயாதவனின் செல்வம் பற்றிக் கூறவந்த பழமொழி இலக்கியம்,

*" நாய்பெற்ற தெங்கம் பழம் "* [54]

எனக் கூறும். நாயிடம் கிடைத்த தேங்காய் அதற்கும் பயன்படாது; அடுத்தவருக்கும் பயன்படாது. அது போலக் கருமியின் செல்வமும் அறத்தின் பாற்பட்டதாகாது.

*" அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார் "* [55]

என்னும் பாடலடி அறத்தின் சிறப்பை அறிந்து அறம் செய்வோர்கள் தாம் அதன் பயனை அறிவார்கள் என்னும் செய்தியை வலியுறுத்துகிறது. பயிரிட்டு நாத்துகளை எடுத்து நீர் பாய்ச்சி விளைவிப்போர்க்கே பயன் கிடைக்கும். அது போல நற்செயல்கள் பல செய்யும் போதுதான் நன்னிலை பிறக்கும் என்பது அறவழிச் செயல்களின் மேன்மையைக் காட்டுகிறது.

ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணலாம் என்னும் மொழியும் அறத்தின் மேன்மை சார்பானதே. இறைவனை அன்பு வடிவானவன்; அறவடிவானவன்; நிலைத்த தன்மை உடையவன்; அறச்செயல் புரிவோரைக் காப்பவன் என்று கூறுவதெல்லாம் இக்கருத்தால் தான்.

பேரிலக்கியங்கள் பலவும் அறம் வெல்லும் அநீதி தோற்கும் என்னும் சிந்தனையை முன்வைக்கின்றன. எடுத்துக்காட்டாக, அறம் செய்து வாழ்தல் நற்செயல் எனச் சிலம்பு கூறுகிறது. கோவலன் பிரிந்த நிலையில் இரவலர்களையும், அந்தணர்களையும், அடியவர்களையும் அறம் செய்து காக்க முடியவில்லையே எனக் கண்ணகி கலங்குகிறாள். மணிமேகலையில் மணிமேகலை அறம் உரைக்கின்றாள். கர்ணன் கொடுத்துக் கொடுத்துச் சிறப்புப் பெற்றதால் வள்ளன்மை அறத்தில் உயர்வானவனாகப் போற்றப்படுகிறான்.

*" அறத்தினு ளன்பு நீ "* [56]

என்று இறைவனான திருமாலையே அறமாகக் காண்கிறது பரிபாடல்.

*" அறம் கோலாக "* [57]

என்னும் பரிபாடலடி அறம் செங்கோலான தன்மையை எடுத்துக் காட்டுகிறது.

*" அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை*
*பொறுத்தானோடு ஊர்ந்தா னிடை "* [58]

என்னும் குறளில் அவரவர் தான் செய்த அறத்தின் பயனுக்கேற்ப நன்மையையும், தீமையையும் துய்ப்பர் எனக் குறிப்பிடுவார் வள்ளுவர். எனவே வாழ்வை மேன்மைப் படுத்துவதும், உயிரை உன்னத நிலைக்கு மேலேற்றிச் சிறப்புச் செய்து பெருமை பெறச் செய்வதும் அறமே என்பது புலனாகும்.

" உடலைப் பற்றிய நன்னிலை, மனத்தைப் பற்றிய தூய்மை நிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும் " [59] என்பர். அறம் செய்ய இக்குணங்கள் இன்றியமையாதவையாகப் போற்றப்படுபவை. நம்மைப் பற்றிய நன்னிலையும், அறம் செய்யும் தூய்மையான மனமுமே அறச்சிந்தனை உருவாகக் காரணமாகும். மனிதகுல வரலாற்றில் அறச்சிந்தனை நிலவியதால் தான் இவ்வுலகம் இன்று வரை நிலைபெற்று வாழ்கிறதெனக் கூறலாம். ஒருவருக்கொருவர் உதவுதல், விட்டுக் கொடுத்தல், சரியான காலத்தில் உதவி செய்தல், பிறரைத் தண்டிக்கும், கெடுக்கும் எண்ணம் கொள்ளாமை முதலிய சிந்தனைகள் எல்லாம் அறத்தின் மேன்மைக்குத் துணையாக நிற்பன.

பண்டைக்காலப் போர் முறையில் அறம் பின்பற்றப்பட்டது. இது அரசியலறத்தின் பாற்படும். எனினும் சமுதாய நோக்கில் பயன்பாடுடைய மேன்மைமிக்க அறமாதலால் இங்குச் சேர்க்கப்பட்டது.

*" ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம் அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் "* [60]

என்னும் பாடல் போர் நடைபெறும் முன்னர்ப் பசுக்கள், அதன் இயல்புடைய அந்தணர்கள், விலங்குகள், பெண்கள், நோய்வாய்ப்பட்டோர் ஆகியோரை எல்லாம் பாதுகாப்பான இடத்திற்கு அப்புறப்படுத்திய பின்னரே போர் நடைபெற்றதாகக் கூறுகிறது. ஆக, போராயினும் அதிலும் தீமை செய்யாத எவரும் பாதிக்கப்படக்கூடாது என்ற அறச்சிந்தனை வேரோடி இருப்பதைத் தெளிவாக அறியமுடிகிறது.

## இனியவாழ்வு

மனித வாழ்க்கை இன்பமும் துன்பமும் இணைந்தது. வாழ்க்கை நிலையற்ற தன்மையது. ஆகலின் எந்நிலையிலும் உணர்வுகள் அழுகையில் இருந்து நகைக்கும், பிற சுவைகளுக்கும் மாறும் இயல்புடையவை. இன்பமும் துன்பமும் கலந்த வாழ்வை நல்லபடியாக எதிர் கொள்வதே நலம் பயக்கும்.

*" ஓரில்நெய்தல் கறங்க ஓர்இல்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்*
*புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்*

*பைதல் உண்கண் பனிவார்பு உறைப்பப்*

*படைத்தோன் மன்ற அப்பண்பி லாளன்*

*இன்னாது அம்ம இவ்வுலகம்*

*இனிய காண்கஇதன் இயல்புணர்ந் தோரே "*[61]

என்னும் பாடல் வாழ்வின் இயல்பான தன்மையை வலியுறுத்துகிறது.) சமூகம் இன்பமும் துன்பமும் கலந்தது என்பதை, ஒரு வீட்டில் சாவுப்பறை ஒலிக்கவும், மறு வீட்டில் மணமுழவு ஒலிக்கவும், ஒரு பெண் தன் கணவனோடு கூடிக் களிக்கவும், மற்றொரு பெண் கணவனை இழந்து கண்ணீருடன் இருப்பதுமான வாழ்வு இவ்வுலக இயற்கையாகும். அதனால் துன்பமானவற்றைத் தேர்ந்து வாழ்வை நடத்துதல் வேண்டும். துன்பங்கள் நிறைந்த வாழ்க்கைக்குள் மூழ்கி அதனுள் தொலைந்து விடாமல் அதற்குள்ளும் இன்பம் கண்டு மகிழ்ந்து வாழ வேண்டிய முறையை இப்பாடல் வலியுறுத்திக் கூறுகின்றது.

## அல்லவை செய்தல் கூடாது

சமுதாயம் பல சிக்கல்களை உள்ளடக்கியது. இதனுள் நல்லது கெட்டது என அனைத்துவகையான மனோபாவங்கள் அமைந்திருக்கின்றன. ஒன்றுக்கொன்று ஒற்றுமையாகியும் முரண்பட்டும் சமுதாயம் நகர்கிறது. ஒவ்வொரு நாளையும் கடத்துகின்றது. அதனைச் சரியான நோக்கில் கொண்டு செல்ல வேண்டுமெனில் சமுதாயச் சிந்தனையும் நல்லது செய்யும் உள்ளமும் தேவையாகும். நன்மை செய்பவர்களும் தீமை செய்பவர்களும் நிறைந்திருக்கும் இச்சமூகத்தில் தீமையை விலக்கி நன்மை செய்வதைத் தலையாய அறமாகக் கொள்ள வேண்டும். இதைக் கவனத்தில் கொண்ட புறநானூற்றுப் புலவர் நரிவெரூஉத் தலையார்,

பண்டைக்காலப் போர் முறையில் அறம் பின்பற்றப்பட்டது. இது அரசியலறத்தின் பாற்படும். எனினும் சமுதாய நோக்கில் பயன்பாடுடைய மேன்மைமிக்க அறமாதலால் இங்குச் சேர்க்கப்பட்டது.

*" ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம் அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் "* [60]

என்னும் பாடல் போர் நடைபெறும் முன்னர்ப் பசுக்கள், அதன் இயல்புடைய அந்தணர்கள், விலங்குகள், பெண்கள், நோய்வாய்ப்பட்டோர் ஆகியோரை எல்லாம் பாதுகாப்பான இடத்திற்கு அப்புறப்படுத்திய பின்னரே போர் நடைபெற்றதாகக் கூறுகிறது. ஆக, போராயினும் அதிலும் தீமை செய்யாத எவரும் பாதிக்கப்படக்கூடாது என்ற அறச்சிந்தனை வேரோடி இருப்பதைத் தெளிவாக அறியமுடிகிறது.

## இனியவாழ்வு

மனித வாழ்க்கை இன்பமும் துன்பமும் இணைந்தது. வாழ்க்கை நிலையற்ற தன்மையது. ஆகலின் எந்நிலையிலும் உணர்வுகள் அழுகையில் இருந்து நகைக்கும், பிற சுவைகளுக்கும் மாறும் இயல்புடையவை. இன்பமும் துன்பமும் கலந்த வாழ்வை நல்லபடியாக எதிர் கொள்வதே நலம் பயக்கும்.

*" ஓரில்நெய்தல் கறங்க ஓர்இல்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்*
*புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்*

*பைதல் உண்கண் பனிவார்பு உறைப்பப்*
*படைத்தோன் மன்ற அப்பண்பி லாளன்*
*இன்னாது அம்ம இவ்வுலகம்*
*இனிய காண்கஇதன் இயல்புணர்ந் தோரே "* [61]

என்னும் பாடல் வாழ்வின் இயல்பான தன்மையை வலியுறுத்துகிறது.) சமூகம் இன்பமும் துன்பமும் கலந்தது என்பதை, ஒரு வீட்டில் சாவுப்பறை ஒலிக்கவும், மறு வீட்டில் மணமுழவு ஒலிக்கவும், ஒரு பெண் தன் கணவனோடு கூடிக் களிக்கவும், மற்றொரு பெண் கணவனை இழந்து கண்ணீருடன் இருப்பதுமான வாழ்வு இவ்வுலக இயற்கையாகும். அதனால் துன்பமானவற்றைத் தேர்ந்து வாழ்வை நடத்துதல் வேண்டும். துன்பங்கள் நிறைந்த வாழ்க்கைக்குள் மூழ்கி அதனுள் தொலைந்து விடாமல் அதற்குள்ளும் இன்பம் கண்டு மகிழ்ந்து வாழ வேண்டிய முறையை இப்பாடல் வலியுறுத்திக் கூறுகின்றது.

## அல்லவை செய்தல் கூடாது

சமுதாயம் பல சிக்கல்களை உள்ளடக்கியது. இதனுள் நல்லது கெட்டது என அனைத்துவகையான மனோபாவங்கள் அமைந்திருக்கின்றன. ஒன்றுக்கொன்று ஒற்றுமையாகியும் முரண்பட்டும் சமுதாயம் நகர்கிறது. ஒவ்வொரு நாளையும் கடத்துகின்றது. அதனைச் சரியான நோக்கில் கொண்டு செல்ல வேண்டுமெனில் சமுதாயச் சிந்தனையும் நல்லது செய்யும் உள்ளமும் தேவையாகும். நன்மை செய்பவர்களும் தீமை செய்பவர்களும் நிறைந்திருக்கும் இச்சமூகத்தில் தீமையை விலக்கி நன்மை செய்வதைத் தலையாய அறமாகக் கொள்ள வேண்டும். இதைக் கவனத்தில் கொண்ட புறநானூற்றுப் புலவர் நரிவெரூஉத் தலையார்,

*" நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின் "*[62]

என்று அல்லவை செய்யக்கூடாது என்னும் சிந்தனையை முன்வைக்கிறார்.

## திருமண அறம்

திருமணம் என்பது பண்பட்ட சமூக அமைப்பாகும். பண்டைக் காலத்தில் தலைவனும் தலைவியும் தாங்களே எதிர் கொண்டு ஒருவரை ஒருவர் காதலித்து மணந்தமையைக் காந்தருவம் எனப் பண்டைய இலக்கியங்கள் சிறப்பிக்கின்றன. திருமணம் பண்பட்ட அமைப்பாக இருப்பினும் அது சான்றோரால் ஏற்படுத்தப்பட்ட முறையினை,

*" கற்பெனப் படுவது கரணமொடு புணரக்*
*கொளற்குறி மரபின் கிழவன் கிழத்தியைக்*
*கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே "*[63]

என்கிறார் தொல்காப்பியர். பெற்றோர் கொடுக்கப் பெண்ணைக் கொள்வதே முறையான திருமண அமைப்பு என இந்த நூற்பா விளக்குகிறது.

சங்க காலத்தில் காதல் திருமணத்தைப் பெற்றோர் நடத்திக் கொடுக்கமுடியாதநிலை ஏற்படுகின்ற போது தோழியானவள் தலைவியின் பொருட்டு அறத்தொடு நின்று தலைவியின் காதலை வெளிப்படுத்தும் பாங்கு கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறான முறையில் யாருக்கும் பாதிப்பு நிகழாவண்ணம் அறவழிப்பட்டுத் தோழியானவள் எடுத்துக் கூறுகிறார். இதனைக் குறிஞ்சிப்பாட்டு இலக்கியம் தெளிவாக உணர்த்தும்.

தலைவியை மணம் முடிக்க நினைக்கையில் தலைவி தன் பெற்றோரால் இற்செறிப்பு செய்யப்படும் சூழலில் அவளைக் காணாத தலைவன் மடலேறிப் பெற முயல்வான். அவ்வாறாக மடலேறித் தன் காதலி இன்னார் என்று ஊரறியச் செய்வதால் தனக்கும் அவளுக்கும் உள்ள உறவு ஊருக்குத் தெரிந்து விடும் என்னும் கருத்து மடலேறுதலில் உணர்த்தப்பட்டது. இற்செறிப்பு, மடலேறுதல் என்னும் நிகழ்வுகள் எல்லாம் அக்காலச் சமுதாயத்தில் காதல் திருமணத்திற்கு எதிர்ப்பு நிலவிய நிலைக்குச் சான்றுகளாக விளங்குகின்றன.

மணமக்களின் எதிர்காலத்தைக் கருத்திற் கொண்டு பலபடி நிலைகளில் பொருத்தம் பார்த்தல், பரிசமளித்தல், திருமணச் சடங்குகள் எனத் திருமண முறை அமைக்கப்பட்டது. பரிசமளித்தல் என்னும் நிகழ்வு பண்டைக் காலத்தில் முலைவிலை, சிறுவளை, விலை பரியம் என்னும் சொற்களால் அறியப்பட்டது.

*" இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்*
*கருங்கட் கோசர் நியம மாயினு*
*முறுமெனக் கொள்குந ரல்லர்*
*நறுநுத லரிவை பாசிழை விலையே "* [64]

என்னும் பாடல் பரிசமளித்த நிகழ்ச்சியை எடுத்துக் கூறுகிறது. இவை தவிர நற்றிணை-300, புறநானூறு 343 ஆகிய பாடல்களும் சான்றுகளாக அமைகின்றன.

ஆணும் பெண்ணுமாகக் கூடி நடத்தும் இல்லற வாழ்வு அறமெனவே போற்றப்பட்டது. மனிதன் மேற்கொள்ளும் பல்வேறு அறங்களுக்கும் இல்லறமே சிறந்ததாகலின் திருமணமுறை அவ்வறத்தை மேற்கொள்வதற்கு அடிக்கல் நாட்டுதல் போலாகிறது. சமூகத்தில் தவறுகள் ஏற்பட்ட போது திருமணமுறை ஏற்படுத்தப்பட்டது என்னும் கருத்து நிலவிய போதும் இத்திருமண உடன்பாட்டு முறை சமுதாயத்தின் நல்வாழ்வுக்கு உறுதுணையாக இருக்கும் என்பது விளங்கும்.

## கல்வி

கல்வி மனித வாழ்வை வளமாக்கும் தன்மை உடையது. மனிதகுல வரலாற்றில் கல்வி தான் முழுமையான நாகரிகமும் பண்பாடும் வளரத் துணை நிற்பது. திருவள்ளுவர் கற்றவரை மட்டுமே மக்களாகக் காண்கிறார்.

*" விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்*
*கற்றாரோடு ஏனை யவர் "* [65]

தனிமனிதன் தன் வாழ்வை மேம்படுத்திக் கொள்ளவும், சமுதாய முன்னேற்றத்திற்காகத் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளவும் கல்வி அறிவு அவசியம். சங்க காலத்தில் கல்வி நிலை சிறந்திருந்தது என்பதற்குச் சங்க இலக்கியங்களே மிகச் சிறந்த சான்றாகும்.

*" பல் கேள்வித் துறை போகிய*
*தொல் ஆணை நல்லாசிரியர்*
*உறழ் குறித்து எடுத்த உரு கெழு கொடியும் "* [66]

என்னும் பட்டினப்பாலை அடிகள் கல்வி நிலை சிறந்திருந்ததையும் கல்வி சிறந்திருந்ததால் விவாதம் செய்து பொருள் காணும் பட்டி மண்டபங்கள் நடைபெற்றமையையும் அறிய முடிகிறது.

*" உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே "* [67]

என்னும் பாடல் ஆசிரியருக்குத் துன்பம் நேர்ந்த போது பொருள் கொடுத்து உரிய முறையில் வழிபட்டுக் கற்க வேண்டிய வழிமுறைகளைக் கூறுகிறது. பண்டைக் காலத்தில் கல்வியில் வல்ல பெண் புலவர்கள் இருந்தனர் என்பதற்கு ஒக்கூர் மாசாத்தியார், காக்கைப் பாடினியார், நச்செள்ளையார் முதலியோரைக் குறிப்பிடலாம். கல்வியில் வல்ல புலவர்களைக் குறிக்க ' மதுரைக் கணக்காயனார்', 'மதுரையாசிரியர் நல்லந்துவனார்', 'மதுரைப் பாலாசிரியர்', 'மதுரைப் பாலாசிரியர் நற்றாமடார்', 'மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார்' போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவார்கள். கல்வியில் சிறந்த புலமை பெற்றவர்களை,

*" இவரே புலனுழுது உண்மார் "* [68]

எனக் குறிப்பிடுவார் கோவூர்கிழார்.

*" பிறப்பு ஓர் அன்ன உடன்வயிற்று உள்ளும்*
*சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்*
*ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்*
*மூத்தோன் வருக என்னாது அவருள்*
*அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும் "* [69]

என்னும் பாடலடிகள் கல்வியைச் சிரமப்பட்டுக் கற்க வேண்டும். ஒரு குடியில் பிறந்த பலரில் மூத்தோனை அழைக்காமல் அறிவுடையோனையே அரசன் அழைப்பான். கல்வித் தகுதியின் காரணத்தால் புகழும் சிறப்பும் உண்டாகும் என்னும் கருத்து வலியுறுத்தப் பெறுகின்றது.

கல்வி கற்ற சான்றோர்கள் சமூகத்தின் நன்னடத்தைக்குத் துணை நிற்பவர்களாவார். கல்வி கற்ற புலமையாளரை மதிக்க வேண்டும். அவ்வாறு மதிக்காத சூழ்நிலையில் நாடு அழிந்து புகழ் பெறுவதற்கு வாய்ப்பின்றிப் போகும். இக்கருத்தை அரண் செய்வதாக

*" வாயி லோயே வாயி லோயே ...*
*வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்*
*உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து*
*வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கைப்*
*பரிசிலர்க்கு அடையா வாயி லோயே*
*கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி*
*தன்அறி யலன்கொல் என்னறி யலன்கொல்*
*அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென*
*வறுந்தலை உலகமும் அன்றே அதனால்*
*காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை*
*மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்*
*மழுவுடைக் காட்டகத்து அற்றே*
*எத்திசைச் செலினும் அத்திசைச்இ சோறே "* [70]

இப்பாடல் அமைந்திருக்கின்றது. கல்வி கற்ற புலமையாளரை மதிக்க வேண்டும் என்பதே இப்பாடலின் சாரமாகும். கல்வியின் சிறந்ததாகத் தமிழகம் விளங்கிய காரணத்தால் ஏற்படும் ஒருவகைப் பெருமித உணர்வு இப்பாடல்களில் புரையோடிக் கிடக்கின்றது.

தோட்டத்தில் ஆடு தின்றது போக எஞ்சி நின்ற வரகுப் பயிர் வளர்ந்து அதன் மூலம் கிடைத்த வரகை எடுத்துக்குற்றி அரிசியாக்கிச் சமைத்த சோற்றுடனே எம்மை ஆதரிக்கும் அரசன் சிற்றரசன் என்றாலும் எம்மிடத்து அவன் நடக்கும் முறைமையை அறிந்தே போற்றுவோம். எவ்வளவு தான் வறுமைத் துன்பத்தை நாங்கள் பட்டாலும் அறிவில்லாதோரின் செல்வம் எமக்குப் பயன்படாமையால் அதை எண்ணிக் கூடப் பாரோம். நல்லறிவாளர்களின் வறுமை கூட பயன் படுவதால் அதைப் பெருமையுடன் போற்றுவோம் "[71] என்று வஞ்சினம் உரைக்கிறார் மதுரைக் குமரனார். தான் கற்ற கல்வியை மதிக்காத மன்னனின் அளவு கடந்த வீரம், அதிகமான பொருள் ஆகியவற்றைத் துச்சமாக நினைக்கும் நிலையினை இங்குக் காணமுடிகிறது. புலவர்கள் தாம் கற்ற கல்வியால் பெருமை பெற்றவர்களாக இருந்தனர் என்பதை,

*" ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவன் ஆக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைகஎன் நிலவரை "*[72]

*" செறுத்த செய்யுள் செய்செந் நாவின்*
*வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் "*[73]

என்னும் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

## தொழில் அறம்

வருவாய் ஈட்டுதற்குத் தொழில் முக்கிய தேவையாகக் கருதப்படுகிறது. சங்ககாலக் குலப்பிரிவு நிலையில் அரசர், அந்தணர், வணிகர்,வேளாளர் என்னும் பிரிவினர் இருந்தனர். அவரவர்க்குப் பணிப்பிரிவுகள் வரையறுக்கப்பட்டிருந்தன. அனைத்துத் தொழில் புரிபவராலும் அறம் கடைப்பிடிக்கப்பட்டது. புகார், மதுரை, வஞ்சி ஆகிய நகரங்கள் தொழிலில் சிறந்து இருந்தமையை இலக்கியங்களின் வழி அறியலாம். சங்ககாலத்தில் முதன் முதலில் நிலப்பிரிவுகள் தான் தொழில் வரைமுறையின் தொடக்கமாக இருந்ததெனக் கொள்ளலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் நிலப்பிரிவுகள் அவ்வவ் நிலங்களில் வாழும் மக்களுக்கான தொழில்களை வரையறுத்துக் கூறின.

*" ஆகாத் தோம்பி, ஆப்பயன் அளிக்கும்*
*கோவலர் வாழ்க்கை ஓர் கொடுப்பாடு இல்லை "* [74]

என்னும் சிலப்பதிகார அடிகள் பசுக்களைக் காத்து அது தரும் பாலையும் பால் பொருள்களையும் வழங்கும் கோவலர்களான ஆயர்களின் வாழ்க்கை அறமுறைப்பட்டதெனக் கூறுகிறது. இதனைப் போன்றே சங்ககால நிலப்பிரிவுகளும் தொழில் அறத்தை எடுத்துக் கூறுகின்றன.

## தச்சுத் தொழில்

பண்டைய போர்முறைகளில் தேர்ப்படை முக்கிய பங்கு வகித்தது. தேர்களைச் செய்து கொடுப்பது தச்சர்களின் தலையாய அறமாக இருந்தது. அவர்கள் நாவாய்களையும், படகுகளையும் செய்தனர். வீடுகளுக்குரிய கதவுகள், சாளரங்கள், தூண்கள், உத்தரங்கள் முதலியன அவர்களால் உருவாக்கப்பட்டன.

## கொல்லுத் தொழில்

கொல்லுத் தொழில் செய்பவர்கள் கொல்லர் எனப்பட்டனர். இவர்கள் போர்க்கருவிகள் செய்து கொடுத்ததை

*" வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே "* [75]

என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

## மண்பாண்டத் தொழில்

உணவுப் பொருட்களைச் சமைப்பதற்கும், இறந்தவர்களைப் புதைப்பதற்கும் மற்றும் பல்வேறு பயன்பாடுகளுக்கும் மண்ணாலான கலங்கள் பயன்படுத்தப்பட்டன. மக்களுக்குத் தேவையான பாண்டங்களைச் செய்து கொடுத்தவர்கள் குயவர்கள் எனப்பட்டனர்.

*" கவிசெந் தாழிக் குவிபுறத்து இருந்த*
*செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா "* [76]

என்னும் பாடலடிகள் தாழிகளில் சடலங்கள் அடக்கம் செய்யப்பட்டமையைக் கூறுகிறது.

## உப்பு வணிகர்

உப்பு வியாபாரிகள் உமணர் எனப்பட்டனர். உப்பினை வண்டிகளில் ஏற்றி ஊர் ஊராகச் சென்று உப்பினை விற்பனை செய்வர். இதனை,

*" நெல்லும் முப்பும் நேரே யூரீர்*
*கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும் "* [77]

என்னும் பாடலடிகள் உப்பும் நெல்லும் பண்டமாற்று முறையாகப் பயன்படுத்தப் பட்டமையை விவரிக்கிறது.

## வழிபாட்டு அறம்

இறைவழிபாடு பண்டைக்காலம் தொட்டே நம்பிக்கையின் அடிப்படையிலும், அச்சத்தின் அடிப்படையிலும் நிலவி வருகிறது. சங்ககாலத்தில் சிவனும் திருமாலும் கடவுளராக வணங்கப்பட்டனர். இறைவழிபாடு நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றியிருப்பினும் இறைவழிபாட்டின் அடிப்படை அறமுறைப்படி அமைந்து விளங்கியது. சமயங்கள் வளர்ச்சி அடைந்து அதன் சார்பாக வழிபாடு பெருகிய போது வழிபாட்டுக் கொள்கைகள் வகுக்கப்பட்டன. அக்கொள்கைகள் வாழ்வை நெறிப்படுத்தும் தன்மையனவாகும். பண்டைக் காலத்தில் மேற்கொள்ளப்பெற்ற நடுகல் வழிபாடும், வெறியாட்டும் சில அற நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டவையே. நடுகல் வழிபாட்டு முறை நன்றியின் அடையாளமாகத் தோன்றியது. மிகச் சிறந்த வீரனின் நினைவாக நடப்பட்ட கல்லை வணங்குதல் இம்முறையின் மரபாகப் பின்பற்றப்பட்டது. நன்றி மறப்பது நன்றன்று. ஆதலின் நினைவைப் போற்றுதல் மிகச் சிறந்த அறமாகப் போற்றப்பட்டது.

*" ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி*
*ஒளிறுஏந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்தெனக்*
*கல்லே பரவின் அல்லது*
*நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே "* [78]

இப்பாடல் ஒரு வீரனுடைய மனைவி , விருந்தினர்கள் இல்லம் நாடிவரவும் தன் கணவன் நல்ல பகையைப் பெறவும் நடுகல்லை வழிபாடு செய்ததாகக் கூறுகின்றது.

கடற்கரைப் பகுதியில் கடல்தெய்வ வழிபாடு நடைபெற்றது. முழுநிலா நாளில் நடைபெறும் இவ்விழாவில் மீன் உணவு படைத்துக் கடல் தெய்வத்தை வழிபடுவர். இவ்விழா நட்புறவு மலர்வதற்கும், உறவுநிலைகளைப் பலப்படுத்துவதற்கும் நடத்தப்பட்டு இருக்கலாம்.

*" சினைச் சிறவின் கோடு நட்டு*
*மனைச் சேர்த்திய வல்அணங்கினான்,*
*மடல்தாழை மலர் மலைந்தும்*
*பிணர்ப் பெண்ணைப் பிழிமகிழ்ந்தும்*
*புன்தலை இரும் பரதவர்*
*பைந் தழை மா மகளிரொடு*
*பா இரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது*
*உவவு மடிந்து உண்டு ஆடியும் "* [79]

தொழில் செய்வோர்க்கெல்லாம் ஓய்வு தேவையானது என்பதையும், மகிழ்ச்சியுடனும் களியாட்டங்களுடனும் விழா நடைபெற்றதை இப்பாடலடிகள் நமக்கு அறிவிக்கின்றன.

சமுதாய நிகழ்வுகள் தடம் மாறிப் போய் அறம் நீங்கினால் வழிபடும் இடத்தை விட்டு தெய்வம் நீங்கிவிடும் என்னும் கூற்று புறப்பாடலின் வழி அறியக் கிடக்கிறது. இதனை,

*" கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்*
*பலிகண் மாறிய பாழ்படு பொதியில் "* [80]

என்னும் அடிகளால் அறியலாம்.

கிராம தெய்வ வழிபாடுகள் அறச்சிந்தனை மிக்கவை. தீயசெயல்கள் செய்தால் தெய்வம் தண்டிக்கும் என்னும் நம்பிக்கை மனிதனுக்கு இயல்பாகவே உண்டு. அதனால் தெய்வ நம்பிக்கை அதிகமாக மனதில் உருவாகும் போது அதனைத் தொடர்ந்தால் போல் மற்றவர்க்கு நல்லது செய்யாவிட்டாலும் தீமை செய்யக்கூடாது என்னும் எண்ணம் மனிதனின் மனதைப் பண்படுத்துகிறது. இறைவழிபாட்டுச் சிந்தனை மனிதனைப் பக்குவப்படுத்தித் தீமையான வழிகளில் இருந்து அவனை விடுவிக்கின்றது. உலகத் துயரங்களில் இருந்து விடுபடவும் இறைவனை அடையவும் பாடிய ஆழ்வார்கள், நாயன்மார்கள் ஆகியோரின் பாடல்களும் இதனையே தெளிவாக உணர்த்துகின்றன. தான் செய்யும் தவறுகளுக்கும்,

குற்றங்களுக்கும் இறைவனிடம் மனம் வருந்தி மன்னிப்புக் கேட்கும் முறையும் அறத்தின் பாற்பட்டதேயாகும்.

## விழாக்களில் அறம்

விழாக்கள் சமுதாய இயல்புகளைத் தெளிவாக அறிவிக்கும் தன்மை கொண்டவை. விழாக்களின் மூலமாகச் சமுதாயத்தின் பண்பாடுகளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள முடிகிறது.

சங்ககாலத்தில் கார்த்திகை விழா சிறப்பாகக் கொண்டாடப்பெற்றதனை நற்றிணை குறிப்பிடுகின்றது. கார்த்திகை மாத முழு நிலவை நற்றிணை,

*" ......அறம்செய் திங்கள் "* [81]

என்று குறிப்பிடுகின்றது.

மன்னனின் பிறந்த நாள் விழா அரசால் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றிருக்கிறது. இவ்விழா மண்ணுமங்கலம் என்று குறிக்கப்படுகிறது. இந்நாளில் சிறையில் இருந்தோர் விடுதலை செய்யப்பட்டதாகச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. மிகச் சிறந்த விழாநாட்களும் அற நிகழ்வுகளின் துணையாக விளங்கி வந்திருக்கின்றன. மக்களை மகிழ்ச்சியுடையவர்களாக செய்வதே விழாக்களின் பயனாகும்.

## நம்பிக்கைகளில் அறங்கள்

பண்டைக்கால மக்கள் நம்பிக்கைகளின் பால் அதிக ஈடுபாடு கொண்டவர்களாக இருந்தனர். அந்நம்பிக்கைகள் இந்நாள்வரை நம்மில் பலரால் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. நன்மை தீமைகளை அறிவிப்பதில் இயற்கையும், அதனால் படைக்கப்பட்ட பொருட்களும் இருப்பதனைப் பல்வேறு செயல்பாடுகள் மூலமாக எடுத்துக் கூறினர். நல்ல செயல்களைச் செய்யத் தொடங்கும் போதும், வீட்டை விட்டு வெளியில் செல்லும் போதும் ஏற்படும் தீய சகுனங்களைக் கணித்து துன்பம் வருவதை அறிந்து கூறி அதனால் ஏற்படும் பெரிய அளவிலான தீமைகளைத் தவிர்த்தனர். செயல் தொடங்கும் போது விரிச்சி கேட்டல் பண்டைய வழக்கமாக இருந்தது. இதனை நற்சொல் கேட்டல் என்பர். நற்சொல் கேட்டல் ஒரு அறமாகப் பின்பற்றப்பட்டது.

## சமூக நல்லிணக்கம்

பல்வேறு மனித மனங்களின் தொகுப்பாகிய சமுதாயம் தன்னகத்தே பல்வேறு குணநலன்களைக் கொண்டது. ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளுதல், விட்டுக் கொடுத்தல் என்னும் நிலையில் சமூக நல்லிணக்கம் உருவாகின்றது. தாய் தந்தையரைச் சார்ந்து வளர்ந்த குழந்தை பெரியவனாகிச் சமூகத்தோடு இணைந்து செயல்படும் வரை நல்லிணக்கம் அவனோடு இணைந்தே வளர்கிறது. பின்னர், சமூகச் சூழல்களுக்கேற்ப மாறுபடுகின்றது.

நல்லொழுக்கம் மிக்க பிள்ளைகளைப் பெற்றவர்கள் புகழுக்கு உரியவர்களாகின்றனர்.

*" ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய் "* [82]

என்னும் குறளால் அறியலாம்.

*" இம்மை யுலகத் திசையொடு விளங்கி*
*மறுமை யுலகமும் மறுவின் றெய்துப*
*செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்*
*பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்*
*வாயே யாகுதல் வாய்த்தனம் "* [83]

பிள்ளைகளை வளர்க்கின்ற முறையில் தான் அவர்களின் உயர்வு நிகழும். நல்லியல்பு நிறைந்த குழந்தைகளைப் பெற்றோர் வளர்க்கின்ற முறையில்

பகைவரும் விரும்பும் தன்மைகளைப் பெற்றவர்களாக இருப்பர். குடிப்பிறப்பைச் சான்றோர்கள் போற்றிக் கூறியது இங்கு நினைவுக்கூரத் தக்கதாகும். நற்குடியில் பிறந்த ஒருவன் தன் குடிக்கேற்ற நற்செயல்களில் ஈடுபட்டுப் புகழுடன் விளங்குவான் என்பதை,

*" குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியல*
*னெடுநா மொழியன் அன்பின் எனநீ "* [84]

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

அமைதியான வாழ்வு என்பதை ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தலின் மூலமாகக் கிடைக்கப் பெறலாம். எந்தத் துன்பமும் இன்றி வாழ நினைப்பவர்க்கு இல்லறம் இனிதாக அமைய வேண்டும். அவ்வில்லறம் பல அறங்களுக்குத் துணையாக அமையும். வயது முதிர்ந்த பின்னும் தலையின் முடி நரைக்காமல் இருத்தற்கு பிசிராந்தையார் கூறும் நல்லிணக்கக் கருத்துகள் உணர்ந்து துய்க்க ஏதுவாக உள்ளன.

*" யாண்டுபல வாக நரையில ஆகுதல்*
*யாங்கு ஆகியர்என வினவுதிர் ஆயின்*
*மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்*
*யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும் அதன் தலை*
*ஆன்றுஅவிந்து அடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர்யான் வாழும் ஊரே "* [85]

குடும்பத்தினர் தெளிவுடையவர்கள், வேலை செய்பவர்கள் குறிப்பறிந்து செய்கின்றனர், நாட்டை ஆளும் அரசன் தீங்கு வராமல் காக்கின்றான். நிறைவான குடும்பம் பெற்றதால் முடி நரைக்காமல் உள்ளது என்னும் கருத்துகள் ஒருவருக்கொருவர் உணர்ந்து விட்டுக் கொடுத்தலால் வாழ்க்கை எளிதாகும் என்னும் கருத்தை முன் வைக்கிறது.

## உறவு அறம்

சங்கத்தலைவன் தான் நட்புக் கொள்ளும் தேர்ப்பாகனாயினும் அவர்களோடு உறவு நலம் பேணுவதில் சிறந்தவனாக விளங்குகிறான். சமூகத்தில் ஒருவன் மற்றவரோடு எப்படி மனதால் இணைந்து போக வேண்டும் என்பதைத் தலைவன், பாங்கன்,தேர்ப்பாகன் ஆகியோரின் மன உணர்வுகள் வெளிப்படுத்துகின்றன.

வினைமுற்றி மீளும் தலைவனிடம் தேர்ப்பாகன் ஆறுதலாகப் பேசுவதும், தலைவன் பாங்கனுடனும், தேர்ப்பாகனுடனும் உறவாடுவதும் உறவுநிலையின் உச்சம் எனலாம்.

*" வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ*
*மானுரு வாகநின் மனம்பூட் டினையோ*
*வுரைமதி வாழியோ வலவ "* [86]

தேர்ப்பாகன் விரைவாகத் தேரைச் செலுத்தியதால் தலைவன் இவ்வாறு புகழ்கிறான். நற்குணம் உள்ள உறவு எல்லோர்க்கும் துணையாகும் என்பதை,

*" உள்ளிலோர்க்குக் வலியாகுவன்*
*கேளிலோர்க்குக் கேளாகுவன் "* [87]

என்னும் பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றன./

## பொருத்தமற்றன செய்யாதிருத்தல்

உலகில் உள்ள செயல்களை எல்லாம் நல்லவை, தீயவை என இரண்டாகப் பிரிக்கலாம். தீய செயல்கள் தீமையான பலன்களையே தருமாதலின் அச்செயல்களைச் செய்யக் கூடாது என்பதை மறைபொருளாகவோ, நேராகவோ சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. தீயவற்றை மனதால் நினைத்துச் செயல்படுத்தினால் அதனால் உண்டான பயனும் தீமையாகவே முடியும். அதனால் செயலைச் செய்யும் போதே மனதால் நிதானமாகத் தீர்மானித்து முடிவு செய்ய வேண்டும் என்னும் பொருள்பட,

*" செய்துபின் னிரங்கா வினையொடு*
*மெய்யல் பெரும்பழி எய்தி னேனே "* [88]

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

நல்லியல்பு கொண்டோரிடம் நட்புக் கொண்டால் நன்மை விளையும். தீய இயல்பு கொண்டோரிடம் நட்புக் கொண்டால் தீமையே விளையும். அதனால் சேரக்கூடாதவரோடு சேர்தல் துன்பம் தரும் என்பதை,

*" அருளும் அன்பும் நீக்கி நீங்கா*
*நிரயங்இ கொள்பவரோடு ஒன்றாது காவல்*
*குழவி கொள்பவரின் ஓம்புமதி '* [89]

*" நல்லதன் நலனும் தீயதன் தீமையும்*
*இல்லை என்போர்க்கு இனன்ஆகி லியர் "* [90]

என்னும் பாடலடிகள் வலியுறுத்துகின்றன.

*" பெண்கொலை புரிந்த நன்னன் நகரத்தில் துன்புற்றான் "* [91]

எனக் குறுந்தொகை கூறுகிறது. " ஆசிரியருக்குப் பொருள் கொடுக்காமல் வருத்திக் கற்ற கல்வியும் சுற்றத்தார் மனம் வருந்துமாறு தொகுத்து வைத்த செல்வமும் தாமாக அழியும் " [92] எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது. அறநெறியில் வாழ்வதே பண்டைக் காலத்தில் சிறந்த அறமாகப் போற்றப்பட்டதனால் அறமற்ற செயல்கள் நாணத்திற்கு உரியனவாகக் கருதப்பட்டன. அறமற்ற செயல்கள் எச்சூழலாயிலும் துயரம் தருபவை. அவை இம்மைக்கும் மறுமைக்கும் துன்பம் தருவனவாக இருப்பதால் கடிந்துரைக்கப்பட்டன. அறமற்ற செயல்களைச் செய்வதும், அதனால் கிடைத்த பலனை அனுபவிப்பதும் குற்றமுடைய செயலே என்பது இலக்கியங்களின் வழிப் பெறப்படும் கருத்து. இதனையே,

*" பொல்லாத சொல்லி மறைத்தொழுகும் பேதைகள்*
*சொல்லாலே தன்னைத் துயர்படுக்கும் - நல்லாய்*
*மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்*
*நுணலும்தன் வாயால் கெடும் "* [93]

என்னும் பழமொழி இலக்கியப் பாடலும் வலியுறுத்தும்.

யார் யாருக்கெல்லாம் பழிவிளையும் என்பதை,

*" ஆன்முலை அறுத்த அறனில் லோர்க்கும்*
*மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்*
*குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்*
*வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன*
*நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்*
*செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என*
*அறம் பாடிற்றே ஆயிழை கணவ "* [94]

என்னும் புறப்பாடல் உணர்த்துகிறது. பசுவின் மடியை அறுத்தல் என்பது அது கொடுக்கும் பாலின் பயனைக் கெடுத்தலாலும், கருச்சிதைத்தல் என்பது உயிர்க்கொலை ஆயினமையாலும், பெற்றோர்க்குத் துயர் தரும் பிழை செய்தல் என்பனவெல்லாம் தவிர்க்கப்பட வேண்டியவை என்பதைக் கூறுகிறது.

## சமநிலை

மனித மனம் ஏற்றத்தாழ்வு நிலை உடையது. இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக நினைக்கின்ற குணம் அனைவருக்கும் இயல்பாகக் கைவரப் பெற்றிருக்கும் எனக் கூற இயலாது. வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் பல அனுபவங்கள் கிடைக்கின்றன. இன்பங்களைவிடத் துன்பங்களால் தான் மனிதன் அதிகமாகப் பண்படுகிறான். அவ்வாறாகத் துன்பங்களால் பண்படுகின்ற போது அவனது மனதில் சமநிலை உருவாகிறது. வயதின் முதிர்ச்சியும், உலக அனுபவமும் அவனைச் செம்மை உள்ளம் படைத்தவனாக மாற்றுகிறது. கணியன் பூங்குன்றனாரின் யாதும் ஊரே

யாவரும் கேளிர் என்னும் பாடல் சமநிலையை வலியுறுத்துவதற்கு மிகச் சிறந்த சான்றாகும்.

*" பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி "* [95]

அறிவுதான் ஒருவரை உயர்த்துவதற்கும் தாழ்த்துவதற்கும் காரணமாக அமைகிறது. பெரியோர்கள் வியப்பதற்கு உரியவர்கள் அல்லர். பாதுகாத்தற்கு உரியவர்கள். சிறியோர்கள் இகழப்படுவதற்கு உரியவர் அல்லர். வழிகாட்டப்பட வேண்டியவர்கள் என மொழிகிறது இப்பாடல்.

பாண்டியன் நெடுஞ்செழியன் இளவயதிலேயே போர்க்களத்தில் நின்று போர் புரிகிறான். வீரர்கள் வீழ்த்தும் அவனது போர்த்திறம் அனைவராலும் வியக்கத்தக்கதாக இருக்கின்றது.ஆனால் அவன் வெற்றியால் மகிழவோ, பெருமிதமோ கொள்ளாமல் இயல்பாக இருக்கின்ற நிலையை,

*" உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை*
*வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே அவரை*
*அழுங்கப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பஎழக்*
*கவிழ்ந்து நிலம் சேர அட்டதை*
*மகிழ்தன்றும் இகழ்ந்தன்றும் அதனினும் இலனே "* [96]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

சங்கப்புலவர்கள் பொருளையும், பொன்னையும் கண்டு மயங்கும் இயல்புடையவர்கள் அல்லர். சமமான மனநிலையுடன் எதையும்

எதிர்கொள்ளும் திறன் பெற்றிருந்தனர். வேந்தர்கள் பரிசில் நீடிக்கும் நிலையில் வேந்தனின் பொருள் வளத்திற்காக அஞ்சாமல் தம் கருத்தை எடுத்துக் கூறும் சமநிலை படைத்த மனம் பெற்றிருந்தனர்.

*" மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்*
*வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே*
*எம்மால் வியக்கப் படூஉ மோரே..*
*சீறூர் மன்னர் ஆயினும் எம்வயின்*
*பாடறிந்து ஒழுகும் பண்பினாரே..."* [97]

முறையறிந்து ஒழுகும் பண்புடையவரே சிறந்தவர் எனக் கூறுகிறது இப்பாடலடிகள்.

போர்க்களத்தில் வெற்றி பெற்று உண்டாட்டு நிகழ்த்தப்பெறும் வெற்றித் திருவிழாவில் அரசர்கள் தங்களின் சிறந்த போர் வீரர்களுக்குத் தாமே கள் கொடுத்து நிகராக மதிக்கும் பண்பைப் போற்றி வந்தனர்.

அதே போல இருக்கின்ற செல்வம் கொஞ்சமாயினும் அதனை வழங்கும் மனம் உடையவன் என்று மன்னனை

*" நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே*
*இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே "* [98]

இப்பாடல் மூலமாகப் போற்றியுள்ளார் மதுரைக் குமரனார். இரவலர்களைக் கண்டு இகழாத நிலை பண்டைய மன்னர்களால் பண்பாடாகவே போற்றப்பட்டது. இதனை,

*" என்சிறுமையின் இழித்து நோக்கான்*
*தன்பெருமையின் தகவு நோக்கிக்*
*...... நல்கி யோனே நகைசால் தோன்றல் "* [99]

என்னும் புறப்பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

## பண்பின்மை

மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் மனிதப் பண்பு இன்றியமையாதது. வள்ளுவர் பண்பில்லாதவரை மரம் எனக் குறிப்பார். மனிதனின் ஆளுமைப் பண்பை வெளிக்காட்டுவது நற்பண்புதான். ஆனால் இயல்பாகவே மனிதன் குறையும் நிறையும் உள்ளவனாக இருக்கிறான். சந்தர்ப்பங்களும், சூழ்நிலைகளும் அவனைத் தவறு செய்யத் தூண்டுவதாக அமையும் போது உயர்ந்த மனிதனிடமும் பண்புக்குறை ஏற்படுகிறது.

*" கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்*
*ஓட்டை மனவ னுரமிலி "* [100]

வைகைக் கரையில் வெள்ளத்தைப் பார்க்க கூடிய கூட்டத்தைப் பயன்படுத்திக் கொண்ட ஒருவன் ஒரு பெண்ணின் மார்பைக் காமக் கண்ணால் நோக்கியதால் ஓட்டை மனமுடையவன் எனப்பட்டான். குடக்கோ பெருஞ்சேரல் இரும்பொறை பரிசிற்காகக் கால நீடிப்புச் செய்த போது

*" கையுள் ளதுபோல் காட்டி வழி நாள்*
*பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்*
*நாணாய் ஆயினும் நாணக் கூறி "* [101]

இப்பாடலில் அரசன் பரிசிற்காகக் கால நீட்டிப்புச் செய்த போதும் காத்திருப்பதற்காக நாணம் கொள்கிறார்.

காட்டுவழியாகப் பொருள் தேடச் செல்லும் மக்கள் கடும் வெயிலில் செல்வர். அவ்வழியில் செல்வோரைத் துன்புறுத்தி அவர்களது பொருளைப் பறித்து வாழும் தன்மை உள்ளவர்கள் வாழ்கிறார்கள் என்பதை,

*" அத்தம் செல்வோர் அலறத் தாக்கி,*
*கைப்பொருள் வெளவும் களவு ஏர் வாழ்க்கைக்*
*கொடியோர்"* [102]

இப்பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. வழிச் செல்வோரின் கைகளில் பொருள்கள் இல்லையாயினும் அவர்களைத் துன்புறுத்தி இனபம் காணும் தன்மை உள்ளவர்களாக இருந்தனர்.

*" கொள்ளும் பொருளில ராயினும், வம்பலர்*
*துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து, உயிர் வெளவலின் "* [103]

பெருங்கடுங்கோவின் இப்பாடல் வேடர் என்னும் கொடிய மனமுடையோரை அறிமுகம் செய்கிறது. தன்னைச் சார்ந்தாரும், தன் செயல்களை நோக்குவாரும் இல்லாத சூழ்நிலையில் தனிமை தவறு செய்யத் தூண்டும். அவ்வாறு செய்த தவற்றைப் பிறர் அறியவில்லை என்றாலும் தன் மனமானது சான்றாக நின்று தண்டிக்கும் என்பதை,



*" நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும், அயலவர்*
*நெஞ்சத்துக் குறுகிய கரி இல்லை "* [104]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

புறம் பேசுதல் தனக்கும் பிறருக்கும் துன்பம் தரக்கூடிய செயலாகும்.

*" பழியல ராயினும் பலர்புறங் கூறும்*
*அம்ப லொழுக்க மாகிய வெஞ்சொற்*
*சேரியம் பெண்டிர் "* [105]

என்னும் பாடலடிகள், புறம் கூறுவதால் பயன் ஏதும் கிடையாதென்றாலும் புறம் கூறுபவர்கள் தம் மகிழ்ச்சிக்காகக் கூறுவதாகக் கூறுகிறது.

*" ......நல்ல போலவும் நயவ போலவும்*
*தொல்லோர் சென்ற நெறிய போலவும்*
*காதல் நெஞ்சின்நும் இடைபுகற்கு அஇலமரும்*
*ஏதில் மாக்கள் "* [106]

நண்பர்களிடம் நல்லவை போலப் பேசிக் கலகம் செய்வார் கையாளும் உத்திகளை இப்பாடல் கூறுகிறது. நல்ல செய்தியைக் கூறுவது போல அறமற்ற கருத்துகள் கூறுவதை இப்பாடல் உணர்த்துகிறது.

பண்புக்குறைபாடு உடையவர்கள் குற்றமுடைய நெஞ்சுடையவர்கள். அவர்களது செயல்கள் யாவும் குறை உடையனவாக இருத்தலால் சமூகத்தோடு கலந்து வாழும் போது அவர்கள் சார்ந்த சூழ்நிலையில் துன்பம் உண்டாகிறது. அறம் நிரம்பிய சான்றோர், அறமற்ற கொடியோர் என இருபிரிவினரும் வாழும் சமூகத்தில் இப்பாதிப்புகள் நேரடியாக நிகழ்தல் இல்லை. பண்புக் குறைபாட்டுச் சூழல்கள் உருவாகிற போது சிக்கல்கள் தோன்றுகின்றன.

## குற்றம் பொறுத்தல்

*" அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை*
*இகழ்வார்ப் பொறுத்தல் தலை "* [107]

என்று பொறுமைக்கு விளக்கம் கூறுவார் வள்ளுவர். தன்னைத் தோண்டிய போதும் கீழே விழாமல் காக்கும் பூமி போல நம்மை இகழ்பவரையும் பொறுத்தருள வேண்டுமென்பது அவரின் கருத்து.

நாம் வாழும் சமுதாயம் பல்வகைக் குற்றங்கள் நிறைந்தது. நல்மனிதனாகும் நிலை குற்றம் பொறுத்து , மன்னித்துத் திருந்துதலில் இருக்கின்றது. பல்வேறு சங்கப் பாடல்களில் தலைவனின் பரத்தமை ஒழுக்கம் கூறப்பட்டுள்ளது. அவ்வாறான நிலையிலும் தலைவியானவள் அவனது ஒழுக்கக் கேடான செயல்களை எல்லாம் மறந்து அவனை வரவேற்கிறாள்.

*" காஞ்சி யூரன் கொடுமை*
*கரந்தன ளாகலின் நாணிய வருமே "* [108]

தலைவன் பிழை செய்த போதும், மன்னிக்கும் குணம் இயல்பாகத் தலைவிக்கு அமைந்துள்ளமையே பண்பாடு மிக்க இல்லறத்திற்கு வழிவகுத்தது. தீமை செய்வாரைக் கண்டு வெகுண்டு தண்டித்தலைவிட அதனைப் பொறுத்து அவர்களைத் திருந்தச் செய்ய வேண்டும் என்பதை,

*" தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்*
*தாமறிந்து உணர்க என்ப"* [109]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. குற்றம் செய்தவரைத் தண்டித்தலை விட, அவர்களின் குற்றத்தை உணரச்செய்து பயன்பெற வேண்டும் என்பதையே பாடல்கள் பறைசாற்றுகின்றன.

## பொதுநலம்

தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் நிலையையே பொதுநலம் எனக் கூறலாம். பொதுநலத்தை வலியுறுத்தும் பாடல்கள் சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்படுகின்றன.

*" உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்*
*அமிழ்தம் இயைவ தாயினும் இனிதுஎனத்*
*தமியர் உண்டலும் இலரே முனிவிலர்*
*துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்*
*புகழ்எனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்*
*அன்ன மாட்சி அனைய ராகித்*

*தமக்கென முயலா நோன்தாள்*

*பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"* [110]

தேவர்கள் உண்ணும் உயிர் வாழ்வதற்குக் காரணமாகிய அமிழ்தமே கிடைத்தாலும் விருந்தினர் புறத்தே இருக்கத் தனியாக உண்ணுதல் இல்லை. புகழுக்காக உயிரைக் கொடுத்தாலும் உலகமே கிடைப்பதாயினும் பழி பாவத்திற்கு அஞ்சுதலும் மிகச் சிறந்த நலன்களாகக் கூறப்பட்டுள்ளன. தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் நிலையை,

*" தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன் "* [111]

என்னும் அகப்பாடல் அழுத்தமாக எடுத்தாள்கிறது.

" இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவினெஞ் சத்துப்
பகுத்தூண் டொகுத்த வாண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே " [112]

உண்பதற்கு இனிமையான பண்டங்கள் கிடைத்தாலும் தான் மட்டும் உண்ணாத உயரிய பண்பை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. பொதுநலம் ஒரு மனிதனை உயர்வடையச் செய்வது. / புகழை உயர்த்துவது.. தனிமனிதனின் பொதுநல உணர்வு சமூகத்துற்கு மிக்க பயன்பாடு உடையதாகத் திகழ்ந்து ஆக்கமான சமுதாயம் உருவாக வழிவகுக்கிறது.

## தொகுப்புரை

தனிமனிதனின் தொகுப்பே சமுதாயம் என்பது. மனிதனால் தனித்து வாழ முடியாது. அவன் பிறரைச் சார்ந்து வாழும் இயல்புடையவன். தனிமனிதன் தன் நலத்திற்காக மேற்கொள்ளப்படும் அறமே முடிவில் சமுதாய முன்னேற்றத்திற்கு வழிவகுக்கிறது.

1. மக்களுக்காக மக்களால் உருவாக்கப்பட்ட அமைப்பே சமுதாயம்.

2. மனிதகுல வளர்ச்சிக்கும், மறுமலர்ச்சிக்கும் வித்திடுவது சமுதாய அமைப்பு.

3. தொடக்க காலத்தில் சமூக அமைப்பு உருவாக ஆற்றங்கரைகள் முக்கிய பங்கு வகித்தன. இங்கு தான் புகழ் பெற்ற நாகரிகங்கள் தோன்றிச் சமூக அமைப்பை உருவாக்கி வளர்த்தன.

4. சமூகம் என்பது மனித உறவுகளின் தொகுப்பு.

5. தான் வாழும் நாடும், நாட்டை ஆளும் மன்னனும் சிறக்க வேண்டும் என்னும் சிந்தனை உடையவர்களாக மக்கள் இருந்தனர்.

6. அறம் வழுவா நிலையில் நல்லனவற்றைப் பிறர்க்குப் பயனுடைய வழியில் செய்வோர் அந்தணர் எனப்பட்டனர்.

பொருள் நிறைந்த வேதத்தை ஓதி அருள் நிறைந்த மனத்தினராக வாழ்ந்தனர்.

7. இலாபம் கொள்வதை மட்டும் நோக்கமாகக் கொண்டிராமல் தரமான பொருள் கொடுப்பதை வணிகர்கள் சிறந்த அறமாகப் போற்றினர். பிறர் பொருளுக்கு ஆசை கொள்ளாத் தன்மை இவர்களிடம் நிலவியது.

8. காவிரிப்பூம்பட்டினம், மதுரை முதலிய நகரங்கள் மிகச் சிறந்த வணிகத்தலங்களாக விளங்கின.

9. நாடு சிறக்கவும் வாழ்க்கை முறை வளமாக இருக்கவும் உழவுத் தொழிலின் இன்றியமையாமை வலியுறுத்தப்பெறுகிறது.

10. நோயின் தன்மை அறிந்து அணுகி மருந்து கொடுப்பவர் சிறந்த மருத்துவராகப் போற்றப்பட்டார்.

11. அறச்சாலைகள் ஏழை எளியோரைக் காக்கும் நிறுவனங்களாக விளங்கின.

12. இலக்கியங்களின் பாடுபொருள் சமத்துவத்தை வலியுறுத்துவது என்னும் கருத்துக்கூறப்பட்டிருக்கிறது.

13. மனித வாழ்வின் அடித்தளமே அறத்தால் நிர்மாணிக்கப்பட்ட து. மனிதனின் மனவளத்தை உயர்த்துவன அறச்செயல்களே என்னும் சிந்தனை கூறப்பட்டிருக்கிறது.

14. மனிதவாழ்வு இன்பம் துன்பம் நிறைந்தது. ஆகையால் அத்தகைய வாழ்வுக்குள்ளும் இன்பம் தேடும் தேடல் வலியுறுத்தப் பெறுகிறது.

15. தன்னால் இயன்ற அளவு பிறர்க்கு நன்மை செய்ய வேண்டும். இயலாவிட்டால் தீமை செய்வதைத் தவிர்க்க வேண்டும்.

16. சமூகம் ஏற்க இருவரும் மனதால் ஒன்றுபட்டுப் பெரியோரால் சேர்த்து வைக்கப்படும் திருமணமுறை வரவேற்கப்பட்டது.

17. காதல் திருமணங்களுக்கு எதிர்ப்பு இருந்த தன்மையும், காந்தருவமும் சுட்டப்படுகிறது.

18. மனவளத்திற்கும், பண்பாட்டு நாகரிக வளர்ச்சிக்கும் கல்வியே அடிப்படை என்னும் கருத்துக் கூறப்படுகிறது.

19. வினை செய்தலே மானிடர்க்கு உயிர்நாடி என்னும் கருத்து பெறப்படுகிறது.

20. மக்களுக்கு நன்மை செய்யும் அறச்சிந்தனையில் பல்வேறு தொழில்களால், பல்வேறு பொருட்கள் உருவாக்கப்பட்டன.

21. மனிதர்கள் தீமை செய்வதைத் தடுக்கவும் நற்செயல்களில் ஈடுபடவும் வழிபாட்டுமுறை அமைக்கப்பட்டது.

22. பண்பாட்டையும் நாகரிகத்தையும் விளக்கி ஒற்றுமை உணர்வை ஏற்படுத்துவதாக விழாக்கள் விளங்கின.

23. நீண்டகாலமாக வழக்கில் இருந்த நிகழ்வுகள் நம்பிக்கையாயின. அதன் மூலம் பொதுவான அறங்கள் உணர்த்தப்படுகின்றன.

24. ஒருவரோடு ஒருவர் விட்டுக் கொடுத்து, புரிந்து கொள்ளுதல் என்னும் நிலையில் சமூகநல்லிணக்கம் பற்றிய கருத்துகள் கூறப்படுகின்றன.

25. நன்மை தரும் செயல்கள் செய்வது தவிர்த்துத் தீமையான செயல்கள் செய்வதால் அறம் அழியும், அநீதி பெருகும் என்னும் கருத்து பெறப்படுகிறது.

26. உயர்விலும் தாழ்விலும் சமநிலையான நடுநிலை மனத்துடன் செயல்பட வேண்டும் என்னும் கருத்து உணர்த்தப்படுகிறது.

27. பண்பின்மையால் குற்றங்கள் பெருகும் நிலை உரைக்கப்படுகிறது.

28. குற்றம் பொறுத்தல், குற்றம் செய்தவரைப் பொறுத்துத் திருந்த வைக்கும் நிலையை எடுத்துக் கூறுகிறது.

29. பொதுநலம் சமுதாய உயர்விற்குப் பயன்படும் தன்மை எடுத்துக் காட்டப்படுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. சந்திரசேகரன்(பதி.), **சங்க இலக்கியம் பன்முக நோக்கு**, மக்கள் அச்சகம், சென்னை, ஜூன் 2001, ப. 31.
2. **குறள்**. 467, ப. 260.
3. தி.சு. நடராசன், **திறனாய்வுக் கலை**, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை - 98, ஆகஸ்டு 1996, ப. 50.
4. மேற்படி. பக். 156- 157.
5. வே. முத்துலக்குமி, **பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அற நெறிகள்,** அனிதா பதிப்பகம், திருச்சி, மே 1999, ப. 162.
6. **குறள்**. 739, ப. 419.
7. **ஐங்**.1, ப. 1.
8. மேற்படி . 2, ப. 2.
9. மேற்படி. 3, ப. 3.
10. **மணிமேகலை,** பாத்திரம் பெற்ற காதை 76-77, ப. 131.
11. **ஐங்**. 5, ப. 4.
12. **குறள்**. 734, ப. 416.
13. **ஐங்**. 4, ப. 3.
14. மேற்படி.7, ப. 5.
15. மேற்படி.8, ப. 5.

16. மேற்படி. 9, ப. 6.

17. மேற்படி. 387, ப. 168.

18. **திரு**. 180-183, ப. 40.

19. **மதுரை**. 468-473, ப. 201.

20. **குறு**. 156, ப. 225.

21. **பதிற்**. 24 : 6-8, பக். 94-95.

22. **குறள்**. 120, ப. 76.

23. **மதுரை**. 120-122, ப. 180.

24. மேற்படி. 395- 406, ப. 196.

25. **பட்டின**. 206-212, ப. 114.

26. மேற்படி.185-191, ப. 112.

27. **மதுரை**. 500-506, ப. 203.

28. **குறள்**. 1031, ப. 594.

29. **சிறு**. 283, ப. 156.

30. **பெரும்**. 197-206, பக். 80-81.

31. **புறம்**. 375:6, ப. 300.

32. க.த. திருநாவுக்கரசு, **தமிழர் நாகரிக வரலாறு**, முதல் பகுதி, விடிவெள்ளி தொல்காப்பியர் நூலகம், சென்னை, 1962, பக். 166-167.

33. **புறம்**. 35 : 25-26, ப. 86.

34. **குறள்.** 948, ப. 544.

35. **நற்.** 136: 2-3, ப. 247.

36. **பட்டின.** 42-50, பக். 104 -105.

37. **மதுரை.** 526-535, ப. 204.

38. **குறள்.** 996, ப.572.

39. **நற்.** 226, ப. 411.

40. **பாரதியார் கவிதைகள்,** பாப்பாபாட்டு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, ப. 249.

41. **புறம்.** 183 : 8-10, ப. 346.

42. மேற்படி. 192, ப. 359.

43. **திரு.** 1. ப. 29.

44. **நெடு.** 1. ப. 53.

45. **பெரும்.** 1, ப. 68.

46. **முல்லை.** 1, ப. 162.

47. **மதுரை.** 1-4, ப. 174.

48. **குறள்.** 1, ப.1.

49. **கம்பராமாயணம்,** பாலகாண்டம், 1, ப. 5.

50. **குறள்.** 45, ப. 37.

51. **புறம்.** 28 : 1- 6, ப. 72.

52. மேற்படி. 29 : 24-26, ப. 74.

53. மேற்படி. 357, பக். 259 - 260.

54. **பழமொழி**. 216, ப. 120.

55. **பரி**. 19: 10, ப. 191.

56. மேற்படி. 3: 65 (திருமால்), ப. 24.

57. மேற்படி. 3: 74 (திருமால்), ப. 25.

58. **குறள்**. 37, ப. 31.

59. அ. தட்சிணாமூர்த்தி, **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**, யாழ் வெளியீடு, சென்னை , 1999, ப. 5.

60. **புறம்**. 9 : 1-5, ப. 32.

61. மேற்படி. 194, பக். 363-364.

62. மேற்படி.195: 6-7, ப. 365.

63. **தொல்**. கற்பியல் 140, ப. 249.

64. **அகம்** . 90 : 11-14, ப. 275.

65. **குறள்**. 410, ப. 232.

66. **பட்டின**. 169-171, ப. 111

67. **புறம்**. 183, ப. 345.

68. மேற்படி.46 : 3, ப. 106.

69. மேற்படி. 183, பக். 345-346.

70. மேற்படி. 206, ப.18.

71. மேற்படி. 197, பக். 369-370.

72. மேற்படி. 72 : 13-17, ப. 153.

73. மேற்படி. 53 : 12-13, ப.117.

74. **சிலப்பதிகாரம்,** அடைக்கலக்காதை, 120-121, ப. 233.

75. **புறம்**. 312, ப.191.

76. மேற்படி. 238, ப. 74.

77. **அகம்**. 390, ப.188.

78. **புறம்**. 335, ப. 225.

79. **பட்டின.** 86-93, ப.107.

80. **புறம்**. 52, ப. 115.

81. **நற்**. 202, ப. 365.

82. **குறள்**. 69, ப. 50.

83. **அகம்**. 66, ப. 213.

84. மேற்படி. 352, ப. 110.

85. **புறம்**. 191, ப. 357.

86. **அகம்**. 384, ப. 175.

87. **புறம்**. 396, ப. 352.

88. **அகம்**. 268, ப. 358.

89. **புறம்**. 5, பக். 25-26.

90. மேற்படி. 29, ப. 74.

91. **குறு**. 292, ப. 435.

92. **கலி**. 148, ப. 411.

93. **பழமொழி**. 114, ப. 70.

94. **புறம்**. 34, ப. 83.

95. **பதிற்**. 79, ப. 374.

96. **புறம்**. 77, ப. 162.

97. மேற்படி. 197, ப. 370.

98. மேற்படி. 180, ப. 341.

99. மேற்படி. 387, ப. 330.

100. **பரி**. 12 : 55, ப. 140.

101. **புறம்**. 211, ப. 27.

102. **பெரும்**. 39-41, ப. 70.

103. **கலி**. 3, ப. 30.

104. மேற்படி. 124 : 3-4, ப. 340.

105. **அகம்**. 115, ப. 363.

106. **புறம்**. 58, ப.127.

107. **குறள்**. 151, ப. 92.

108. **குறு**. 10, ப. 17.

109. **நற்**. 116, ப. 213.

110. **புறம்**. 182, ப. 344.

111. **அகம்**. 54, ப. 178.

112. **பதிற்**. 38, ப. 171.

பண்டைய தமிழ்ச் சமுதாயத்தில் அகம் புறம் என்னும் இருகூறுகள் போற்றப்பட்டன. அகம் இல்வாழ்க்கைக்கும், புறம் இல்வாழ்க்கை அல்லாத பிற ஒழுக்கங்களுக்கும் பற்றுக் கோடாக அமைந்தன. சங்க காலப்புறப் பாடல்களும் அகப்பாடல்களும் வீரத்தையும் காதலையும் மட்டுமே இரு கண்களாகப் போற்றாமல் சமூகத்தில் உள்ள அனைத்துக் கூறுகளையும் சிறப்பித்துக் கூறுவதில் முன் நிற்கின்றன.

சங்க இலக்கியங்கள் கூறும் அரசியல் கருத்துகள் புற இலக்கியங்களேயன்றி அக இலக்கியங்களிலும் நிரம்பியிருக்கின்றன. அரசியல் - நாட்டை ஆளும் அரசனின் ஆளுமை பற்றிப் படிக்கும் ஒன்றாக அரசியலைக் கொள்ளலாம். நாடு சிறப்புற்றிருப்பதை அரசனின் ஆட்சிச் சிறப்புத் தான் உணர்த்தும். அதனால் தான் பண்டைய புலவர்கள் அரசனது ஆட்சிச் சிறப்பின் பெருமைகளைக் கூறிப் பாடல்கள் பல புனைந்துள்ளனர்.

நாட்டினது உயர்வு என்பதும், வளம் என்பதும் அமைதியான வாழ்க்கை என்பதும் அமைதியையும் ஆட்சி செய்யும் முறையையும் சார்ந்ததாகும். பண்டைய தமிழகத்தைச் சேர, சோழ, பாண்டியர்களும், குறுநில மன்னர்களும் ஆண்டு வந்தனர். புறநானூறு இலக்கியம் பல்வேறு வேந்தர்களை அறிமுகம் செய்யும் வரலாற்றுக் களஞ்சியமாகத் திகழ்கிறது. தமிழ்ப் பாரம்பரியத்தின் அரசியல் கருத்துகளை எல்லாம் தொகுத்துக் கூறும் கலைக்களஞ்சியமாகப் புறநானூறு திகழ்கின்றது. இந்த இயல் அரசியல் சார்ந்த செயல்பாடுகளை ஆராயும் தன்மையதாக விளங்குகிறது.

## அரசன் சிறப்பு

ஒரு நாட்டின் வாழ்வும் வீழ்வும் ஆட்சித் திறனில் இருக்கின்றது. மக்களைக் காக்கும் முறை, ஆட்சி செய்யும் முறை முதலியவை அரசன்

எத்தகைய தன்மை உடையவன் என்பதைக் காட்டிவிடும். அதனால் அரசன் சிறந்தவனாக இருத்தல் நாட்டிற்கு நலம் பயப்பதாகும். கொடைத் தன்மை மிக்கவனாக இருக்கின்ற போதும், எளியவர்களை ஆதரிக்கின்ற போதும் அரசனின் சிறப்புகள் பெரிதும் வெளிப்படுகின்றன. நல்லாட்சி மிக்க நாட்டில் தான் அனைத்து அறங்களும் சிறந்து விளங்கும்.

" அரசியலை எவரும் அசட்டை செய்துவிட முடியாது. அதை மறந்து விடவும் முடியாது. நாட்டின் உயிர் ஆட்சி தான். நாட்டுக்கு நலம் புரியும் திறமுள்ள அரசியல் வேண்டும். ஒழுங்கான ஆட்சியுள்ள நாடு தான் உயர்ந்து நிற்கும். நல்ல ஆட்சியற்ற நாட்டிலே எந்த நன்மையும் நிலவாது "[1] என்பார் சாமி.சிதம்பரனார்.

" பண்டைத் தமிழகத்தை ஆண்ட 15 பாண்டிய மன்னர்களையும், 18 சோழ வேந்தர்களையும், 18 சேர அரசர்களையும் சிறப்பித்துக் கூறுகிறது. இமயவரம்பன், சேரன் செங்குட்டுவன், பாண்டியன் நெடுஞ்செழியன், சோழன் கரிகாலன் ஆகியோர் பண்டு வாழ்ந்த பெருமை மிக்க பேரரசர்களாவர். மேலும் பழனி மலையை ஆண்ட பேகன், பறம்பு மலையை ஆண்ட பாரி, குதிரை மலையை ஆண்ட அதியமான், கொல்லி மலையை ஆண்ட ஓரி, பொதியை மலையை ஆண்ட நள்ளி, கோடை மலையை ஆண்ட கடிய நெடுவேட்டுவன் போன்ற குறுநில மன்னர்களின் வீரத்தையும், வெற்றிப் பெருமிதத்தையும் விளக்கிப் பேசுகிறது "[2] என்று அடைக்கலசாமி அவர்கள் புறநானூற்றின் சிறப்பைக் கூறுவார். இக்கருத்துகள் சங்க கால மன்னர்களின் அரசியல் திறத்தைக் கூறுவதாக அமைந்திருக்கிறது. தமிழகம் முழுமைக்கும் ஆட்சி செலுத்திச் சிறந்து விளங்கிய அரசர்களின் பட்டியலை எடுத்துரைப்பதாக இக்கருத்துகள் உள்ளன.

எளியவர்க்களுக்காகவும், இரவலர்களுக்காகவும் இரங்கும் மனநிலையைப் பல்வேறு பாக்கள் சுட்டி நிற்கின்றன.

*" பொருநர்க்கு ஆயினும் புலவர்க்கு ஆயினும்*
*அருமறை நாவின் அந்தணர்க்கு ஆயினும்*
*கடவுள் மால்வரை கண் விடு த்தன்ன*
*அடையா வாயில் அவன் "* [3]

பொருநர், புலவர், அந்தணர், சான்றோர் புகுவதற்காகவே நல்லியக் கோடனின் அரண்மனை வாயில் திறக்கப்பட்டிருக்கும். மற்றோர் (பகைவர் முதலானோர்) புக இயலாத கடுமை உடையதெனச் சிறப்பிக்கப்படுகிறது.

*" முதுவோர்க்கு முகிழ்த்த கையினை எனவும் "* [4]

என்னும் அடி ஐம்பெரும் குரவர்க்கும் எப்போதும் குவித்த கையை உடையவன் என நல்லியக்கோடன் சிறப்பிக்கப்படுகிறான்.

நல்ல அரசனானவன் தன்னுடைய இன்பத்தைப் பெரியதாக நினைக்காமல் தன்னைச் சார்ந்தவருக்கு உறுதுணையாக இருந்து ஆற்றுவிக்க வேண்டும். அத்தகையதொரு நிலையை நெடுநல்வாடை எடுத்துக் கூறுகிறது.

*" நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்,*
*சிலரொடு திரிதரும் வேந்தன் "* [5]

போர் புரியும் பொருட்டுப் பாசறை அமைத்துத் தங்கியுள்ள பாண்டியன் தன்னுடைய இன்பத்தைப் பாராது இரவிலும் துயில் கொள்ளாமல் தன்

வீரர்களுக்கு ஆறுதல் சொல்வதாகவும், மறுநாள் போர்த்திட்டத்தை வகுப்பதாகவும் இருப்பது அவனது பண்பட்ட ஆளுமைத் தன்மையை வெளிக்காட்டுவதாக அமைகின்றது.

சூரியனின் பல்வேறு குணங்களுள் தூய்மையும் ஒன்று. இதனை உணர்ந்து சங்கப்புலவர்கள் பாடியுள்ளனர்.

*" ஞாயிறு அன்ன அவன்வசை இல் சிறப்பு "* [6]

என்னும் அடியில் அரசனைச் சிறப்பிக்க ' சூரியனைப் போன்ற குற்றமில்லாத் தலைமை ' என்னும் தொடர் கையாளப்பெற்றிருக்கிறது.

*" தொலையா நல் இசை உலகமொடு நிற்ப,*
*பலர்புறம் கண்டு அவர் அருங் கலம் தரீஇ,*
*புலவோர்க்குச் சுரக்கும் அவன் ஈகை மாரியும்*
*இகழுநர்ப் பிணிக்கும் ஆற்றலும் புகழுநர்க்கு*
*அரசு முழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு*
*தூத் துளி பொழிந்த பொய்யா வானின்*
*வீயாது சுரக்கும் அவன் நாள்மகிழ் இருக்கையும்*
*நல்லோர் குழீஇய நா நவில் அவையத்து*
*வல்லார் ஆயினும் புறம் மறைத்து, சென்றோரைச்*
*சொல்லிக்காட்டி, சோர்வு இன்றி விளக்கி*
*நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கமும் "* [7]

இப்பாடலடிகள் பொருட்களை வரையாது புலவர்க்கு வாரிக் கொடுக்கும் வள்ளண்மையினையும், தன்னை இகழ்வாரை வென்று முடிசூடும்

தன்மையினையும், அனைவரையும் புரிந்து அரவணைத்து வாழும் அறநெறியையும் அரசனின் இயல்புகளாகக் கூறுகின்றன.

மிகச் சிறந்த அரசனானவன் தனது நாட்டின் நலனில் கவனம் செலுத்துதல் வேண்டும். அவனது செயல்பாடுகள் நாட்டைக் குறுகிய வழியில் செல்லாது தடுத்து மனதையும், சமூகத்தையும் விடியவைக்கும் செயலமைப்பைக் கொண்டது.

பட்டினப்பாலையில் சோழன் கரிகாலனின் சிறப்பைப் பாடவரும் புலவர்,

*" காடு கொன்று நாடு ஆக்கி,*
*குளம்தொட்டு வளம்பெருக்கி,*
*பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி,*
*கோயிலொடு குடி நிறீஇ*
*வாயிலொடு புழை அமைத்து*
*ஞாயில் தொறும் புதை நிறீஇ "* [8]

என்கிறார். காடுகளை அழித்து நாடாக்கி, நிலத்தை வளப்படுத்தி, குளங்கள் வெட்டி, பாசன வசதி செய்து, கோவில்கள் கட்டி மக்கள் நிறைந்து வாழும் பொருட்டு உறையூரை விரிவு செய்தவன் கரிகாலன் என்னும் கருத்துகள் அரசன் செயல்பட வேண்டிய முறையினை எடுத்து இயம்புகிறது.

அரசனின் ஆட்சிச் சிறப்பைப் பொறுத்தே புகழ் பெறுதல் நிகழும். அறநெறியில் வழுவாது தொடர்ந்து வரும் அரசாட்சிப் பரம்பரை சிறப்பினதாக இருக்கும்.

*" குலவிச்சை கல்லாமல் பாகம்படும் "* [9]

என்னும் பழமொழி கூறுவது போலத் தொன்றுதொட்டு வரும் அரசியல் அனுபவமும் சான்றோரால் புகழப்பட்டிருக்கின்றது.

அரசியலில் உள்ளவர்கள் தவறு செய்யக்கூடாது. அறநெறி நிரம்பிய மனத்துடன் பெரியோர்களாகிய முன்னோர்கள் சென்ற வழியில் சென்று உலகம் தோன்றிய காலம் தொட்டு, நிலவு பிறையாய் இருந்து வளர்வது போல உன் குலமும் சிறக்கட்டும் என்று மாங்குடி மருதனார் போற்றிப்பாடும் திறம் சிந்திக்கத்தக்கது. இதனை,

*" அரசியல் பிழையாது அறநெறிகாட்டி*
*பெரியோர் சென்ற அறவழிப் பிழையாது*
*குடமுதல் தோன்றிய தொன்று தொழ பிறையின்*
*வழிவழிச் சிறக்க நின்வலம் படு கொற்றம் "* [10]

என்னும் பாடலடிகளால் அறியலாம். நாடு எவ்வளவு வளம் பெற்றதாக இருந்தாலும் அதனால் பலனில்லை. நாட்டை நல்வழியில் நடத்திச் செல்ல நல்ல தலைமை வேண்டும். அதனால் தான் மோசிகீரனார்,

*" நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர்அன்றே*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்*
*அதனால், யான்உயிர் என்பது அறிகை*
*வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே "* [11]

நாட்டு மக்களின் உயிரைக் காப்பது நெல்லும் நீருமன்று. அந்நாட்டை ஆளும் மன்னனே எனக் குறிப்பிடுகின்றார்.

சிறந்த அரசனை மனதில் கொண்டு வள்ளுவர்,

*" முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு*
*இறை என்று வைக்கப்படும் "*[12]

நீதிப்படி அரசாட்சி நடத்தி மக்களைக் காப்பவனே சிறந்த அரசன் எனக் குறிப்பிடுகின்றார்.

*" சினனே காமங் கழிகண் ணோட்டம்*
*அச்சம் பொய்ச்சொ லன்புமிக வுடைமை*
*தெறல்கடு மையொடு பிறவு மிவ்வுலகத்*
*தறந்தெரி திகிரிக்கு வழியடை யாகுந்*
*தீதுசே ணிகந்து நன்றுமிகப் புரிந்து*
*கடலுங் கானமும் பலபய முதவப்*
*பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது*
*மையி லறிவினர் செவ்விதி னடந்து தம்*
*அமர் துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்*
*மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய*
*ஊழி யுய்த்த யுரவோ ரும்பல் "*[13]

பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடிய இப்பாடல் சேரமன்னர்களும் அவர் முன்னோர்களும் அறத்தினை மட்டுமே போற்றி வந்தனர் என்னும் உண்மையை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

இரவலர்கள் நாடிவரும் வேளையில் பொருளைக் கொடுத்துக் காப்பதும், அவர்கள் நலிவடைந்த வேளையில் காப்பதும், சுற்றத்தைப் போற்றலும் இயல்பாயிருந்தன.

நடுவு நிலைமையோடு இருந்து சோர்வில்லாமல் பாடுபடும் இயல்பு உடையவனாக மன்னர் இருந்த தன்மையை,

*" முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும்*
*வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி*
*இடைத் தெரிந்து உணரும் இருள் தீர் காட்சி,*
*கொடைக் கடன் இறுத்த கூம்பா உள்ளத்து*
*உரும்பு இல் சுற்றமொடு இருந்தோன் "* [14]

நல்ல அரசனைச் சுற்றிக் கொடுமை செய்யாத நல்ல அமைச்சர்கள், சான்றோர்கள், நண்பர்கள் இருப்பார்கள் என்பதை இப்பாடலடிகள் எடுத்துக் கூறுகின்றன.

பண்டைக் காலத்தில் தன்னலமற்ற மன்னர்கள் வாழ்ந்தனர். மாற்று நாட்டு மன்னர்கள் மக்களை இகழும் போதும் அவர்களில் பலரை வென்று நாட்டைக் காப்பேன் என்று வஞ்சினம் கூறும் நிலையை,

*" சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்குஅகப் படேஎன் ஆயின் பொருந்திய*
*என் நிழல் வாழ்நர் சென்னிழல் காணாது*

*கொடியன்எம் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்*

*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக "* [15]

என்னும் பாடல் எடுத்தியம்புகிறது.

நாடு சிறக்கவும் முறைப்படி நாட்டில் அனைத்துச் செயல்களும் நடைபெறவும் சிறந்த அரசன் தேவை என்பதையே இலக்கியப் பாக்கள் வலியுறுத்துகின்றன.

## செங்கோன்மை

செங்கோன்மை மன்னனின் நீதித் தன்மையைக் கூறும் சொல்லாகும். முறையறிந்து நீதி வழங்கலும், முறையறிந்து அறம் செய்தலும், நாட்டைக் காத்தலும், மக்களைப் பேணுதலும் அரசனின் தலையாய அறங்களாகும். மன்னன் நடுவு நிலைமை மாறாமல் இருக்கின்ற போதுதான் நாடு சிறக்கும். தவறாக நீதி வழங்குகின்ற போது அரசனின் அறமே கூற்றாக நின்று அழிவை உண்டாக்கும் இயல்புடையது. அரசன் அதிகாரத்தைச் சுமந்திருக்கும் போது வேலைப்பாட்டோடு செய்யப்பட்ட கோலைக் கையில் கொண்டிருப்பான். அதுவே செங்கோலாகும். அரசனின் ஆட்சி நேர்மையானது என்பதற்கு எடுத்துக் காட்டாக அது நேராகச் செய்யப்பட்டிருக்கும்.

அரசன் செய்யும் நல்லாட்சிக்கு அடையாளமாகவே வெண்கொற்றக் குடையும், செங்கோலும் கொள்ளப்பட்டன.

*" அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து*

*முறைவேண்டு பொழுதின் பதன் எளியோர் "* [16]

என்னும் பாடலடிகள் அக்கருத்திற்கு அரண் செய்கின்றன. நன்மையாகிய செயல்களைச் செய்து அறமுறைப்படி வாழ்கின்ற அரசனானவன் நீதியை வழுவாது போற்றும் சிறப்பினை உடையவன். பொன்னை உரைத்துப் பார்த்து மாற்றுக் காணும் கட்டளைக் கல் போலும் செம்மையான மனம் கொண்டவனாக இருத்தல் வேண்டும் என்கிறது பெரும்பாணாற்றுப்படை. இதனை,

*" பொன்காண் கட்டளை "* [17]

என்னும் பாடலடியால் அறியலாம்.

தீயசெயல்கள் பெருகும் போது அதனைக் கண்டிப்பதாக அமைந்திருக்கிறது அரசனின் செங்கோல் இதனை,

*" அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்*
*பல் வேல் திரையன் "* [18]

என்னும் பாடலடியால் அறியலாம்.

" குற்றங்களை முறைப்படிக் கேட்டறிந்து நீதி வழங்கும் முறைமை அறங்கூறு அவயத்தில் நிகழ்த்தப் பெறும். அறங்கூறு அவையம் அச்சம், அவலம், ஆர்வம் முதலியன நீங்கிய இடமாகும். செம்மையான உண்மைகளால் அறத்தோடு விளங்குவது அறங்கூறு அவையமாகும் " [19] நீதி உரைப்பவர்கள் பந்தம், பாசம், உறவுநிலைகள், பற்றுள்ளம் முதலியவற்றினின்றும் நீங்கியவர்களாக இருந்து நீதி வழங்க வேண்டுமென்பதை மேற்கண்ட கருத்து உறுதிப்படுத்துகிறது. " அறக்கடவுள்

பொருந்திய அறங்கூறு அவையத்தில் காட்சிக்கு எளியவதாய் இருந்து கேட்க வேண்டிய காலத்து நீதிகேட்பர் "[20]

மழைவளம் இல்லாமல் போனாலும், விளைச்சல் குறைந்தாலும், மக்களிடையே இயல்பின்மையான செய்கைகள் தோன்றினாலும் இவ்வுலகம் அதன் காரணமான மக்களைக் குறை கூறாது. மன்னனையே குற்றம் சொல்லும். அதனால் நாட்டின் நடைமுறையில் மன்னன் நீதிவழுவாமல் இருத்தல் நலம் பயக்கும். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று அறங்களும் மன்னரிடம் இணைந்து இருப்பதனால் அரசன் போற்றுதலுக்கு உரியவன். அவ்வாறு போற்றாதிருத்தல் அறியாமை. இதனை,

*" ..........அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்*
*ஆற்றும் பெருமநின் செல்வம்*
*ஆற்றா மைந்நின் போற்றாமையே "*[21]

என்னும் பாடலடியால் அறியலாம். நாட்டின் அமைதி அரசனைச் சார்ந்தது.

அவனுடைய செங்கோன்மைத்திறமும், கொடைத்திறனும் எந்த அளவு நேர்மை உள்ளதோ அந்த அளவு நாடு சிறந்திருக்கும்.

*" சோறு படுக்குந் தீயோடு*
*செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது*
*பிறிதுதெறல் அறியார் நின் நிழல்வாழ் வோரே*
*திருவில் அல்லது கொலைவில் அறியார்*
*நாஞ்சில் அல்லது படையும் அறியார் "*[22]

இப்பாடல் நாட்டில் நிலவும் அமைதி நிரம்பிய ஆட்சியை அறிமுகம் செய்கிறது. அரசனின் குடை நிழலில் வாழும் குடிமக்கள் சோறு சமைக்கின்ற போது ஏற்படுகின்ற நெருப்பின் சூட்டையும், ஞாயிற்றின் சூட்டையும் தவிர, வேறு வெம்மையை அறியாதவர்கள். இந்திரனின் வில்லைத் தவிர வேறு எந்தப் படைக் கலன்களையும் அறியாதவர்கள் எனக் குறிப்பிடுகிறது. எப்போதும் சுற்றமொடு வாழவேண்டும் எனக் குறிப்பிடுகின்றார். இதனை,

*" பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்,*
*நாஅல் வேத நெறி திரியினும்*
*திரியாச் சுற்றமொடு "* [23]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. செங்கோலின் செம்மையில் அறிவு நிரம்பிய சான்றோர்கள் பெருகுவர். நல்லவர்கள் நல்லாட்சியை விரும்புவதனால் நல்லாட்சியில் நல்லவர்கள் பெருகுவர் எனக் கூறுகிறது இப்பாடல்.

*" கோஒல் செம்மையின் சான்றோர்ப் பல்கி "* [24]

நீதியைக் காக்க வேண்டிய அரசன் முறையறிந்து நீதி வழங்க வேண்டும். அவ்வாறான நிலையில் அறங்கூறு அவையத்தில் இவர் நம்முடையவர் என அவர் செய்த கொடுமையைப் பொறுத்துச் செங்கோல் வழுவாமல் செயல்பட வேண்டும். அயலவர் என்று அவர்களின் நற்குணங்களை அழிக்காமல் அறத்தை நிலை நாட்ட வேண்டும். இதனை,

*" ...........நமரெனக் கோல்கோ டாது*
*பிறர்எனக் குணம் கொல் லாது "* [25]

இப்பாடலடிகள் நிரூபிக்கின்றன. அரசன் செங்கோன்மையில் சிறந்தவனாக இருப்பதால்

*" அறநெறி முதற்றே அரசின் கொற்றம் "* [26]

எனக் கூறப்பெற்றது. செங்கோல் வழுவாமல் செய்யப்படும் ஆட்சியே சிறந்த ஆட்சி. அதனையே அனைவரும் விரும்புவர். மரநிழல் குளிர்ச்சி தரும் தன்மை உடையது. அதற்கு ஒப்பானதாக மன்னனின் குடைநிழல் கூறப்பட்டுள்ளது.

*" கடன்அறி மன்னர் குடைநிழற் போலப்*
*பெருந் தண் ணென்ற மர நிழல் "* [27]

வெயிலில் நடந்து களைத்துப் போனவர்களுக்கு மரநிழல் களைப்பைத் தீர்த்துக் குளுமைப்படுத்துவது போல , நன்மை செய்யும் வெண்கொற்றக் குடைநிழல் மக்களை நன்முறையில் காப்பதற்கு உகந்ததாகும்.

நல்லனவற்றைத் தேர்ந்து தீமையைக் கூறுவதனால் செங்கோல்,

*" அல்லது கடிந்த அறம்புரி செங்கோல் "* [28]

எனப்பட்டது. அறம் வழுவாமல் நடுநிலைமையோடு செயல்படும் அரசுக்குச் செங்கோன்மைத் தன்மையே ஆதாரம். அரசனின் செயல்பாடுகள் வேறுபாடின்றி நடைபெற வேண்டும் என்பதைச் செங்கோன்மையைக் கூறும் பாடல்கள் எடுத்துக் கூறுகின்றன.

**குடை**

அரசனை அலங்கரிக்கும் வெண்கொற்றக் குடை தூய்மை, கொற்றம், வெற்றி முதலியவற்றின் சின்னமாகப் போற்றப்படுகின்றது. மக்களைத் துயரின்றித் தண்ணியதாகக் காப்பதால்,

*" காவல் வெண்குடை "* [29]

எனப் பெயர் பெற்றது. முழுமதியின் ஒளி குளுமை தரக்கூடியது.

*" உவவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை*
*நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற "* [30]

முழுமதியினது வடிவத்தைக் கொண்ட உயர்ந்த வெண்கொற்றக் குடையை உடையவன் அரசன் எனக் கூறப்பெறுகின்றது. மன்னனின் காவல் திறனை உணர்த்தும் வகையில்,

*" கடனறி மன்னர் குடைநிழல் போல "* [31]

என்னும் பாடலடி கையாளப் பெற்றிருக்கிறது.

"மன்னனின் வெண்கொற்றக் குடையானது மன்னனை இயற்கைச் சீற்றங்களில் இருந்து காப்பதற்கன்று. அது தம் ஆட்சியின் கீழ் வாழும் மக்களைக் காப்பதையே கடமையாகக் கொண்டதாகும் " [32]

மன்னனது வெண்கொற்றக் குடை அவனது அரசாட்சியின் சிறந்த சின்னமாகவும், தண்மையான ஆட்சியின் அமைப்பாகவும் திகழ்கின்றது. நல்லாட்சியின் சின்னமாகக் குடை விளங்குகிறது.

## கொடைத்திறம்

தன்னை நாடி வந்த இரவலர்களுக்கும், புலவர்களுக்கும் நல்ல மனதோடு பொருட்களைக் கொடுத்து வறுமையை நீக்கும் உயர்ந்த உள்ளம் படைத்தவர்கள் சங்ககால மன்னர்கள். தங்களின் பொருட்கள் அடுத்தவர்க்கும் பயன்படுமாற்றையும், பொருட்கள் பெறும் போது அவர்களின் மகிழ்வு கண்டு மனநிறைவு கொள்வதும் அவர்களின் உயர்ந்த குணமாகும். சங்க மன்னர்களின் வள்ளண்மையைச் சங்கப் பாக்கள் பல எடுத்துக் கூறுகின்றன. தன் செல்வம் தனக்கன்றிப் பிறர்க்கும் பயன்பட வேண்டும் என்னும் உயரிய மனத்தைச் சங்க இலக்கியங்களிலே தான் காணமுடிகிறது. மன்னர்கள் தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் உள்ளம் கொண்டவர்கள்.

*" இனியவை பெறினே தனி தனி நுகர்கேம்*
*தருகென விழையாத் தாவி னெஞ்சத்துப்*
*பகுத்தூண் டொகுத்த வாண்மைப்*
*பிறர்க்கென வாழ்தி நீ யாகன் மாறே "* [33]

இனியவை பெற்ற போதும் தான் மட்டும் தனித்து உண்ண விரும்பாமல் பிறருக்கும் பகுத்துக் கொடுத்து உண்ணும் தன்மை பெற்ற மன்னன் தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழ்பவன் என்பதை இப்பாடல் எடுத்துக் கூறுகிறது. தான் இவ்வளவு பொருளைக் கொடுத்து விட்டோமே, நமது பொருள் போகிறதே என்று மன்னர்கள் எண்ணுவதில்லை. கொடுப்பதால் வளரும்

புகழையும் பெரியதாக எண்ணுவதில்லை. இதனை,

*" ஈத்ததிரங்கா னீத்தொறு மகிழான்*
*ஈத்தொறு மாவள்ளியன் "* [34]

என்னும் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. இரவலராகவோ, புலவராகவோ தன்னை நாடி வந்தவரை வரவேற்று உபசரிக்கும் அரசனானவன் தன்னை நாடி வந்தவரின் முகக் குறிப்பை உணர்ந்து கொடுக்கும் வள்ளண்மையைப் பெற்றிருந்தான்.

*" இல்லது நோக்கி இளிவரவு கூறாமுன்*
*நல்லது வெஃகி வினை செய்வார் "* [35]

தன்னை நாடி வந்தவர்களுக்கு இல்லை என்னும் சொல்லையே இல்லை என்றாகும் படி கொடுத்து மகிழ்ந்தவர்கள் மன்னர்கள். இரவலராக வந்து கையேந்தி நின்ற போது கைநிறையப் பொருள் கொடுத்துத் தொடர்ந்து வரும் இரவலர்களுக்குப் புதிய புதிய பொருட்களையும் கொடுத்து மகிழ்ந்தனர்.

*" இரப்போர் ஏந்துகை நிறையப் புரப்போர்*
*புலம்பில் உள்ளமொடு புதுவதந் துவக்கும்*
*பெரும் பொருள் "* [36]

" பொருளைப் படைத்தவர்கள் அதனைப் பிறர்க்குக் கொடுத்தலும் இல்லோர்கள் இருப்போரை நாடிச் செல்வதும் இயற்கை. அது விண்ணுலகில்

நடைபெறுவது இல்லை. உன் நாட்டில் தான் உண்டு" [37] எனக் கிள்ளி வளவனின் கொடைத்திறனைப் புகழ்கிறார் ஆவூர் மூலங்கிழார்.

*" படைவேண்டுவழி வாள்உதவியும்*
*வினைவேண்டுவழி அறிவுஉதவியும்*
*வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து "* [38]

வேண்டுபவர்க்கு வேண்டுவன ஈதலே கொடை. தனக்கு வேண்டாதவரை ஒதுக்குதல் கொடையின் சிறப்பன்று என மொழிகிறது இப்பாடல். புலவர்கள், இரவலர்கள் மன்னனை நாடிச்சென்று பரிசில் பெற இயலாத நிலையில் அவனுக்கு ஏற்படும் துன்பம் அளவிறந்தது. பொருள் கொடுக்க முடியாத நிலை புரவலனுக்கு ஏற்படுகிற போது பெருந்துன்பமாக அமையும்.

*" பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்*
*நாடுஇழந் ததனினும் நனிஇன் னாதுஎன "* [39]

நாடி வந்தவர்க்குப் பொருளை எப்படியேனும் முயன்று கொடுத்தல் நற்செயலாகும்.

*" எத்துணை ஆயினும் ஈதல் நன்று "* [40]

*" பாணர் தாமரை மலையவும் புலவர்*
*பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்*
*அறனோ மற்றுஇது விறல்மாண் குடுமி*
*இன்னா ஆகப் பிறர்மண் கொண்டு*
*இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே "* [41]

இப்பாடல் பாடிவரும் பாணர்க்குப் பொற்றாமரைப் பூவையும், புலவர்களுக்கு அலங்கரிக்கப்பட்ட யானை உடைய தேரினையும் வழங்கிச் சிறப்பித்தவன் முதுகுடுமிப் பெருவழுதி என்னும் குறிப்பைத் தருகிறது. இன்னார்க்கு இதைக் கொடுக்கவேண்டும் என்னும் மரபில்லாமல் நினைத்த போதே கொடுத்து மகிழும் தன்மையுள்ளவராக இப்பாடல் மன்னனை அறிமுகம் செய்கிறது.

"எல்லோர்க்கும் எல்லாப் பொருள்களையும் வரையாது வழங்கும் மன்னனே நீ சிறப்புடன் வாழ்வாய் என "[42] மன்னனை வாழ்த்துகிறது ஒருபாடல். " சோழன் நலங்கிள்ளி வரையாது வழங்கும் வள்ளண்மை பெற்றவன். தன்னை நாடி வந்தவர்க்குப் பிற வாயில்களை மிதிக்க வாய்ப்பு ஏற்படாதபடி கொடுக்கும் குணம் உடையவன்."[43]

" புவலர்கள் எத்தனை முறை சென்றாலும் மனம் மாறாமல் முதல் நாள் போலவே வரவேற்று உபசரிக்கும் எண்ணம் உடையவன் அதியமான். யானைக் கொம்பிடை வைக்கப்பட்ட கவளம் தவறாமல் நிலைப்பது போல அவன் தரும் பரிசு உறுதியானதென நம்பலாம் " [44]

" உலகமே வறுமையில் சிக்கி உழன்றாலும் வறுமையை நீக்கி விடும் தன்மை பெற்றவன், வேண்டியவர்க்கு வேண்டும் அளவு வழங்குபவன், நாடே வறண்டு போனாலும் வேண்டியவர்க்கு உதவும் தன்மை படைத்தவன் "[45] கொடுக்கும் தோறும் மகிழும் எண்ணமும் தன்னை நாடி வந்தவரைக் காத்தருள வேண்டும் என்ற எண்ணமும் மனதில் நிலைத்ததனால் அனைவர்க்கும் வழங்கும் குணம் இயல்பாகவே அமைந்திருந்தது. சங்க மன்னர்கள் கொடுத்து மகிழ்வதைக் கடமை எனக் கருதியவர்கள் என்னும் கருத்தை உணர்த்துகிறது.

*" நல்லவை தீயவும் அல்ல குவி இணர்ப்*
*புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை*
*கடவுள் பேணேம் என்னா ஆங்கு*
*மடவர் மெல்லியர் செல்லினும்*
*கடவன் பாரி கைவண் மையே "* [46]

இப்பாடல்.

" கொடுப்பதில் சிறந்தவனாக இருந்தவன் பாரி. புலவர் கபிலர் பாரி பாரி எனப் போற்றாது மழையையும் போற்ற வேண்டும். ஏனெனில் மழையும் பாரியைப் போல் வழங்கும் தன்மை பெற்றது " [47] என்கிறார்.

" பாரியைப் போர் புரிந்து வெல்வது இயலாது. நாட்டில் உள்ள ஊர்களை எல்லாம் இரவலர்கள் பாடிப் பெற்றுச் சென்று விட்டனர். நீங்கள் அவர்களைப் போலப் பாடி வந்தால் பாரியின் மலையும் யாமும் உள்ளோம் " [48] எனப் பாடுகிறார் கபிலர்.

*" மட்டுவாய் திறப்பவும் மைவிட வீழ்ப்பவும்*
*அட்டுஆன்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்*
*பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழூனி "* [49]

புகழ் பெற்ற பாரியின் பறம்பு மலை நாடி வரும் இரவலர்க்கு மதுவையும் ஆட்டுக்கிடாயின் கறியோடு சோறும் தரும் இயல்பு பெற்றது. தன்னிடம் இருக்கும் செல்வம் அடுத்தவர்க்கே பயன்பட வேண்டும் என்ற அறமனம் பண்டைய அரசர்களிடம் இருந்தமையும், நாடிச் சென்ற புலவர்கள் அரசர்களைப் பாடிப் பரிசு பெற்றதும் அவர்களின் இடையே நல்லிணக்கமான

நட்புறவை வளர்த்திருந்தது. புலவர்களின் பாடலால் கவரப் பெற்ற அரசர்கள் சிலநேரம் என்ன பரிசு கொடுக்கிறோம் என அறியாமலேயே கொடுத்தனர். பாடாண்திணையில் அமைந்த ஔவையின் பாடல் ஒன்று,

" வளையணிந்த கைகளைக் கொண்ட விறலியர் மலைப்பக்கத்தில் சென்று பறித்த இலைக்கு மேல் தூவுவதற்கு அவனிடம் சென்று கொஞ்சம் அரிசியைத்தான் கேட்டு நின்றோம். அவனோ எனது வறுமை நிலையை அறியாதவனாக மலை போன்ற யானையையே தந்துவிட்டான் " [50] எனப் பாடுகிறது.

*" மங்குல் வானத்துத் திங்கள் ஏய்க்கும் -*
*ஆடு வண்டு இமிரா அழல் அவிர் தாமரை*
*நீடு இரும் பித்தை பொலியச் சூட்டி*
*உரவுக் கடல் முகந்த பருவ வானத்துப்*
*பகற் பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு,*
*புனை இரும் கதுப்பகம் பொலிய, பொன்னின்*
*தொடை அமை மாலை விறலியர் மலைய -*
*நூலோர் புகழ்ந்த மாட்சிய, மால்கடல்*
*வளை கண்டன்ன வால் உளைப் புரவி,*
*துணை புணர் தொழில நால்கு உடன் பூட்டி*
*அரித் தேர் நல்கியும் அமையான் "* [51]

பொன்னால் செய்யப்பெற்ற தாமரை மலரைத் தலையில் சூடத்தந்து நல்லனவாகிய குதிரைகள் பூட்டிய தேரையும் கொடையாகக் கொடுக்கும் இயல்புடையவன் எனத் தொண்டைமான் இளந்திரையனைப் பெரும்பாணாற்றுப்படை புகழ்கின்றது.

" *தாள்நிழல் மருங்கின் அணுகுபு குறுகித்*
*தொழுது முன் நிற்குவிர் ஆயின் பழுதுஇன்று*
*ஈற்றுஆ விருப்பின் போற்றுபு நோக்கி நும்*
*கையது கேளா அளவை ஒய்யென,*
*பாசி வேரின் மாசொடு குறைந்த*
*துன்னற் சிதாஅர் நீக்கி, தூய*
*கொட்டைக் கரைய பட்டுஉடை நல்கி,*
*பெறல் அருங் கலத்தில் பெட்டாங்கு உண்க என,*
*பூக் கமழ் தேறல் வாக்குபு தரத்தர*
*வைகல் வைகல் கை கவி பருகி*
*எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை*
*சுரி இரும் பித்தை பொலியச் சூட்டி*
*நூலின் வலவா நுணங்கு அரில் மாலை*
*வால் ஒளி முத்தமொடு பாடினி அணிய* " [52]

என்னும் பெரும்பாணாற்றுப்படைப் பாடற்பகுதி, கரிகால் பெருவளத்தான் தன்னை நாடி வரும் பரிசிலரை உபசரிக்கும் முறையினை இப்பாடற் பகுதிகள் விளக்குகின்றன. இரவலர்கள் கரிகாலனை அணுகித் தங்கள் வறுமைத் துயரைக் கூறுகிற போது அதற்காக மனம் வருந்தி ஆர்வமுடன், ஈடுபாட்டுடன் குறைகளைக் கேட்டு, அவர்களது அழுக்குப் படிந்த ஆடைகளை நீக்கி நல்ல பட்டுடை கொடுத்து உடுத்தச் செய்து பொன்கலத்தில் உணவிட்டு அருகில் இருந்து உண்பித்துப் பொன்னையும், பொருளையும் கொடுத்து வழி அனுப்புவான் எனக் கொடைச் சிறப்பு கூறப்படுகிறது.

" *குளிரால் வருந்துய மயிலுக்குப் போர்வை*
*நல்கியவன் பேகன்* " [53]

*" முல்லைக்குத் தேர் கொடுத்தவன் பாரி "* [54]

*" குதிரைகளோடு நாட்டினையும் இரவலர்க்குக்*
*கொடுத்தவன் காரி "* [55]

*" நீலமணியினையும், நாகம் வழங்கிய ஆடையினையும்*
*ஆலின் கீழிருந்த இறைவனுக்கு விரும்பிக்*
*கொடுத்தவன் ஆய் "* [56]

*" பெறுதற்கரிய நெல்லிக்கனியை ஔவைக்குக்*
*கொடுத்தவன் அதியமான் "* [57]

*" வேண்டும் பொருளை வேண்டிய அளவு*
*கொடுப்பவன் நள்ளி "* [58]

*" சுரபுன்னை மரங்களும் மலைகளையும் உடைய*
*அழகிய நாட்டை கூத்தாடுவார்க்குக் கொடுத்தவன் ஓரி "* [59]

எனக் கடையெழு வள்ளல்களின் சிறப்புகள் சிறுபாணாற்றுப்படையில் எடுத்துக் கூறப்பெறுகின்றன.

நல்லியக்கோடன் என்னும் மன்னன் " பகை நாட்டாரை வென்று தான் கைப்பற்றிய பொருட்களைத் தன்னை நாடி வந்த பாணர், இரவலர் முதலானோர்களுக்குக் கொடுத்து வறுமையைத் தீர்க்கும் இயல்புடையவன். சிறந்த ஆடைகளையும், செல்வங்களையும் கொடுக்கும் பெருமை மிக்க மனத்தை உடையவன் " [60] எனச் சிறப்பிக்கிறது சிறுபாணாற்றுப்படை.

*" பாணர் வருக பாட்டியர் வருக*
*பாணர் புலவரொடு வயிரியர் வருக என*
*இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்*
*கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி "* [61]

என்னும் பாடலடிகளில் பாணரையும், பாடினியரையும் அழைத்து, புலவர்களையும் கூத்தரையும் வரவேற்றுச் சுற்றத்தாரையும் பாதுகாத்துத் தேர்களை யானைகளோடு வழங்கும் இயல்புடையவன் எனப் பாண்டியனைப் புகழ்கிறார் மாங்குடி மருதனார்.

*" மெல்லெனக் கூறி விடுப்பின் நும்முள்*
*தலைவன் தாமரை மலைய, விறலியர்*
*சீர்குழு சிறப்பின் விளங்கு இழை அணிய*
*நீர் இயக்கன்ன நிரை செலல் நெருந்தேர்*
*வாரிக்கொள்ளா வரை மருள் வெழும்*
*கறங்கு மணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை*
*பொலம் படைப் பொலிந்த கொய்சுவல் புரவி*
*நிலம்தினக் கிடந்த நிதியமொடு அனைத்தும் "* [62]

இப்பாடலடிகள், பாணரும், விறலியரும், புலவரும் விடைபெற்று நன்னனைப் பிரிகையில் அணிகலன்களையும், தேர்களையும், யானைகளையும், குதிரைகளையும் பரிசாகத் தந்து வழியனுப்புவான் எனக் கூறுகின்றது.

பண்டைய மன்னர்கள் தாம் சேர்த்து வைத்த பொருள்களைக் கொடுத்து மகிழ்வதில் உயர்ந்த எண்ணம் கொண்டவர்களாக இருந்தனர். பிற

நாடுகளை வென்று பெற்ற பொருள்களில் பெரும்பான்மையானவற்றைத் தன்னை நாடிவரும் இரவலர்களுக்கும், புலவர்களுக்கும், பாணர்க்கும், விறலிக்கும் கொடுக்கும் குணம் உடையவராக இருந்தனர்;.கொடுப்பதால் தன்னிடம் உள்ள பொருள் வளம் குறையுமே என்று எண்ணாமல் கொடுத்து மகிழ்வதில் இன்பம் கண்டனர்; தன்னை நாடிவரும் இரவலரைக் காத்தல் தங்களின் கடமை என்று உணர்ந்திருந்தமையின் எந்நிலையிலும் கொடைத் தன்மையில் சிறந்து விளங்கினர்;. ஒருமுறை தன்னை நாடி வந்தவர் மற்றொரு முறை வரினும் அவர்களை வரவேற்றுப் போற்றி வேண்டுமளவு பொன்னும் பொருளும் கொடுத்துப் புலவர்களின் பெரிய சுற்றம் துயரமின்றி வாழக் காரணமாக இருந்தனர்; என்ன கொடுக்கிறோம் என்று அறியாமலே சிறு பொருள் கேட்பவர்க்கும் மலையளவு வழங்கிய மனத்தையும் சங்க இலக்கியங்கள் பறை சாற்றுகின்றன. முல்லைக்குத் தேர் கொடுத்த பாரி, மயிலுக்குப் போர்வை ஈந்த பேகன் முதலிய வள்ளல்களின் செயல்கள் மனித உயிர்கள் மட்டுமன்றிப் பிற உயிர்களிடமும் வள்ளல்கள் காட்டிய உள்ளார்ந்த அன்பை அறியத் துணைபுரிகின்றன.

## சுற்றம் பேணல் - குடிகளைக் காத்தல்

தன்னைச் சார்ந்து வாழும் நாட்டு மக்களைக் காப்பது மன்னனின் தலையாய அறமாகும். " இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கூலங்களை விற்கும் வணிகர் குடிகளையும், உணவுப் பொருட்களை விளைவித்துக் கொடுக்கும் வேளாளர் குடிகளையும் காத்தலைத் தன் கடமையாகக் கொண்டான். மழை வேண்டுபுலத்து மாரி நிற்குமாறு, நோயும் பசியும் நீங்கத் தன் நாட்டைக் காத்தனன் " [63] எனப் பதிற்றுப்பத்து கூறுகிறது.

*" பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்*
*குடிபுறம் தருகுவை யாயின்நின்*
*அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே"* [64]

நாட்டைக் காப்பதற்கும், படைக்கலன்கள் கொண்டு போரிடும் வீரர்களைக் காப்பதற்கும் உணவுப் பொருட்கள் தேவை. உணவுப் பொருட்களை விளைவித்துக் கொடுப்பவர்கள் உழவர்கள். அதனால் உழவர்கள் குடியினைக் காக்க வேண்டும் என்னும் கருத்தை வெள்ளக்குடி நாகனார் வலியுறுத்துகிறார்.நாட்டில் நடைபெறும் முதன்மைத் தொழில்களான வணிகம், உழவு, நெய்தல் முதலிய தொழில்களைச் செய்வோர் நாட்டிற்கு முக்கியத் தேவை மிக்கவர்களாகக் கருதப்பட்டனர்.

*" புலிபுறங் காக்கும் குருளை போல*
*மெலிவில் செங்கோல் நீபுறங் காப்ப "* [65]

என்னும் அடிகள் புலி தனது குட்டிகளைக் காப்பது போன்று நீ நாட்டு மக்களைக் காத்து வருகிறாய் என்று கிள்ளி வளவனை இடைக்காடனார் பாராட்டுகின்றார்.

*" மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்*
*பால்தர வந்த பழவிறல் தாயம்*
*எய்தினம் ஆயின் எய்தினம் சிறப்பு எனக்*
*குடிபுரவு இரக்கும் கூரில் ஆண்மைச்*
*சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே*
*மண்டு அமர்ப் பரிக்கும் மதனுடை நோன் தாள்*

*விழுமியோன் பெருகுவன் ஆயின் தாழ்நீர்*
*அறுகய மருங்கின் சிறுகோல் வெண்கிடை*
*என்றூழ் வாடுவறல் போல நன்றும்*
*நொய்தால் அம்ம தானேமையற்று*
*விசிம்புஉற ஓங்கிய வெண்குடை*
*முரசுகெழு வேந்தர் அரசுகெழு திருவே "* [66]

முதியோர் இறந்ததும் அரசுப் பொறுப்பேற்கும் மன்னவனின் மனநிலை, ஆட்சி நடத்தும் நிலை இருமன இயல்புகளில் அடங்குமெனக் கூறுகிறது இப்பாடல். குடிமக்களின் வரிப்பணத்தைப் பிரித்து நல்வழிகளில் செலவிட்டுக் குடிகளைக் காத்தல் என்பது பாரமாக இருக்கும். மனத்திண்மையும், போராற்றலும் நிறைந்த மன்னனுக்கு அது பாரமாக இல்லாமல் தக்கையாகவே இருக்கும் என்கிறார் சோழன் நலங்கிள்ளி. நாட்டை ஆளும் மன்னன் மனத்திட்பம் உள்ளவனாக இருந்தால் தான் நாட்டை நல்ல முறையில் காக்க முடியும் என்னும் கருத்து இப்பாடலில் பொதிந்து இருக்கின்றது.

" சங்கப்பாடல்களில் அரசு - அரசன் பற்றிப் பாடுகிற போது அரசனின் வீரம், போர்த்திறம், பரம்பரை, வெற்றி, முறையான ஆட்சி, நடுநிலை பிறழாது தண்டம் செய்தல்(செங்கோல்), முறையாகப் பாகம் பெறுதல், ஈகை புரிதல், தாய்போலக் குடிகாத்தல், பொருள் ஈட்டல், வேளாண்மையைப் பெருக்குதல், புகழ் ஈட்டல், இன்ப வாழ்க்கை, புலவர் முதலானோரைப் பேணுதல், சான்றோர் சொல் கேட்டல் ஆகிய கருத்துகள் திரும்பத் திரும்பக் கூறப்படுகின்றன " [67] என்கிறார் ராஜ் கௌதமன்.

மேற்கண்ட மேற்கோளில் கூறப்படும் கருத்துகள் தாம் திரும்பத் திரும்பச் சங்க இலக்கியங்களில் அரசன் பற்றிக் குறிப்பிடும் பாடல்களில் ஆளப்படுகின்றன. எனினும் அரசனின் தனிப்பட்ட குணத்தை எடுத்துக் கூறுவதில் இத்தகைய பாடல்களே முன்னிலை வகிக்கின்றன. நாட்டுக்கு எது தேவை, மக்களுக்கு என்ன தேவை என்பதை உணர்ந்து செய்யும் அரசனே சிறந்தவனாகப் போற்றப்பட்டான் என்பதைத்தான் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன.

குடிமக்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்க வேண்டியது அரசனின் பொறுப்பாகும். வலிமையான பாதுகாப்பின் மூலமாக நாட்டில் அச்ச உணர்வை அகற்றி மக்களுக்கு நம்பிக்கையை ஊட்டவேண்டியது அரசனின் கடமை. அவ்வாறாக நம்பிக்கையை ஊட்டிய பின் தன் மேன்மையான செயல்களின் மூலமாகத் தரமான ஆளுமையின் கீழ் அனைத்துத் துறைகளையும் தனது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்து முறையான நீதியோடு மக்களைக் காத்தல் முறையாகும்.

## அரசியல் பண்புகள்

நாட்டை ஆளும் மன்னன் தன் நாட்டு மக்களிடம் முறை செய்து நடத்தும் ஆட்சியே சிறந்ததாகும். மக்களின் மனம் மகிழும் அளவில் அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை உணர்ந்து செய்வதன் மூலமாக நற்பெயரை அடையமுடியும். அவ்வாறான புகழ் அவனுடைய ஆட்சியின் சிறப்பைப் பிறருக்குப் பறை சாற்றுவதாக அமையும். தன்னைச் சார்ந்தவருக்கும், சுற்றத்தாருக்கும், நாட்டு மக்களுக்கும், தன்னை நாடிவந்தபுலவர்க்கும், இரவலர்க்கும் உதவி செய்து காப்பவனாக இருக்க வேண்டும். அன்பு, அருள், பகை நீக்கும் திறன் முதலியவற்றில் மன்னன்

சிறந்தவனாக இருத்தல் வேண்டும். நாட்டு மக்களுக்கு மன்னனே உயிர் போன்றவனாவான்.

*" காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே*
*மாநிறைவு இல்லதும் பன்நாட்கு ஆகும்*
*நூறுசெறு ஆயினும் தமித்துப்புக்கு உணினே*
*வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்*
*அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே*
*கோடி யாத்து நாடுபெரிது நந்தும்*
*மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்*
*வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு*
*பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்*
*யானை புக்க புலம் போலத்*
*தானும் உண்ணான் உலகமும் கெடுமே "* [68]

நாட்டின் நிலையினை அறியாமல் மக்களிடம் அதிகமான வரி வசூலித்த நிலையில்பாண்டியன் அறிவுடை நம்பிக்குப் பிசிராந்தையார் அறிவுரை கூறுவதாக அமைந்த இப்பாடலில் வயலில் விளைந்த நெல்லை அரிசியாக்கிக் கவளமாக யானைக்கு உணவாகக் கொடுத்தால் பல நாட்களுக்கும் பயன்படும். அதனை விடுத்து யானையை நேரடியாகவே உண்ணச் செய்தால் அதன் உணவாவதை விடக் காலால் மிதிபட்டு அழிவதே அதிகமாக இருக்கும். அது போல மக்களின் நிலையறிந்து வரிவசூலித்தால் நாடும் நன்றாக இருக்கும். நீயும் நலம் பெறுவாய் என்னும் பகுதி மன்னன் கண்ணோட்டம் உடையவனாக இருத்தல் வேண்டும் என்பதைக் காட்டுகின்றது.

" நிலம், நீர், காற்று, வானம் என்று சொல்லப்படும் ஐம்பூதங்களும் தன்னளவில் சக்தி வாய்ந்தவையாகக் கருதப்படுபவை. அவ்வைந்து பூதங்களைப் போல் சக்தி படைத்தவன். பகைவர் பிழை செய்தால் பொருத்தருளும் குணம், பால் தன் நிலையில் திரியினும், சூரியன் ஒளி இழந்து இருளடையினும், நான்கு வேதங்களும் நெறிபிறழ்ந்தாலும் உன் சுற்றம் சிறக்கட்டும் " [69] என்று பெருஞ்சோற்று உதயன் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாராட்டுகிறார். இயற்கைச் சக்திகள் எல்லாம் தன்னிலையில் திரியாது இருந்து அனைவரையும் காக்கும் சிறப்புடையவன் சேரலாதன் என்னும் கருத்தைப் பாடலடிகளில் புலவர் சுட்டிக் கூறியமை குறிப்பிடத்தக்கது.

" தீயனவற்றை அழித்து நன்மைகள் பெருகச்செய்து பொருள்களின் விளைச்சலில் மக்களிடம் இருந்து ஆறில் ஒரு பங்குப் பொருளை வரியாகப் பெற்றுச் சிறப்பாய். நாட்டை ஆள்பவன் நீ " [70] என்று மாந்தரஞ்சேரல் இரும்பொறையைக் குறுங்கோழியூர் கிழார் பாராட்டுகிறார். அரசனின் கடமை நல்லவற்றைப் பெருக்குவது. அரசன் தனது தரமான செயல்பாடுகளால் தான் மக்கள் மனதில் நற்பெயரைப் பெறமுடியும். தான் பெற்ற வரியைச் சிறந்த முறையில் பயனுள்ள வகையில் பயன்படுத்தி நாட்டை உயர்வடையச் செய்ய வேண்டும். அதனால்தான் வள்ளுவர்,

*" இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த*
*வகுத்தலும் வல்லது அரசு "* [71]

என்று குறிப்பிட்டார். நாட்டில் அரசியல் பண்பு சிறந்திருக்கும் நிலையில் தான் அறங்கள் சிறக்கும். மன்னனைப் புகழ்ந்து பாடும் பண்டைய புலவர்கள்

நாட்டையும் மன்னனையும் போற்றிப் பாடும் பாடல்களிலேயே நாட்டின் வளத்தையும் அவனது பண்புகளையும் குறிப்பிட்டனர்.

*" வேறுபுலத்து இறுக்கும் தானையொடு*
*சோறுபட நடத்திநீ துஞ்சாய் மாறே "* [72]

இப்பாடலடிகளில், தனது புகழ் சொல்லக்கேட்டு உன்னை நாடி வந்தேன். உன் நாட்டில் சோறு இன்னும் பெருகும் வண்ணம் நீ செயலாற்ற வேண்டும் எனப் புலவர் குறிப்பிடுகிறார். நாட்டு மக்களின் அடிப்படைத் தேவைகள் உண்ண உணவும், உடுத்த உடையும், இருக்க இருப்பிடமும் ஆகும். இதையெல்லாம் நாட்டை ஆளும் மன்னன் நிறைவேற்றுதல் கடமையுமாகும். ' சோறு மிகச் சிறக்க ' எனப் புலவர் குறிப்பிட்டதால் இந்நிலை இன்னும் சிறப்பாகத் தொடர வேண்டும் என்னும் கருத்துப் பெறப்படுகின்றது.

மன்னன் தன்னை வழிபடுவோரின் எண்ணம் அறிவதில் வல்லவராக இருத்தல் வேண்டும். புகழ் வார்த்தைகளில் மயங்காமல் அவற்றுள் நன்மைகளை எடுத்துக் கொண்டு ஆய வேண்டும். தவறுகள் நிகழ்ந்த போது அதற்குத் தக்க முறையில் நீதி செய்து தண்டனை வழங்குதல் வேண்டும். தவற்றைச் செய்தவன் தன் தவற்றை ஒப்புக் கொள்ளும் நிலையில் அவனை மன்னித்து ஏற்றுக் கொள்ளும் பேரன்பு உடையவனாக இருத்தல் வேண்டும். இக்கருத்துகளை

*" வழிபடுவோரை வல்லறி தீயே*
*பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே*
*நீமெய் கண்ட தீமை காணின்*

*ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி*
*வந்துஅடி பொருந்தி முந்தை நிற்பின்*
*தண்டமும் தணிதி நீ பண்டையிற் பெரிதே*
*அமிழ்து அட்டு ஆனாக் கமழ்குய் அடிசில் "* [73]

என்னும் பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. கிள்ளிவளவனைக் கோவூர்கிழார் சிறப்பித்துப் பாடும் போது,

*" கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர் "* [74]

எனக் குறிப்பிடுவார். பிறருக்குக் கொடுப்பதால் குறையாத அளவு உணவுப் பொருள்களைக் கொண்ட நாடெனப் புலவர் பாராட்டுகின்றார். ஆன்றோர் கொடுக்கக் கொடுக்கச் செல்வம் வளரும் என்னும் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

## போர் அறம்

பண்டைக் காலத்தில் மன்னராட்சியில் மக்கள் உயரிய மன்னர்களால் நல்வாழ்க்கை வாழ்ந்த போதும், போரும் பூசலுமான சூழல்களை உணர்வதற்கு இடம் இருந்தது. ஒருவரை ஒருவர் போரில் வெற்றி கொள்வது பெருமையாகக் கருதப்பட்ட காலம் அது. அதனால் வீரத்திற்குப் பெரிய அளவில் சிறப்பளிக்கப் பெற்ற காலமாக இருந்தது. போர்கள் நடைபெற்ற போதும் அப்போர்கள் சாதாரண மக்களுக்கு இடர்கள் ஏற்படுவதினின்று காத்த காலமாகும்.

புகழ் பெற வேண்டும் என்னும் ஆர்வம் சங்ககால மன்னர்களுக்கு இயல்பாகவே இருந்த ஒன்றாகும். இதனை வெளிப்படுத்த அவர்கள்

கையாண்ட முறைகள் பல. கொடை வழங்குதல்,போர்புரிதல், மக்களைக் காத்தல் முதலியவற்றின் மூலமாக அதனை மேற்கொண்டனர். போர் தவிர்க்க முடியாத ஒன்றாக இருந்தது என்பதைப் புறம் 75 சுட்டுகின்றது. " ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் உலகத்து இயற்கை " என்பதே அக்கருத்து. போர் முக்கியமானதாகவும் படையே மன்னர்க்குச் சிறப்புத் தருவது என்னும் கருத்தும் நிலவிய காலம் அது. அக்காலத்தில் மன்னர்கள் போரிடுவதை ஆன்றோர்கள் கடிந்து கூறவில்லை. அரசனது வீரத்திற்கு அவர்களின் உரைகள் சான்றாகவே அமைந்திருந்தன.

பண்டைக்காலப் போர்முறை பசுக்களைக் கவர்தலில் தொடங்கி நடைபெறும். நிரை கவர்தல் வெட்சித் திணையின் பாற்படும். பகைவர் நாட்டில் இருந்து கொண்டு வந்த பசுக்களைப் புலவர்களுக்கும், இரவலர்களுக்கும் வழங்குவது அறமாகக் கொள்ளப்பெற்றது. தமிழரின் போர்முறை பற்றி நச்சினார்க்கினியர் குறிப்பிடும் போது போர்க்களத்தில், கோழைகளையும், மயிர் குழைந்தோரையும், பெண் பெயர் கொண்டோரையும், படைக் கருவிகளைக் கைநழுவ விட்டவரையும், ஒத்த படை எடாதோரையும் தமிழர்கள் கொல்லமாட்டார்கள் எனக் குறிப்பிடுகின்றார்.

சமயநெறிகளைக் கடைப்பிடிப்போர்க்குப் போரில் இருந்து விலக்கு அளிக்கப்பட்டது. அவர்களுக்குப் போரால் பாதிப்பு ஏற்படாதவாறு பாதுகாக்கப்பட்டனர். இரவில் போர்புரிதல் அறமாகக் கொள்ளப்படவில்லை. வீரர் அல்லாதோரையும், புண்பட்டோரையும். முதியோரையும், இளையோரையும் தாக்குதல் அறமற்ற , அறிவிலார் செயலாகக் கருதப்பட்டது.

பண்டைக் காலத்தில் வீரம் என்பதைக் குறிக்க 'மறம்' என்னும் சொல் கையாளப்பட்டது.

*" அரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய*
*மறம்புரி கொள்கை "* [75]

சங்ககாலத் தமிழ் மக்கள் இயல்பாகவே வீரப்பண்புடன் திகழ்ந்தனர் என்பதற்குப் புற இலக்கியங்களே மிகச் சிறந்த சான்றுகளாகும். வீரம் நிறைந்த சமுதாயமாக இருந்ததால் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஐம்படைத்தாலி அணிவித்த செய்தியைப் புறம் 70 குறிப்பிடுகின்றது.

தமிழர்கள் ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய பண்புகளைத் தொழில்களின் வாயிலாக வெளிப்படுத்தினர். குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடுதலைத் தொழிலாகக் கொண்டு திகழ்ந்தனர். முல்லை நில மக்கள் ஏறுதழுவுதலை உயிராகக் கருதினர். காளையை அடக்கிப் பணிய வைப்பவருக்கே பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் வழக்கம் இருந்தது. நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மக்கள் வலிமையான அலைகளை அடக்கிக் கையாண்டு மீன்கள் பிடித்தனர். பாலை நிலத்தில் கள்வர்கள், வேட்டுவர்கள் வாழ்ந்து வந்தனர். இவர்கள் தங்களது வேட்டைத் தொழிலையும், வழிப்பறியையும் பின்பற்றி வாழ்ந்தனர். பொதுவாக நோக்கினால் இவையெல்லாம் வீரம் சார்ந்தன என்பதைத் தெளிவாக அறியமுடியும்.

போர் வீரத்தை மெய்ப்பிக்கவும், சமுதாயத்தின் தேவையாகவும் இருந்ததால் உயரியதாகக் கருதப்பட்டது. போரில் இறந்தவர்கள் சுவர்க்கம் புகுவர் என்னும் எண்ணம் பரவலாக வேரோடிக் கிடந்தமையை,

*" முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்*
*தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க*

*உயர்நிலை யுலக மெய்தினர் பலர்பட*

*நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை "* [76]

நாட்டுக்காகப் போரில் உயிர் துறத்தல் சிறப்பானதாகக் கருதப்பட்டது.

*" சிறாஅஅவர் துடியர் பாடுவல் மகாஅஅர்*

*தூவெள் அறுவை மாயோற் குறுதி*

*இரும்புள் பூசல் ஓம்புமின் யானும்*

*விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்*

*என்போற் பெருவிதுப்பு உறுக வேந்தே*

*கொன்னும் சாதல் வெய்யோற்குத் தன்தலை*

*மணிமருள் மாலைசூட்டி அவன் தலை*

*ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே "* [77]

மன்னன் பொருட்டு உயிர்நீத்த வீரனைச் சிறப்பித்துப் பாடப்பட்ட பாடல் இது. தன் மாலையையே வீரனுக்குச் சூட்டி அரசன் சிறப்புச் செய்த பாங்கு கூறப்பெறுகிறது.

*" நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்*

*பாசறை யல்லது நீயொல் லாயே "* [78]

என்னும் பாடலடிகள் அரசன் போரினால் ஏற்படும் புகழை விரும்பிப் பாசறையிலேயே இருந்த செய்தியை எடுத்துக் கூறுகிறது.

*" தார்தாங் குதலும் ஆற்றார் வெடிபட்டு*
*ஓடல் மரீஇய பீடுஇல் மன்னர்*
*நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்*
*காதல் மறந்து அவர் தீதுமருங் கறுமார்*
*அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்*
*திறம்பரி பசும்புல் பரப்பினர் கிடப்பி*
*மறம்கந்து ஆக நல்லமர் வீழ்ந்த "*[79]

என்னும் பாடலடிகள் போர்க்களத்தில் இறவாமல் நோயினாலோ, மூப்பினாலோ இறந்தவர்களை அடக்கம் செய்கின்ற போது மார்பை வாளால் கீறி அடக்கம் செய்யும் முறையைக் கூறுகின்றது. விழுப்புண் படுதல் பெருமையாகக் கருதப்பட்டது. இல்லத்தில் ஒருவன் வீரனாகவிருத்தல் பெருமைக்குரியதாகக் கருதப்பட்டது. தன்மகன் வளரும் போதே வீரனாகத்தான் வர வேண்டும் என நினைக்கும் மறத்தன்மை பொருந்திய தாயைப் புறநானூறு அறிமுகம் செய்கின்றது.

*" சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்*
*யாண்டுள னோஎன வினவுதி என்மகன்*
*யாண்டுஉளன் ஆயினும் அறியேன் ஓரும்*
*புலிசேர்ந்து போகிய கல்அளை போல*
*ஈன்ற வயிறோ இதுவே*
*தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே "*[80]

புலிகிடந்த குகை போல அவனைப் பெற்ற வயிறு இங்கே இருக்கின்றது. அவன் போர்க்களத்தில் தான் இருப்பான் என மொழிகிறாள் புறநானூற்றுத் தாய்.

" புறம் கண்டு ஓடாத கொள்கையினே உடைய மறவன் ஒருவன் போர்க்களத்தில் இறந்து கிடக்க, அம்மறவனின் தாய் அவனைத் தேடி விழுப்புண்பட்டதை அறிகிறாள். அவன் இறந்த நிலையிலும் அவளது மார்பில் பால் சுரந்தது" [81] எனப் புறம் கூறுகிறது. " தன்மகன் புறமுதுகிட்டான் எனத் தன்மகன் பற்றிப் பிறர் கூறக் கேள்விப்பட்ட தாயானவள் போர்க்களத்திற்குச் செல்கையில் செய்தி உண்மையானால் அவனுக்குப் பால் கொடுத்த மார்பை அறுத்தெறிவேன் என வஞ்சினம் பேசுகிறாள். அவன் புறமுதுகிடவில்லை. மார்பில் விழுப்புண் பெற்றதை அறிந்து மகிழ்வு கொள்கிறாள்" [82]

*" ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே*
*சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே*
*வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே*
*நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே*
*ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்*
*களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே "* [83]

இப்பாடல் பரந்த போர்க்களத்தில் யானையைக் கொன்று வெற்றி பெறுதல் ஆண்மகனுக்குரிய கடமையாகக் கூறுகின்றது.

மன்னர்கள் தங்கள் உரிமைகளுக்காகப் போர் செய்தலை மேற்கொண்டனர். புகழ் அடைதல் அவர்களின் தலையாய உணர்வாக இருந்தது. இதனை,

*" நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்*
*பாசறை யல்லது நீயொல் லாயே "* [84]

*" அடுபுகழ் மேவலொடு கண்படை யிலனே "*[85]

புகழ் தவிர நாட்டின் எல்லையை விரிவு செய்தல், குடிக்கடன், மான உணர்வு, செல்வ மேம்பாடு, மகட்கொடை மறுப்பு, வஞ்சினம் முதலியவற்றின் காரணமாகவும் போர்கள் நிகழ்ந்தன.

*" வையங் காவலர் வழிமொழிந்து ஒழுகப்*
*போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது*
*இடம்சிறிது என்னும் ஊக்கந் துரப்ப "*[86]

என்னும் பாடலடிகள் இதனை உணர்த்துகின்றன. நாட்டை பல்வேறு மன்னர்கள் ஆண்ட காரணத்தால் வலிமை, செல்வம், புகழ் காரணமாக போர்கள் நிகழ்ந்தன. ஒருவர் மற்றவரை தாழ்த்திக் கூறுதலும் அம்மொழியை மாற்றப் படையெடுத்துச் செல்லலும் இயல்பாக நடைபெற்றன.

*" நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்*
*இளையன் இவன்என உளையக் கூறிப்*
*படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்*
*நெடுநல் யானையும் தேரும் மாவும்*
*படையமை மறவரும் உடையம் யாம்என்று*
*உறுதுப்பு அஞ்சாது உடல் சினம் செருக்கிச்*
*சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்குஅகப் படேன்என் ஆயின் பொருந்திய*
*என்நிழல் வாழ்நர் சென்னிழல் காணாது*

*கொடியன்எம் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்*
*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக.*
*ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவன் ஆக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைகஎன் நிலவரை*
*புரப்போர் புன்கண் கூர*
*இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே "* [87]

இப்பாடல் தன்னை வலிமையற்றவன், படைபலம் இல்லாதவன், இளையவன் என்றெல்லாம் கூறிப் போர் புரிய வருகின்றனர். இவர்களை எல்லாம் புறமுதுகிட்டு ஓடச் செய்வேன். அவ்வாறு செய்யவில்லை எனில் எம்மக்கள் என்னைக் கொடுங்கோலன் எனப் பழிப்பார்களாக.உயர்ந்த சிறப்பை உடைய மாங்குடி மருதன் உள்ளிட்ட புலவர்கள் என் நாட்டைப் பாடாது போகட்டும். இரந்து நிற்போர்க்குக் கொடுக்க இயலாத வறுமைத் துன்பத்தை அடைவேனாக என்று நெடுஞ்செழியன் கூறும் வஞ்சினம் அவனது மற உணர்வையும், அவன்பால் கொண்ட நம்பிக்கையின் அளவுகடந்த நிலையினையும் எடுத்துக் காட்டுகின்றது. போரால் வெற்றி தோல்வி அடைவது நிச்சயம். எனினும் தோல்வி அடைய விரும்பாத நிறைந்த மன உணர்வை இப்பாடல் பிரதிபலிக்கின்றது.

" தன் வலிமையைப் போற்றாது தன்னை இகழ்ந்தவனைச் சோழன் நலங்கிள்ளி போருக்கு அழைத்தமையை " [88] புறநானூறு மொழிகின்றது. மன்னர்கள் கூறும் வஞ்சின மொழிகள் தங்களின் வீரத்தின் மேல் அவர்கள் கொண்ட நம்பிக்கையினையும், மன உறுதியினையும் மெய்ப்பிக்கின்றன. அவர்கள் தாங்கள் கூறும் வஞ்சினச் சொற்களின் மூலமாகத் தங்கள்

படைபலம், செல்வ வளம் முதலியவற்றிலும் கொண்ட நம்பிக்கை புலனாகின்றது.

போருக்குத் தூது முக்கியமானதாகக் கருதப்பட்டது. இரு மன்னர்களுக்கு இடையே ஏற்படும் பூசல்கள் தூதின் மூலமாகக் கூடத் தீர்க்கப்படுதல் உண்டு.

*" இவ்வே பீலிஅணிந்து மாலை சூட்டிக்*
*கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து*
*கடியுடை வியன்நக ரவ்வே அவ்வே*
*பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து*
*கொல்துறைக் குற்றில மாதோஎன்றும்*
*உண்டாயின் பதம்கொடுத்து ,*
*இல்லையாயின் உடன் உண்ணும்*
*இல்லோர் ஒக்கல் தலைவன்*
*அண்ணல்எம் கோமான் வைந்நுதி வேலே "* [89]

இப்பாடல், அதியமானிடம் இருந்து தொண்டைமானிடம் தூதுவராகச் சென்ற ஔவையார் இருவரிடையேயும் நிகழ இருந்த போரைத்தனது மதிநலத்தால் தடுத்தார். தொண்டைமானின் படைக்கலத்தைப் பார்வையிட்ட ஔவையார் அதியமானின் படைக்கலன்கள் எப்போதும் உலைக்களத்தில் இட்டுக் கூர் தீட்டப்படுகின்றன. புதிய போர்க்கருவிகள் செய்யும் ஒலி கேட்ட வண்ணம் இருக்கின்றது. ஆனால் உனது படைக்கலன்கள் நெய்பூசப்பெற்றுக் காட்சிப் பொருள் போல அழகாக வைக்கப்பட்டிருக்கின்றன என்று அதியமானைப் பழிப்பது போலப் புகழ்ந்தும், தொண்டைமானைப் புகழ்வது போலப் பழித்தும்

பேசுகிறார். இங்கு மறைமுகமாக அதியனின் வீரத்தை உணர்த்திய ஔவையின் அறமான பேச்சு போரைத் தடுக்கக் காரணமாக அமைந்தது.

" அரசன் தொழிலாவது நாடு காவல். போர் வினையும் நாடு காவலுக்கு உட்பட்டதே. அதனால் அக்காலத்து அரசர், பெரும்பாலும் தம் வினைகளிலெல்லாம் அறத்தைக் கடைப்பிடித்தனர் " [90] என்கிறார் தேவநேயன். அதனால் எல்லாச் செயல்களிலும் அறத்தைக் கடைப்பிடித்தல் இன்றியமையாததாகக் கருதப்பட்டது.

தன்னை விட வலிமை குறைந்தவரோடு போரிடுதல் அக்காலத்தில் அறமாகப் போற்றப்படவில்லை. தன்னை ஒத்த வலிமை உடையவரோடு போரிடுவது அறமாக இருந்தது.

*" பல்சான்றீரே பல்சான்றீரே*
*குமரி மகளிர் கூந்தல் புரைய*
*அமரின் இட்ட அருமுள் வேலிக்*
*கல்லென் பாசறைப் பல்சான்றீரே*
*முரசுமுழங்கு தானைநும் அரசும் ஓம்புமின்*
*ஒளிறுஏந்து மருப்பின்நும் களிறும் போற்றுமின்*
*எனைநாள் தங்கும்நும் போரே அனைநாள்*
*எறியார் எறிதல் யாவணது எறிந்தோர்*
*எதிர்சென்று எறிதலும் செல்லான் அதனால்*
*அறிந்தோர் யார் அவன் கண்ணிய பொருளே*
*பலரேம் என்று இகழ்தல் ஓம்புமின் உதுக்காண்*
*நிலன் அளப் பன்ன நில்லாக் குறுநெறி*

*வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி*
*எல்லிடைப் படர்தந் தோனே கல்லென*
*வேந்தூர் யானைக்கு அல்லது*
*ஏந்துவன் போலான்தன் இலங்கிலை வேலே "* [91]

இப்பாடலில் ஆவூர் மூலங்கிழார், என் அரசன் சமமான ஆற்றல் இல்லாதோரோடு போர்புரிய வர மாட்டான். இல்லம் சென்று எம் மன்னன் நாளை உதயத்தில் வருவான் . உங்கள் வேந்தனை நீங்கள் காத்துக் கொள்ளுங்கள் எனக் கூறுகின்றார். இதனால் சங்ககால மன்னர்கள் தன்னை ஒத்த வீரம் உடையாரோடு மட்டுமே போர் புரிந்த அறம் தெளிவு பெறுகிறது. போர்க்களத்தில் விலங்குகளின் மேல் படைக்கலன்களை ஏவுதல் அறமாகப் போற்றப்படவில்லை. இதனை வீரர்கள் நாணம் மிக்க செயலாகக் கருதினர். தன்னைத் தாக்க வரும் நிலையில் படைக்கலன்கள் விலங்குகள் மேல் எய்யப்பட்ட தன்மையை,

*" பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்*
*மேல்வரும் களிற்றொடு வேல்துரந்து இனியே "* [92]

இப்பாடலடிகள் எடுத்துக் கூறுகின்றன.

கா. கோவிந்தன் போர்க்குரிய காரணங்களாக " ஆனிரை, அண்டை நாட்டு எல்லை, அரண், ஆற்றல் என்ற நான்கையும் குறிப்பிடுவார்" [93] போர்கள் நடைபெறுவதற்கான காரணங்களாகச் " சமுதாயத்தின் மனநிலை சாதிச்சமூகமாக இருப்பது, அமைதி பற்றிய உள்ள வறுமை, வீரமும் துணிச்சலும், சண்டை தொடுக்கும் மனித இயல்பு, தற்காப்புச் சூழல், சினப்

போக்கும் அழுக்காறும், தலைமை எண்ணம் "[94] முதலியன என இராமசந்திர தீட்சிதர் குறிப்பிடுவார்.

சங்க காலத்தில்,புகழ் தேடும் வேட்கையும், அதனால் போரும், நாட்டின் எல்லைப் பெருக்கமும், பொருள் சேர்க்கையும், தொடர்ந்து ஒன்றை ஒன்று சார்ந்த செயல்கள் ஆகியவை தேவையானதாகக் கருதப்பட்டது. உரிமை நிலையும், புகழ் நிலையும், வீரத்தை நிலைநிறுத்தலும் இதற்குக் காரணங்களாக அமைந்தன.

பண்டைக்காலப் போரில் புலவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. அரசர்களை அறநெறிப்படி போர்புரியத் தூண்டியவர்கள் புலவர்களே. போர்நெறிகளையும், போர் முறைகளையும் தங்களின் கவித்திறனால் தெளிவுபடுத்தினர். போரைத் தவிர்ப்பது பற்றி வரும் கோவூர்கிழாரின் பாடல் சமாதானத்தின் சாட்சியாக ஒளிர்கிறது.

*" இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்*
*கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்*
*நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே நின்னொடு*
*பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே*
*ஒருவீர் தோற்பினும் தோற்பதும் குடியே*
*இருவீர் வேறல் இயற்கையும் அன்றே அதனால்*
*குடிப்பொருள் அன்றுநும் செய்தி கொடித்தேர்*
*நும்மோர் அன்ன வேந்தர்க்கு*
*மெய்ம்மலி உவகை செய்யும்இவ் விகலே "*[95]

சோழன் நலங்கிள்ளியையும், நெடுங்கிள்ளியையும் பாடும் இப்பாடல், உன்னை எதிர்த்து நிற்பவன் சேரனோ, பாண்டியனோ அல்லன். ஆத்திப்பூச்சூடிய சோழனேயாவான். உன் குலத்தவன். இதில் யார் தோற்பினும் தோற்பது சோழர் குடியே ஆகும். உம் போன்ற வேந்தர்க்கு இது சிறந்ததன்று என்று கோவூர்கிழார் கூறும் அறிவுரை சாதாரணமாக இருப்பினும் ஒரே குலத்தவர்கள் ஒன்றிணைந்து இருக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறது.

சோழன் நலங்கிள்ளி போர்புரியும் மனமின்றி அரண்மனைக்குள் முடங்கிக் கிடந்த போது " யானைகள் கட்டப்பட்ட கம்பம் சாய்ந்து விழ, பாலில்லாமல் குழந்தைகள் அழ, பூவற்ற தலைகளைக் கொண்ட பெண்கள் முழக்க, குடிநீர் இன்றி மக்கள் வாட நீ இங்கிருத்தல் அழகல்ல.துன்பம் தருவது. அளவற்ற படைகள் கொண்ட தலைவனே ' அறத்தையும் மறத்தையும் கொள்ளாமல் கதவுகளை அடைத்துவிட்டு உள்ளே இருப்பது வெட்கம் தருவதெனக் கூறும் கோவூர்கிழார் , அறவழி அல்லது மறவழி ஏதேனும் ஒன்றைக் கடைப்பிடித்து மக்களைக் காத்தலைச் செய்ய வேண்டும்" [96] என்பதை அறமாகக் கூறுகின்றார்.

நாட்டிற்குச் சற்றும் பொருந்தாத சூழ்நிலை உருவாகி மக்கள் அன்றாட வாழ்க்கைக்கே துயர்படும் நிலையில் முடிவெடுத்தலில் தயக்கம் காட்டக் கூடாது என்பதை இப்பாடற்கருத்துகள் நிரூபிக்கின்றன. கோப்பெருஞ்சோழனுடன் அவனது மக்கள் அரசுரிமையின் பொருட்டுப் போர் தொடுக்க முனைந்த போது அவர்களுடன் போர் புரிய முடிவு செய்த கோப்பெருஞ்சோழனை " உனக்குப் பின் உனது செல்வம் அனைத்தும் உன் மக்களுக்கே. அவர்களுடன் போர் புரிந்தால் பழியே மிஞ்சும் " [97] எனக் கூறிப் போரைத் தடுக்கிறார்.

புலவர்களின் நல்லுரைகள் பல்வேறு போர்களைத் தடுத்திருக்கின்றன. போர் புரியும் எண்ணமின்றி முடங்கிக் கிடந்த போது அறிவுரை கூறும் இயல்புடையவர்களாக இருந்தனர். புலவர்கள் பாடல்கள் பாடிப் பரிசு பெறுவதை மட்டும் தனது வாழ்வாகக் கொள்ளாமல் பிறருக்கும், நாட்டுக்கும் நல்லன செய்ய வேண்டும் என்னும் கருத்தை உணர்ந்தவர்களாக இருந்திருக்கின்றனர்.

போர் முடிந்த பின் வெற்றி பெற்ற மன்னர்கள் பகை நாட்டை அழித்தொழித்தலில் ஈடுபடுவதும் ஒருசார்பான அறமாக இருந்தது. மாற்று நாட்டு மன்னன் எந்நிலையிலும் மீண்டும் சக்தி பெற்றுத் தாக்கக்கூடாது என்னும் நோக்குடன் விளைநிலங்கள் அரண்மனைகள் குடியிருப்புகள் முதலியவற்றை அழிப்பதில் ஈடுபட்டனர். " பகைவர்கள் அழியும் படி தன் முதல் போரில் வெற்றி பெற்ற கரிகாலன் பகைவர்களின் மருத நிலத்தை அழித்தொழித்தான். கரும்பும், நெற்பயிரும் விளைந்திருந்த மருத நிலங்கள் பாழ்பட்டன. பொய்கைகள் அழிக்கப்பட்டன. வயல்களும் நீர்நிலைகளும் வேறுபாடின்றிக் காட்சியளித்தன. கரிகாலனின் பார்வைக்கு ஊர் மன்றங்களும் தப்பவில்லை. அவ்விடங்களில் விழாக்கள் நடைபெற்ற காலம் போய் இப்போது புற்கள் மண்டிக் கிடக்கின்றன. அம்மன்றங்களில் நரிகள் ஊளையிட ஆந்தைகள் அலற ஆண்பேய்கள் தலைமயிரைத் தொங்க விட்டுக் கொண்டு ஆட, பெண்பேய்களும் நெருங்கி ஆடின. நெற்கூடுகளில் கோட்டான்கள் தங்கிக் கூவிக்கிடந்தன " [98] என்று போரில் அழிவுற்ற பகை நாட்டின் நிலையைப் பட்டினப்பாலை கூறுகிறது. நாடு மீண்டுவருவதற்கு வழியே இன்றி அழிக்கப்பட்ட வலிமையான வீர நிலையை இப்பகுதிகள் வெளிக்காட்டி நிற்கின்றன.

" விளைநிலங்களாகிய மருத நிலங்கள் அழக்கப்பட்டதால் அவை காடுகளாயின. பசுக்கள் வாழ்ந்த இடங்களில் புலிகள் உலவ, ஊர்களாக இருந்த இடங்கள் பாழிடங்களாயின. பொது அம்பலங்களில் பேய்மகளிர் உலவினர். இல்லுறை தெய்வங்கள் இருந்த இடத்தில் கவலை அடைந்த மகளிர் வருந்தி அழவும், பெரிய மாளிகையின் உடைந்த பகுதிகளில் கோட்டான்கள் தங்கவும் நாடு பாழ்பட்டது" [99] என நெடுஞ்செழியனின் வீரத்தால் அழிந்த பகை நாடு மதுரைக் காஞ்சியில் கூறப்படுகிறது.

*" களிறுகடை இயதாள்*
*கழல்உரீஇய திருந்துஅடிக்*
*கணைபொருது கவிவண் கையால்*
*கண்ஒளிர் வரூஉம் கவின்சாபத்து*
*மாமறுத்த மலர் மார்பின்*
*தோல் பெயரிய எறுழ் முன்பின்*
*எல்லையும் இரவும் எண்ணாய் பகைவர்*
*ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்*
*கொள்ளை மேவலை ஆகலின் நல்ல*
*இல்லாஆ குபவால் இயல்தேர் வளவ*
*தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து*
*மீனின் செறுக்கும் யாணர்ப்*
*பயன்திகழ் வைப்பின் பிறர் அகன்றலை நாடே "* [100]

வலிமை உடைய மன்னனே, எனக் கரிகால் பெருவளத்தானை வாழ்த்தும் சூழலாதனார், இரவுபகல் பாராது எதிரிநாட்டைச் சுட்டுப் பொசுக்கும் செயலிலேயே கண்ணாக இருப்பவன். உன்னால் அழிக்கப்பட்ட நாட்டில் மக்களின் அழுகுரல் கேட்ட வண்ணம் உள்ளது. நாட்டில் எந்தப்

பொருளையும் அழிக்கும் இயல்பு பெற்றவன் நீ... உன்னை எதிர்க்க யார் இருக்கிறார்கள் என்னும் கருத்துகள் மன்னன் மற்றும் வீரனின் படைச்சிறப்பைக் கூறி வலிமையான வீரத்தில் அழிந்த பகை நாட்டின் நிலையினையும் வெளிப்படையாக உரைக்கின்றது.

பண்டைக்காலப் போர் நெறியாகப் பலபெறப்பட்ட போதும் அழித்தொழிக்கப்பட்ட நாடுகள், அழிந்த நகரங்கள் பற்றிப் பார்க்கும் போது பண்டைய வீரத்தின் உச்சநிலை புலப்படும். எதிரி நாட்டு மன்னன் முழுமையுமாகத் தன் நாட்டை இழக்கும் வண்ணம் படைநடத்திப் போர் புரிந்த மன்னர்களும் இருந்திருக்கின்றனர். தங்களது ஈரத்தின் சக்தியை வலியுறுத்துவதன் மூலமாகத் தன் தன்னிகரற்ற வீரத்தைப் பறை சாற்றும் குறிக்கோளைக் கொண்டவர்களாக இருந்தனர். தன் நாட்டைக் காத்துக் கொள்ளுதலும் , அதன் மூலம் மக்களுக்கு வளமான வாழ்வளித்தலும் புகழ் படைத்த மன்னர்களின் மன எண்ணமாக இருந்ததால் போரை அறமாகவும் தேவையாகவும் கருதினர்.

## அமைச்சர் அறம்

நாட்டை ஆளும் மன்னன் மட்டும் நல்ல ஆளுமை உடையவனாக இருந்தால் போதாது. மன்னனின் ஆணையை ஏற்றுச் செயல்படுத்தும் திறம் மிக்கவர்களாக அமைச்சர்கள் இருக்க வேண்டும். அப்போது தான் நாட்டின் திட்டங்கள் மக்களைச் சென்றடையும். அமைச்சர்கள் நல்லவர்களாக இல்லாத சூழ்நிலையில் அவர்களால் மன்னனுக்கே பழிகள் விளையும். பிறரின் மதிநலத்தை உணர்ந்து கடமை ஆற்றுவது அமைச்சனுக்குரிய தகுதிகளில் ஒன்று. கல் நெஞ்சம் உடையவனாகவும், முழுதும் இரக்க குணம் இல்லாமலும் நடுவு நிலையில் இருப்பவனாக இருத்தல் வேண்டும்.

*" நடுவிகந்து ஓரீஇ நயன்இல்லான் வினைவாங்கக்*
*கொடிது ஓர்த்த மன்னவன் கோல்போல, ஞாயிறு*
*கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினம் தெறுதலின் "* [101]

நீதியில் இருந்து நீங்கிய அமைச்சனின் பேச்சைக்கேட்ட மன்னவன் முறையறிந்து நடத்தலை இப்பாடலடிகள் சுட்டிக் கூறுகின்றன. தன்னைச் சார்ந்தவர்கள் நல்லவர்களாக இருக்கின்ற போது தான் மன்னனின் செயல்கள் சிறக்கும்.

## போர்ச்சூழலும் மறப்பண்பும்

இயல்பாகவே மறப்பண்பு நிறைந்திருந்ததால், நினைவும் செயல்பாடுகளும் போர் குறித்தனவாகவே இருந்தன.

*" பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை*
*வளிபொரு தெண்கண் கேட்பின்*
*அதுபோர் என்னும் என்னையும் உளனே "* [102]

வீசுகின்ற காற்று முரசில் பட்டு ஒலி எழும்பினாலும் அதைப் போர் முரசின் ஒலியென்று போர் மறவர்கள் வீறுகொண்டெழும் சூழல் இப்பாடலில் வெளிப்படுகின்றது.வாழ்வில் வாழ்வும் , சாவும் ஒரு முறை தான். போகின்ற உயிர் போர்க்களத்தில் போக வேண்டும் என்றெண்ணிய வீரப் பண்புகள் நிறைந்த காலமது. விழுப்புண் படாத நாட்கள் வீணான நாட்கள். இதனை வள்ளுவர்,

*" விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்*
*வைக்கும்தன் நாளை எடுத்து "* [103]

என வலியுறுத்திக் கூறுவார். சங்ககாலத்தில் ஆடவர்கள் மட்டுமன்றி மகளிர்களும் மறப்பண்புடன் திகழ்ந்தனர். தன் கணவன் போரில் புகழ் பெறுவதற்காகப் போர் நிகழ வேண்டும் என்று எண்ணிய பெண்ணொருத்தியை,

*" களிறுபொரக் கலங்கு கழல்முள் வேலி*
*அரிதுஉண் கூவல் அங்குடிச் சீறூர்*
*ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை*
*நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது*
*விருந்து எதிர் பெறுகதில் யானே என்ஐயும்*
*ஓ...........................வேந்தனொடு*
*நாடுதரு விழுப்பகை எய்துக எனவே "* [104]

என்னும் இப்பாடல் அறிமுகம் செய்கின்றது. போரில் தன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் இறந்த நிலையில் பால்மணம் மாறாத சிறுவனை அலங்கரித்துப் போர்க்களம் அனுப்பிய செய்தியை,

*" கெடுக சிந்தை கடிது இவள் துணிவே*
*மூதின் மகளிர் ஆதல் தகுமே*
*மேல்நாள் உற்ற செருவிற்கு இவள்தன்னை*
*யானை எறிந்து களத்துஒழிந் தனனே*
*நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்*
*பெருநிரை விலக்கி ஆண்டுப்பட் டனனே*
*இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி*
*வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்*

*பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி*
*ஒருமகன் அல்லது இல்லோள்*
*செருமுக நோக்கிச் செல்க என விடுமே "* [105]

இப்பாடல் தெரிவிக்கிறது. தொடக்க காலத்தில் நிரை கவர்தல் தான் குழுச் சண்டைகளின் தொடக்கமாக அமைந்தது. அக்குழுச் சண்டைகளே காலப்போக்கில் பெரிய போர்களின் மாறுபட்ட தோற்றத்திற்கான காரணங்களாக அமைந்தன. தன்னைத்தானே காத்துக் கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் மனிதனுக்கு இயல்பாகவே உண்டு. போராட்டமான சமூக நிலையில் அவ்வுணர்வு முழுமை பெறும். தன்னை நிலைநிறுத்திக் கொள்ளுதல் அனைவர்க்கும் முழுமைபெற்ற சிந்தனையாதலால், பண்டைக்காலம் தன்னை, தன் சமூகத்தைக் காத்துக் கொள்வதில் கவனம் செலுத்தியது. அதனால் போர் பற்றிய சிந்தனை முழுமை பெற்றுப் பரவியதில் வியப்பில்லை. பண்டைக்காலம் போர் நடைபெறுவதைத் தவிர்க்க இயலாத காலமாக இருந்தது. மூவேந்தர்கள் , வேளிர்கள், சிற்றரசர்கள் முதலியோர்களுக்கிடையில் நடைபெற்ற பல்வேறு போர்கள் இதனைத் தெளிவுபடுத்தும்.

## பெண்கோடலில் போர்

பெண்களின் பொருட்டும் போர்கள் நடைபெற்றமைக்கு மகட்பாற் காஞ்சித்துறைப் பாக்கள் சான்று பகர்கின்றன. பெண்களைத் திருமணம் செய்யும் பொருட்டும் போர்கள் நடைபெற்றன. வளம் நிறைந்த நாடு பெண்ணின் பொருட்டு அழியும் என்பதற்கு,

*" அரைசுதலை வரினும் அடங்கல் ஆனா*
*நிரைகாழ் எஃகம் நீரின் மூழ்கப்*

*புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்*
*வயல்அமர் கழனி வாயிற் பொய்கைக்*
*கயலார் நாரை உகைத்த வாளை*
*புனலாடு மகளிர் வளமனை ஒய்யும்*
*ஊர்கவின் இழப்பவும் வருவது கொல்லோ*
*சுணங்கு அணிந்து எழிலிய அணைந்துஏந்து இளமுலை*
*வீங்கு இறைப் பணைத்தோள் மடந்தை*
*மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே "* [106]

நீர் வளத்தோடு அனைத்து வளங்களும் நிரம்பிய இந்நாட்டிற்கு இவளின் அழகே காரணமாக அமையும் என்னும் கருத்து இப்பாடல் வாயிலாக கூறப்படுகின்றது.

பெண் கேட்டு வந்த மன்னர்களை மதிக்காததன் பொருட்டுப் போர்கள் நடைபெற்றன. போரினால் நாட்டின் வளங்கள் அனைத்தும் கெட்டுப் போன நிலையிலும் பெண் வீட்டார் மனம் இரங்காமல் இருக்கின்ற நிலையை,

*" மதிலும் ஞாயில் இன்றே கிடக்கும்*
*நீஇர் இன்மையின் கன்றுமேய்ந்து உகளும்*
*ஊரது நிலைமையும் இதுவே "* [107]

என்னும் பாடலடிகள் எடுத்துக் கூறுகின்றன. போர் தொடங்கும் நிலையில் தண்ணுமை என்னும் கருவிகள் முழங்கியமையை,

*" போர்புறு தண்ணுமை யார்ப்பெழுந்து நுவல "* [108]

என்னும் பாடலடி எடுத்துக் கூறுகிறது.

## போர் நடைமுறைகள்

எதனையும் நல்ல நேரம், கோள்களின் நிலை பார்த்துச் செயல்கள் தொடங்குவது இயற்கை. பகை நாட்டை வெல்லும் எண்ணமுடன் படை நடத்திச் சென்ற மன்னர்களும் நம்பிக்கையின் பாற்பட்டவர்களாக இருந்தனர். செயல்கள் நல்லனவாக நிறைவேற வேண்டும் என்னும் அறத்தை இச்செயல்கள் நமக்கு மெய்ப்பிப்பனவாக அமைகின்றன. சேரர், சோழர், பாண்டியர் மூவரும் தங்களுக்குரிய மாலையை அணிந்து போர் புரியச் சென்றனர்.

*" இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை*
*அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்*
*ஓங்குஇருஞ் சென்னி மேம்பட மிலைந்த*
*இருபெரு வேந்தரும் ஒருகளத்து அவிய*
*வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்*
*கண்ஆர் கண்ணி, கரிகால் வளவன் "* [109]

சேரர் பனம் பூ, சோழர் ஆத்தி, பாண்டியர் வேப்பம் பூ ஆகியவற்றை அணிந்த தன்மையை இப்பாடலடிகள் விளக்குகின்றன. தான் பிறருக்கு நன்றிக் கடனாகவும், செஞ்சோற்றுக் கடனுக்காகவும் போர்க்களம் சென்று போரிட்டு உயிர் துறப்பது மரபாகப் போற்றப்பட்டதை முல்லைப்பாட்டு கூறுகின்றது. பகை நாட்டின் மீது போர் தொடுக்கச் செல்லும் மறவர்கள் வஞ்சிப் பூச்சூடிச் செல்வர். அவ்வாறான படையைப் புறநானூறு எடுத்துக் காட்டுகின்றது.

*" தலையோர் நுங்கின் தீஞ்சோறு மிசைய*
*இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்*
*கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர*
*நிலமார் வையத்து வலமுறை வளைஇ*
*வேந்து பீடழித்த ஏந்துவேல் தானை "* [110]

படைப் பெருக்கத்தை விளக்கும் இப்பாடலடிகளில், முன்னர்ச் செல்லும் படை வீரர்கள் பனை நுங்கையும், இடையில் செல்லும் படை வீரர்கள் பனம் பழத்தையும், கடைசியாகச் சென்றவர்கள் பனங்கிழங்கையும் தின்றதாகக் கூறுகின்றது. இப்பாடல் படைப் பெருக்கத்திற்குச் சான்றாக அமைகின்றது.

பண்டைய மன்னர்களுக்கு நிமித்தம் காணக் கூடிய ஒன்றாகக் காவல் மரங்கள் விளங்கின. தாங்கள் முன்னர் காவல் மரத்தைப் பார்த்துப் பின்னர்ப் போருக்குச் செல்லுதல் மரபாக இருந்தது. போருக்குப் புறப்படும் போது இலைகள் தளிர்த்திருப்பின் போரில் வெற்றி கிடைக்கும் என்றும் மரம் கரிந்திருப்பின் தோல்வி கிடைக்கும் என்றும் நம்பினர்.

"கடி மரம் சில அரசரால் தலைநகரில் மட்டும் தனிமரமாகவும், சிலரால் ஊர்தோறும் தனிமரமாகவும், சிலரால் சோலைதோறும் தனிமரமாகவும் வளர்க்கப்பட்டதாகத் தெரிகின்றது " [111] என்பர் ஞா.தேவநேயன். காவல் மரம் தந்த நிமித்தத்தைப் பொய்யாக்கி போரில் வெற்றி பெற்ற காரணத்தால் 'பாரி' உன்னத்துப் பகைவன் எனப் போற்றப்பட்டான். " தன் பகைவரின் காவல் மரமான கடம்பினை வெட்டி வீழ்த்தியதையும் இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. பகைவரின் காவல் மரத்தை வெட்டுவதைத் தொழிலாகக் கொள்ளுமாறு, பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனுக்குக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் குறிப்பிடுகின்றார்" [112]

காவல் மரம் மன்னர்களின் வெற்றிச் சின்னமாக விளங்கிய சிறப்பை உடையதாகும். பகை மன்னர்களால் காவல் மரத்திற்குத் தீங்கு நேரும் போது அது கடுமையான பகை உணர்வினை உண்டாக்குவதாக இருந்தது.

மன்னர்கள் தங்கள் கடமையை மறந்திருக்கும் நிலையில் அதனை அறிவுறுத்திப் பாடும் புலவர்கள் பாடலின் வாயிலாக அறத்தை வலியுறுத்தினர். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் படைவீடு அமைத்துத் தங்கியிருந்த போது விறலியரின் ஆடல் பாடல் கண்டு கேட்டு மகிழ்ந்ததைப் பிறர் அறியாமல் இன்பமடைய வேண்டும் எனப் புலவர்,

*" சுடர்நுதன் மடநோக்கின்*
*வாணகை யிலங்கெயிற்*
*றமிழ்துபொதி துவர்வா யசைநடை விறலியர்*
*பாடல் சான்று நீடினை யுறைதலின்*
*வெள்வே லண்ணன் மெல்லியன் போன்மென*
*உள்ளுவர் கொல்லோநின் னுணராதோரே "* [113]

என்ற பாடலடிகளின் வாயிலாக வலியுறுத்துகின்றார்.

போரின் பொருட்டுப் பாசறையில் தங்கியிருக்கும் மன்னர்களும் போரின் ஒருமுகச் சிந்தனையில் தங்களின் தேவைகளை மறந்திருப்பர். அந்நிலையில் தலைவியின் நிலையை அறிவுறுத்திப் போரை விரைவில் முடிக்க அறிவுறுத்துவர்.

*" பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து*
*மாணிழை யரிவே காணிய வொருநாட்*
*பூண்க மானநின் புரவி நெடுந்தேர் "* [114]

மன்னர்கள் போரின் பொருட்டுப் பாசறையில் தங்கி இருக்கின்ற போது அவனோடு வீரர்களும் இருப்பர். மன்னன் கண் விழித்து இரவெல்லாம் வீரர்களைச் சந்திப்பதும் போர் உத்திகளை வகுப்பதுமாக இருப்பான். இதற்கு நெடுநல்வாடை சிறந்த உதாரணம்.

## காவிதிமாக்கள்

மன்னனுக்கு உறுதுணையாக இருந்தோருள் குறிப்பிடத் தக்கவர்கள் காவிதிமாக்கள். சான்றோர்கள் போன்று மன்னனின் செயல்களை மனதால் உணர்ந்து அவனை நல்வழிப்படுத்தும் இயல்புடையவர்கள். மதுரைக்காஞ்சி காவிதிமாக்களின் சிறப்பினை,

*" ஆவுதி மண்ணி அவிர்துகில் முடித்து,*
*மா விசும்பு வழங்கும் பெரியோர் போல,*
*நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி,*
*அன்பும் அறனும் ஒழியாது காத்து,*
*பழி ஒரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த*
*செம்மை சான்ற காவிதி மாக்களும் "* [115]

என்னும் பாடலடிகள் சுட்டிக் கூறுகின்றன. காவிதிமாக்கள் அமைச்சர்கள் நிலையில் வைத்துப் போற்றப்பட்டவர்கள்.

## குற்றமும் தண்டனையும்

பண்டைக்காலத்தில் குற்றம் புரிந்தோருக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட்டன. சட்டமும் நீதியும் சிறந்திருந்ததால் நடுவுநிலைமை தவறாமல் நீதி வழங்கப்பட்டது. மன்னனின் உரிமைக்குரிய பகுதியில் விளைந்த மாங்கனியை உண்டமைக்காகப் பெண்ணொருத்திக்குத் தண்டனை வழங்கப்பட்டமையைக் [116] குறுந்தொகை குறிப்பிடுகின்றது. பெண்களைக் காதலித்து ஏமாற்றியோர்க்கும் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட்டன.

*" கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்*
*திருநுதற் குறுமகள் அணிநலம் வௌவிய*
*வறனிலாளன் அறியேன் என்ற*
*திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்*
*முறியார் பெருங்கிளை செறியப் பற்றி*
*நீறுதலைப் பெய்த ஞான்றை "* [117]

ஏமாற்றியவனை மரத்தில் கட்டி வைத்துச் சுண்ணாம்பு நீரை ஊற்றிய கருத்து இப்பாடலடிகளில் கூறப்படுகின்றது.

*" குடிபுறங் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்*
*வடுஅன்று வேந்தன் தொழில் "* [118]

என்னும் குறள் அரசனது தண்டனை தவறாகக் கருதப்படாத தன்மையை எடுத்துக் கூறுகின்றது.

பண்டைய அரசியல் அறத்தன்மை மிக்கனவாகத் திகழ்ந்தமைக்குப் பல்வேறு சங்கப்பாக்களும் சான்று பகர்கின்றன. நாட்டை எப்படி வேண்டுமானாலும் ஆளலாம் என்னும் நிலை மாறி இப்படித்தான் ஆள வேண்டும் என்ற வரைமுறைப் படுத்தப்பட்ட அமைப்பை உடையதாகப் பண்டைய அரசியல் இருந்தது. மக்களைக் காப்பதும் அவர்களின் நல்வாழ்விற்கு அடிப்படையான அமைதியை நிலை நாட்டுவதும் மன்னனின் நோக்கமாக இருந்தது. அரசியல் தொடர்பான நிகழ்வுகள் அனைத்தும் அறவழிச் சிந்தனை உடையனவாகவே மேற்கொள்ளப் பெற்றன. நாட்டைக் காக்கும் பணி தொடங்கி அன்றாடச் செயல்பாடுகள் வரை கவனம் செலுத்திய பண்டைய அரசியலறம் பிற்கால அரசியல் சார்ந்த செயல்களுக்குக் காரணமாக அமைந்தன.

## தொகுப்புரை

ஆதிகாலத்தில் அரசு தோன்றுவதற்கு முன்பு மனிதன், இயற்கையின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்து வந்தான். நாளடைவில் நாகரிக வளர்ச்சியின் காரணமாக, அம்மனிதர்களிடையே ஒற்றுமை உணர்ச்சி உருவாகியது. அதன் காரணமாக மனிதனுக்கெனப் பண்பாடு உருவாகியது. பண்பாட்டின் காரணமாக, மக்கள் தங்களுக்குள் ஒரு ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டனர். அதன்படி மக்கள் தங்களுக்கு ஒரு தலைவனை நியமித்துக் கொண்டு, அவனுக்குக் கீழ்பட்டு நடக்க ஒப்புக் கொண்டனர். இதன் விளைவாகவும் அரசு என்னும் அமைப்பு தோன்றியிருக்கலாம்.

1. மன்னன் நாட்டின் உயிராகக் கருதப்பட்டான்.

2. நாட்டைக் காப்பதில் வீரம் மிக்க காவலனாகவும், மக்களையும், தன்னைச் சார்ந்த சுற்றத்தையும் காப்பதில் தாய் போலவும் விளங்கினான்.

3. நேர்மையான ஆட்சியின் சின்னமாகச் செங்கோல் போற்றப்பட்டது.

4. இரவலர்களைக் காக்கவும், சுற்றம் பேணவும், பிறர் போற்றவும், புகழுக்காகவும் கொடை வழங்கலை மன்னர்கள் மேற்கொண்டிருந்தனர்.

5. மன்னர்கள் குடிமக்களைக் காப்பதைத் தம் தலையாய அறமாகக் கொண்டிருந்தனர்.

6. பெருமைக்காகவும், புகழுக்காகவும், பெண்கொடை பொருட்டும், செல்வத்தின் காரணமாகவும், நாட்டின் எல்லையை விரிவுபடுத்தும் நோக்குடனும் போர் மேற்கொள்ளப்பெற்றது.

7. எளியோர்களுக்குப் பாதிப்பு ஏற்படாவண்ணம் போர் நிகழ்வுகள் வகுக்கப்பெற்றன.

8. மாலைக்காலத்திற்குப் பின் போர்புரிதல் அறமாகக் கருதப்பெறவில்லை.

9. தமிழர்களின் நிலப்பாகுபாடு குறித்த வாழ்க்கை முறைகளும் மறம் சார்ந்த அறங்களாகப் போற்றப்பட்டன.

10. போர்க்களத்தில் விழுப்புண் பெற்று இறத்தல் பெருமைக்குரியதாகக் கருதப்பட்டது.

11. மன்னனின் வீரத்தையும், இளமையையும் இழிந்து பேசும் நிலையில் மாற்று மன்னன் மீது வஞ்சினம் கூறிப் போர் புரிதல் நிகழ்ந்தது.

12. போர்கள் நடைபெறுவது புலவர்களின் தூதாலும் மதிநலத்தாலும் தடுக்கப்பெற்றது.

13. சமமான ஆற்றல் உடையோருடன் போர் புரிதல் அறமாகக் கருதப்பெற்றது.

14. போர் முடிந்த பின் பகை நாட்டவர் மீண்டும் வலிமை பெறாவண்ணம் நாட்டின் விளை நிலங்கள், மன்றங்கள், கட்டடங்கள் முதலியவற்றை அழித்தல் மேற்கொள்ளப்பெற்றது.

15. அரசனுக்கு உறுதுணையாக விளங்கும் அமைச்சரும் நடுவுநிலை உடையவராக இருத்தல் வேண்டும் என்னும் கருத்து வலியுறுத்தப் பெறுகிறது.

16. பசுக்களைக் கவர்தலில் தொடங்கிய குழுப்போர் முறை பிற்காலத்தில் பெரிய போர்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது.

17. ஆண்களேயன்றி பெண்களும் போரில் விருப்பம் உடையோராக, வீரம் மிக்கவர்களாகத் திகழ்ந்தனர்.

18. போருக்குச் செல்லும் முன் நிமித்தம் பார்த்தல் நடைமுறையில் இருந்தது.

19. காவல் மரம் வெற்றியின் சின்னமாகக் கருதப்பட்டது. காவல் மரத்தைப் பகை மன்னன் வெட்டுதல் வீரத்திற்கு இழுக்கெனக் கருதப்பட்டது.

20. மன்னனின் குடை மக்களைக் காக்கும் சின்னமாகக் கூறப்பெற்றது.

21. மன்னனின் மனநிலை அறிந்து அறம் உரைக்கும் தன்மையோர்களாக காவிதிமாக்கள் போற்றப்பட்டனர்.

22. குற்றங்களுக்கு நடுவுநிலையோடு கடுமையான தண்டனைகள் விதிக்கப்பெற்றன.

## அடிக்குறிப்புகள்

1. சாமி. சிதம்பரனார், **பழந்தமிழர் அரசியல்**, இலக்கிய நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, டிசம்பர் 1973, ப. 9.
2. எம். ஆர். அடைக்கலசாமி, **தமிழ் இலக்கிய வரலாறு**, ராசி பதிப்பகம், மூன்றாம் பதிப்பு, 2000, பக். 53-54.
3. **சிறு**. 203-206, ப. 154.
4. மேற்படி. 231, ப. 156
5. **நெடு**. 186-187, இப. 64.
6. **மலை**. 85, ப. 249.
7. மேற்படி. 70-80, பக். 248-249.
8. **பட்டின**. 283-288, ப.119.
9. **பழமொழி**. 6, ப. 9.
10. **மதுரை**. 191-194, ப. 184.
11. **புறம்**. 186: 1-4, ப. 351.
12. **குறள்**. 388, ப. 221.
13. **பதிற்**. 22: 1-11, ப. 75.
14. **பெரும்**. 443-447, ப. 95.
15. **புறம்**.72: 7-12, ப. 153.
16. மேற்படி.35: 14-15, ப. 86.
17. **பெரும்**. 220, ப. 82.

18. மேற்படி. 36-37, ப. 70.

19. **மதுரை**. 489-492, ப. 202.

20. **புறம்**.35, ப. 85.

21. மேற்படி. 28: 15-17, ப. 72.

22. மேற்படி. 20: 7-11, ப. 55.

23. மேற்படி. 2: 17-19, ப. 19.

24. மேற்படி. 117:6, ப. 221.

25. மேற்படி. 55:13-14, ப. 121.

26. மேற்படி. 55:12, ப. 121.

27. **நற்**. 146:4-5, ப. 265.

28. **பெரும்**. 36-37, ப. 70.

29. **புறம்**. 229:20, ப. 58.

30. **மேற்படி**. 3:1-2, ப. 21.

31. **நற்**.146:4, ப. 265

32. **புறம்**. 35, ப. 85.

33. **பதிற்**. 38: 13-16, ப. 164.

34. மேற்படி. 61: 12-13, ப. 288.

35. **பரி**. 10: 87-88, ப. 110.

36. **அகம்**. 389: 11-13, ப. 186.

37. **புறம்**. 38, ப. 91.

38. மேற்படி. 179: 6-9, ப. 340.

39. மேற்படி. 165: 10-11, ப.314

40. மேற்படி. 141: 13, ப. 261.

41. மேற்படி. 12, ப. 37.

42. மேற்படி. 17, ப. 45.

43. மேற்படி. 68, ப. 143.

44. மேற்படி. 101, ப. 197.

45. மேற்படி. 103, ப. 201.

46. மேற்படி. 106, ப. 205.

47. மேற்படி. 107, ப. 206.

48. மேற்படி, 110, ப. 211.

49. மேற்படி. 113: 1-3, ப. 214.

50. மேற்படி. 140, ப. 259.

51. **பெரும்**. 480- 490, ப. 98.

52. **சிறு**. 149-162, ப. 132.

53. மேற்படி. 85-87, ப. 146.

54. மேற்படி. 89-91, ப. 146.

55. மேற்படி. 93-95, ப. 147.

56. மேற்படி. 97-100, ப. 147.

57. மேற்படி. 101-104, ப. 147.

58. மேற்படி. 105-108, ப. 148.

59. மேற்படி. 109-111, ப. 148.

60. மேற்படி. 261-269, பக். 157-158.

61. **மதுரை**. 749-752, ப. 218.

62. **மலை**. 568-583, ப. 280.

63. **பதிற்**. 13, ப. 16.

64. **புறம்**. 35: 32-34, ப.86.

65. மேற்படி. 42: 10-11, ப.98.

66. மேற்படி. 75, ப. 159.

67. ராஜ்கௌதமன், **அறம் / அதிகாரம்**, விடியல் பதிப்பகம், கோவை, 1997, ப. 198.

68. **புறம்**. 184, ப. 347.

69. மேற்படி. 2, ப. 19.

70. மேற்படி. 17, ப. 45.

71. **குறள்**. 385, ப. 219.

72. **புறம்**. 22: 37-38, ப. 59.

73. மேற்படி. 10: 1-7, பக். 33-34.

74. மேற்படி. 70: 7, ப. 148.

75. **பதிற்**. 85: 9-10, ப. 404.

76. மேற்படி. 52: 7-10, ப. 52.

77. **புறம்**. 291, ப. 163.

78. மேற்படி. 31, ப. 78.

79. மேற்படி. 93: 3-9, ப. 182.

80. மேற்படி. 86, ப. 173.

81. மேற்படி. 295, ப. 82.

82. மேற்படி. 278, ப. 141.

83. மேற்படி. 312. ப. 191.

84. மேற்படி. 31: 5-6, ப. 78.

85. **அகம்**. 214: 7, ப. 242.

86. **புறம்**. 8: 123, ப. 31.

87. மேற்படி. 72, ப. 153.

88. மேற்படி. 73, ப. 155.

89. மேற்படி. 95, ப. 185.

90. ஞா. தேவநேயன், **பழந்தமிழர் ஆட்சி**, கழக வெளியீடு, சென்னை, 1961, ப. 109.

91. **புறம்**. 301, ப. 176..

92. மேற்படி. 274: 2-3, ப. 135.

93. கா. கோவிந்தன், **பண்டைத் தமிழர் போர்நெறி**, வள்ளுவர் பண்ணை, சென்னை - 1, (1965), ப. 208.

94. V.R. Ramachandra Dikshitar, **War in Ancient India,** London, 1984, P. 8.

95. **புறம்**. 45, பக். 104-105.

96. மேற்படி. 44, ப. 103.

97. மேற்படி. 213, ப. 31.

98. **பட்டின**. 228-283, பக். 115-118.

99. **மதுரை**. 152-176, ப. 182.

100. **புறம்**. 7,பக். 29-30.

101. **கலி**. 7, ப. 39.

102. **புறம்**. 89: 7-9, ப. 177.

103. **குறள்**. 776, ப. 441.

104. **புறம்**. 306, பக். 183-184.

105. மேற்படி. 279, பக். 142-143.

106. மேற்படி. 354, ப. 256.

107. மேற்படி. 355:1-3, ப. 257.

108. **பதிற்**. 84: 15, ப. 398.

109. **பொருந**. 143-148, ப. 132.

110. **புறம்.** 225: 1-5, ப. 50.

111. அரங்க. இராமலிங்கம், **சங்க இலக்கியத்தில் வேந்தர்**, பாரதி புத்தகாலயம், சென்னை, 2002, ப.156.

112. **புறம்.** 57, ப. 125.

113. **பதிற்.** 51: 19-24, ப. 235.

114. மேற்படி. 81: 30-32, ப. 385.

115. **மதுரை.** 494-499, ப. 202.

116. **குறு.** 292, ப. 435.

117. **அகம்.** 256: 15-20, ப. 331.

118. **குறள்.** 549, ப. 307.

சங்க இலக்கியத்தில் அறங்கள் என்னும் தலைப்பிலான இவ்வாய்வு சங்ககால வழக்கில் இருந்த பல்வேறு அறங்களை அதன் பரிமாணங்களுடன் எடுத்து விளக்குகின்றது. தனிமனித அறம், சமுதாய அறம், அரசியல் அறம் என்னும் இயல்களில் ஆய்வு செய்யப்பெற்ற தரவுகளின் அடிப்படையில் கீழ்க்கண்ட முடிவுகள் பெறப்படுகின்றன.

1. மனித இன வரலாற்றில் மனிதன் நன்மை தீமையை அறிந்து பிறரோடு இணக்கமாக ஒன்று கூடி வாழத் தலைப்பட்ட நிலையிலேயே அறங்கள் தோற்றம் பெற்றன.

2. அறங்கள் குறித்துப் பல்வேறு விளக்கங்கள் காணப்பட்ட போதும் அறம் என்பது நல்ல செயல்களின் தொகுப்பு என்னும் முடிவுக்கு வரலாம்.

3. தனக்கும் பிறருக்கும் நலம் பயக்கும் நிலையில் மனத்தாலும் செயலாலும் நல்லவற்றையே நினைத்தல் ; நல்லவற்றையே செய்தல் என்னும் நிலையில் அறங்கள் தோற்றம் பெறுகின்றன.

4. நினைவுகள்தாம் செயல்களாக மாற்றம் பெறும். ஆகையால் நல்ல செயல்கள் விளைய நற்சிந்தனை தேவை என்னும் அடிப்படையில் சொல்லேர் உழவர் எனச் சிறப்பிக்கப்பட்ட புலவர்களால் அறம் உரைக்கப்பட்டது.

5. குடும்பம் பல்வேறு அறங்களின் தோற்றத்திற்குக் காரணமாக விளங்குவதால் தனிமனித அறத்தின் காரணியாகக் குடும்ப

அமைப்பு விளங்குகிறது. அக்குடும்ப அமைப்பு, அன்பு, அறம், ஈகை, விருந்து உபசரித்தல், அந்தணர்களைப் போற்றல், நட்பு, அடைக்கலம்கொடுத்தல் முதலிய அறங்களின் தோற்றத்திற்கும் அவை வளர்ந்து சமுதாய அறமாக மாறுவதற்கும் வழிகோலுகின்றது.

6. தனிமனிதன் ஒழுக்கத்தில் மேம்பட்டுத் தான் கடைப்பிடிக்கும் அறங்கள் தனிமனித நிலையில் இருந்து விரிந்து பலரும் கடைப்பிடிக்கும் சமுதாய அறமாக மாற்றம் பெறுகின்றது. சமுதாய அறமாக மாற்றம் பெறும் தனிமனித அறங்கள் பொது அறங்களாகிப் பண்பட்ட அறக்கூறுகளாக நிலைபேறடைகின்றன.

7. மனிதன் பண்பாட்டு வளர்ச்சியினால் ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்ட போது உருவான சமுதாய அறம் மனிதச் சிந்தனையில் முகிழ்த்த அறங்களின் தொகுப்பாக விளங்கும் தன்மைத்தாகும்.

8. தமது நலனைப் பொருட்படுத்தாமல் பிறருக்காக வாழ்ந்து பிறரின் நலம் போற்றும் உயரியவர்கள் சான்றோர்கள் என மதிக்கப்பெற்றனர். சான்றோர்களின் மூலமாக இப்படியாக வாழவேண்டும் என்னும் அறம் வலியுறுத்தப் பெறுகின்றது.

9. வணிகம் என்பது வாங்கும் பணத்திற்கேற்பப் பொருள்களைக் கொடுப்பது. நேர்மையின் மூலமாகக் கூறப்படும் வணிக அறம் உயர்ந்ததாகப் போற்றப்பட்டது.

10. அறச்சாலைகள், மருத்துவப்பணிகள் முதலியன மக்களின் வாழ்க்கைக்குப் பயனுடையதான அறங்களைச் செய்வதில் சிறந்திருந்தன.

11. இலக்கியக் கருத்துகள் பலவும் வாழ்க்கைக்குள் நிகழும் துன்ப நிகழ்வுகளைச் சுட்டிக்காட்டி அதற்குள்ளும் இன்பம் தேடுவதே வாழ்க்கை என்னும் உயரிய அறத்தைக் கற்பிக்கின்றன.

12. கல்வி மனிதனை நாகரிக பண்பாட்டு நிலைக்கு உயர்த்தும் தன்மையது. ஆதலால் கல்வியின் இன்றியமையாமை உணர்த்தப்பட்டது.

13. பழங்கால இல்லறம் அறச்சாலையாகப் போற்றப்பட்டது. அவ்வாறு அறம் ஆற்றுவதற்குப் பொருள் இன்றியமையாதது. ஆதலால் இல்லறத்தின் உயிர்நாடியான ஆடவர்க்கு தொழில் செய்வதும் அதனால் பொருளீட்டுதலும் கடமையாகக் கூறப்பட்டது.

14. பெரியோர்களால் ஏற்பாடு செய்யப்பட்டு நிறைவேற்றி வைக்கப்படும் திருமணம் அறமாகப் போற்றப்பட்டது. காதல் திருமணங்கள் காந்தருவம் என்னும் நிலையில் ஏற்கப்பட்டன.

15. மனிதர்கள் ஒன்று கூடி எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ளவும் உறவுகளை மேம்படுத்திக் கொள்ளவும் வழிபாட்டு முறைகளும் விழாக்களும் ஏற்படுத்தப்பட்டன.

இவைகளின் மூலமாக மனிதன் மேற்கொள்ளும் வாழ்வியல் அறங்கள் கலைநிகழ்ச்சிகள் மூலமாகவும் வலியுறுத்தப் பெற்றன.

16. நடுநிலையான நீதி வழங்கும் மனம் அறத்தின் பாதுகாவலானது என்னும் நிலையில் மனிதப் பண்பு உயர்கின்றது. குற்றம் செய்பவரைத் தண்டிப்பதை விடத் தவற்றை உணர்ந்து தவறு செய்தவர் திருந்தும் நிலை சிறந்ததாகப் போற்றப்பட்டது.

17. நன்மையான செயல்களைச் செய்வதனால் அறம் பெருகும் நிலையும், தீமையான செயல்களினால் தீமையும் பெருகும் என்னும் கருத்து வலியுறுத்தப்பெற்று இலக்கியங்களின் வாயிலாக நற்செயல்களால் விளையும் அறங்களே நன்மை பயக்கும் என்னும் கருத்து பெறப்படுகிறது.

18. பொதுநலம் பேணலும் பிறருக்காக உழைத்தலும், விட்டுக் கொடுத்தலும் சமூக அறத்திற்கு வித்திடும் தன்மையை எடுத்துக் காட்டுவதாக உள்ளன.

19. நாட்டில் வாழும் மக்களுக்கு மன்னனே உயிர் போன்றவன் என்னும் கருத்தாக்கம், நாட்டு மக்கள் அனைவரும் அரசனின் நல்லாட்சியை எதிர்நோக்கும் தன்மையினையும், அதனால் அரசன் கொடுக்க வேண்டிய நல்லாட்சியையும் வலியுறுத்தும்.

20. நாட்டு மக்களுக்குப் பாதுகாப்பான வாழ்க்கையை வழங்குவதும், உணவுத் தட்டுப்பாடின்றிப் பாதுகாப்பதும், நீதியில் சிறந்தவனாக இருப்பதும் அரசனுக்குரிய சிறந்த குணங்களாகப் போற்றப்பட்டன.

21. பண்டைக்காலப் போர் முறையில் கடைப்பிடிக்கப்பட்ட அறங்கள் போர்க்களங்களில் பின்பற்றப்பட்ட நன்னெறிகளை விளக்குகின்றன. போருக்குத் தகுதியற்றவருக்கு எந்தத் துன்பமும் விளைவிக்கக் கூடாது என்னும் நிலையில் பாதுகாக்கப்பட்ட பின் போர் புரியும் நிலை இதற்குச் சான்று.

22. பண்டைக் காலத்தில் போர் வீரத்தின் உயர்வு நிலையாகக் கடைப்பிடிக்கப்பட்டதால் போர்க்களத்தில் விழுப்புண்பட்டு இறத்தல் உயர்வானதாகப் போற்றப்பட்டது. போரில் இறக்காதோரையும் மார்பில் வாளால் கீறிப் புதைப்பதும் வீரச் சிந்தனையைத் தெளிவுபடுத்தும்.

23. மாற்று நாட்டு மன்னர்களின் இழிவான பேச்சுநிலை, வஞ்சினம் உரைத்தல், எல்லை விரிவாக்கம், பெண்கோடல் என்னும் நிலையில் போர்கள் நடைபெற்றன. இப்போர்களின் பின்னர்ப் பகைவர் நாட்டைச் சின்னாபின்னமாக்கி அழிப்பது வீரத்தின் உயர்வாகப் போற்றப்பட்டது.

24. போர்கள் நடைபெறுவதால் நிகழும் அழிவு நிலைகள் மனத்தில் கொள்ளப் பெற்றுப் புலவர்களின் மூலமாகத் தூதால் போர் தடுக்கும் அறம் சிறந்ததாக விளங்கியிருந்தமைக்கு

ஔவையாரின் தூதுப் பாடல்கள் சிறந்த சான்றாக விளங்குகின்றன

25. அரசனின் காவல்மரம் புனிதமாகப் போற்றப்பட்டது. பகை மன்னனால் இழிவு படுத்தப்படும் சூழ்நிலையிலும், காவல் மரத்தை வெட்டுதலும் வீரத்திற்கு இழுக்காகக் கருதப்பட்டதால் அதனை முன்னிட்டுப் போர்கள் பல நடைபெற்றன. வெற்றியின் சின்னமாகக் காவல் மரம் போற்றப்பட்டது.

26. வெண்கொற்றக்குடை மக்களைக் காப்பது எனக் கூறி , அதற்கு உரிமையான அரசனின் சிறப்புப் பாடப்படுவதால் அரசனின் அறச் செயல்கள் புலப்படுகின்றன. மக்களைக் காப்பதே அரசனின் நோக்கமாக இருக்க வேண்டும் என்னும் அறத்தை வலியுறுத்துவதில் சங்கப் பாக்கள் முன் நிற்கின்றன.

27. வறுமையிலும் செம்மையான அறமுறைப்பட்ட வாழ்க்கை வாழ வேண்டியதன் அவசியத்தை சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்துக் கூறுகின்றன.

28. தனிமனித அறம், சமுதாய அறம், அரசியல் அறம் என்னும் மூன்று அறங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருந்து உலகப்பொதுமை அறங்கள் உருவாகத் துணைநின்று சமூகம் முழுமையும் வழிநடத்தும் பண்பட்ட அறங்களாக விளங்குகின்றன.

## எதிர்கால ஆய்வுகள்

இவ்வாய்வு சங்க இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கும் அறக் கருத்துகளை ஆய்வுப் பொருளாகக் கொண்டிருப்பதால் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டு இருக்கும் அறங்கள் மட்டும் விரிவான நோக்கில் ஆய்வு செய்யப்பட்டிருக்கின்றன. தமிழ் இலக்கியங்கள் முழுவதிலும் உள்ள அறங்கள் என்று விரிவுபடுத்தி ஆராயலாம்.

தமிழ் இலக்கியங்களோடு வடமொழி இலக்கியங்களில் உள்ள அறங்களை ஒப்பிட்டு ஆராயலாம். தனிமனித அறம், சமுதாய அறம், ஆகியன உளவியல் நோக்கில் தெளிவுபடுத்தப்படுவதற்கும், சமுதாய நோக்கில் விரிவான அளவில் அலசவும் வாய்ப்பளிக்கின்றது. அரசியல் அறம் இக்கால அரசியல் நிலையுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கும் அதன் மூலமாகக் காலம் தோறும் ஏற்பட்ட மாற்றங்களை அறிவதற்கும் வாய்ப்பளிக்கின்றது. சுருக்கமாகக் கூறின் மூன்று அறங்களுமே சமூகப் பயன்பாட்டு ஆய்வை மேற்கோள்வதற்கு உறுதுணைபுரியும் என்பது இந்த ஆய்வேட்டினை உருவாக்கிய ஆய்வாளரின் எண்ணம் ஆகும்.

# முதன்மை ஆதாரங்கள்

**எட்டுத்தொகை நூல்கள்:**

நற்றிணை

குறுந்தொகை

ஐங்குறுநூறு

பதிற்றுப்பத்து

பரிபாடல்

கலித்தொகை

அகநானூறு

புறநானூறு

**பத்துப்பாட்டு நூல்கள்:**

திருமுருகாற்றுப்படை

பொருநராற்றுப்படை

சிறுபாணாற்றுப்படை

பெரும்பாணாற்றுப்படை

முல்லைப்பாட்டு

மதுரைக்காஞ்சி

நெடுநல்வாடை

குறிஞ்சிப்பாட்டு

பட்டினப்பாலை

மலைபடுகடாம்

# துணை ஆதாரங்கள்


1. அடைக்கலசாமி .எம். ஆர். **தமிழ் இலக்கிய வரலாறு**, ராசி பதிப்பகம், 2000.

2. அமுதசுரபி தீபாவளி மலர், சென்னை, 1997.

3. அறவாணன் .க. ப. **அற்றை நாள் காதலும் வீரமும்**, பாரி நிலையம், 1978.

4. அறிவுநம்பி .அ. **கம்பரின் அறவியல்**, அமுதன் நூலக வெளியீடு, 1997.

5. ஆறுமுகம் .நா. **கலித்தொகை ஓர் ஆழ்வாய்வு**, கன்னி நிலையம், ஈரோடு, 1985.

6. இராமநாதன் செட்டியார் லெ.ப.கரு. **சங்ககாலத் தமிழர் வாழ்வு**, முத்தையா வெளியீடு, 1967.

7. இராமலிங்கம் .அரங்க. **சங்க இலக்கியத்தில் வேந்தர்**, பாரதி புத்தகாலயம், சென்னை, 2002.

8. இலக்குவனார் .சி. **தொல்காப்பிய ஆராய்ச்சி**, வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1971.

9. இளம்பூரணர் (உரை.) **தொல்காப்பியம், பொருளதிகாரம்**, கழக வெளியீடு, சென்னை, 1969.

10. கலைவாணி இராமநாதன். **இந்து தர்மமும் வர்ண தர்மமும்**, ஸ்ரீ ரங்கா பிரிண்டர்ஸ், மதுரை, 1992

11. கிருட்டினன் .அ. **தமிழர் பண்பாட்டியல்**, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1992.

12. குருநாதன் .இராம. **புறநானூறு புதிய பார்வை**, வானதி பதிப்பகம், சென்னை, 1997.

13. கோவிந்தன் .கா. **சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை**, 1 - 6 தொகுதிகள், கழக வெளியீடு, 1954.

14. கோவிந்தன் .கா. **பண்டைத் தமிழர் போர்நெறி**, வள்ளுவர் பண்ணை, சென்னை 1965.

15. சந்திரசேகரன் .இரா., சக்கரபாணி .க., இந்திரசித்து.க., சேலம் செல்லையா (பதி)., **சங்க இலக்கியம் பன்முக நோக்கு**, வெளியீடு: மகாகவி பாரதியார் நூலகம், கோவை, 2001.

16. சரளா ராசகோபாலன். **சங்க இலக்கியம் (அகம்)**, ஒளிப்பதிப்பகம், சென்னை, 1988.

17. சாலினி இளந்திரையன். **சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1995,

18. சிதம்பரனார் .சாமி. **பழந்தமிழர் அரசியல்**, இலக்கிய நிலையம், சென்னை, 1973.

19. சிதம்பரனார், சாமி. **பதினெண்கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும்**, இலக்கிய நிலையம், சென்னை, 1986.

20. சிதம்பரனார் .சாமி. **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்**, இலக்கிய நிலையம், சென்னை, 1988.

21. சிவராசன் .து. **சங்க இலக்கிய வாழ்வியல்**, சிவம் பதிப்பகம், வேலூர், 1998.

22. சுப்பிரமணியன் .கா. **சங்ককாலச் சமுதாயம்**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1987.

23. சுப்புரெட்டியார் .ந. **தமிழ் இலக்கியங்களில் அறம், நீதி, முறைமை**, தேன்மழைப் பதிப்பகம், 1988.

24. செந்துறைமுத்து. **பரிபாடலில் பழக்க வழக்கங்கள்**, நல்வாழ்வுப் பதிப்பகம், சென்னை, 1978.

25. சேதுப்பிள்ளை, ரா. பி. **தமிழர் வீரம்**, பழனியப்பா பிரதர்ஸ், திருச்சிராப்பள்ளி, 1954.

26. ஞானசம்பந்தன் அ.ச. (பதி.) **தேவாரத் திருப்பதிகங்கள்**, கங்கை புத்தக நிலையம், சென்னை, 1998.

27. ஞானசம்பந்தன் .அ.ச. **அகமும் புறமும்**, கங்கை புத்தக நிலையம், சென்னை, 2001.

28. தட்சிணாமூர்த்தி அ. **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**, யாழ் வெளியீடு, சென்னை, 1999.

29. தண்டபாணி தேசிகர் .ச **நன்னூல் விருத்தியுரை**, பாரி நிலையம், சென்னை, 1998.

30. தண்டபாணி விருத்தியுரை. **திருக்குறள் அறத்துப்பால்**, கழக வெளியீடு, சென்னை. 1956.

30. திருநாவுக்கரசு . க.த. **தமிழர் நாகரிக வரலாறு**, முதல் பகுதி, விடிவெள்ளி தொல்காப்பியர் நூலகம், சென்னை, 1962.

31. திருநாவுக்கரசு .க.த. **திருக்குறள் நீதி இலக்கியம்** , சென்னைப் பல்கலைக்கழகம், 1977.

32. திருவாசகன்(உரை.) **மாணிக்க வாசகர் திருவாசகம்**, அருள் சுடர் பதிப்பகம், சென்னை, 1991.

33. தேவநேயன் .ஞா. **பழந்தமிழர் ஆட்சி**, கழக வெளியீடு, சென்னை, 1961.

34. நடராசன், தி.சு. **திறனாய்வுக் கலை**, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, 1996.

35. நாராயணவேலுப்பிள்ளை.எம்., இராமசுப்ரமணியம். இராம., இராசாராம்.துரை (உரை.) **கம்பராமாயணம் மூலமும் உரையும்**, திருமகள் நிலையம், சென்னை, 2000.

36. நெடுஞ்செழியன். இரா. **திருக்குறள் தெளிவுரை**, நாவலர் நெடுஞ்செழியன் கல்வி அறக்கட்டளை வெளியீடு, சென்னை, 1991.

37. பரிமேலழகர் (உரை.), **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்**, கழக வெளியீடு, சென்னை 1995.

38. பாண்டுரங்கன், கி. **பண்டைத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும்**, வெற்றிவேல் வெளியீடு, சென்னை, 1986.

39. பார்த்தசாரதி .நா. **அறத்தின் குரல்**, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1964.

40. பாரதியார். **பாரதியார் கவிதைகள்** , மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

41. பாலசுந்தரன் .தி.சு. **சங்க நூற் கட்டுரைகள் (அ) பழந்தமிழர் நாகரிகம்**, கழக வெளியீடு, 1940.

42. பாலசுப்பிரமணியம் .சி. **சங்க கால மகளிர்**, பாரிநிலையம், சென்னை, 1983.

43. பாலசுப்பிரமணியம் .சி. **உருவும் திருவும்**, நறுமலர் திருப்பதிகம், சென்னை, 1967, ப.32.

44. பாலசுப்பிரமணிய முதலியார் மாங்காடு வ. **கருத்தும் எழுத்தும்**, ஆக்கியோர் வெளியீடு, சென்னை 1947.

45. புலியூர்க்கேசிகன் (உரை.) **சிலப்பதிகாரம்**, பாரி நிலையம், சென்னை, 1982.

46. புலியூர்க் கேசிகன். (உரை.) **நளவெண்பா**, பாரி நிலையம், சென்னை, 1889.

47. மணி, பெ.சு. **சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1986.

48. மாணிக்கனார் .அ (உரை) **பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும்** வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1991

49. மாணிக்கனார் .அ (உரை) **திருவருட்பா மூலமும் தெளிவுரையும்** ( ஏழாம் தொகுதி), வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2002,

50. முத்துராசன், கு. **சங்க காலம்**, தேன்தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1980.

51. முத்துலக்குமி. வே. **பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்**, அனிதா பதிப்பகம், திருச்சிராப்பள்ளி, 1999.

52. வரதராசன். மு. **தமிழ் இலக்கிய வரலாறு**, சாகித்ய அகாதெமி, 1998.

53. வேங்கடசாமி நாட்டார், ந. மு., துரைசாமிப்பிள்ளை ஔவை சு. (உரை.), **மணிமேகலை**, கழக வெளியீடு, 1992.

54. ராமகிருஷ்ணன், எஸ். **தமிழர் அரசியல்**, திலகம் பதிப்பகம், மதுரை, 1956.

55. ராஜ்கௌதமன். **அறம் / அதிகாரம்**, விடியல் பதிப்பகம், கோவை, 1997.

1. Ramachandra Dikshitar .V.R. **War in Ancient India,** London, 1984.

2. Ratna Swami, S. **A Short History of the Ancient Tamils and their Literature,** Thaiyalnayaki Veliyeedu, Annamalainagar, 1979.

## அகராதி

1. அனவரதவிநாயகம் பிள்ளை. எஸ். (பதி.) **கழகத் தமிழ்க் கையகராதி** கழக வெளியீடு, சென்னை, 1990.

2. பொ. இராமநாதன். **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி,** இன்ஸ்டிடியூட் ஆப் ஸவுத் இந்தியன் ஸ்டடீஸ், சென்னை, 1991.

3. கதிரைவேற்பிள்ளை .நா. **தமிழ்மொழியகராதி,** ஏசியன் எஜூகேஷனல் சர்வீஸஸ், புதுடெல்லி, 1992.

4. கோபால் சி.பி. **தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி**, இலட்சுமி பதிப்பகம், கோவை, 2000.

5. சிங்காரவேலு முதலியார் .ஏ. **அபிதான சிந்தாமணி**, ஏசியன் எஜூகேஷனல் சர்வீஸஸ், புதுடெல்லி, 1994.

6. சுப்பிரமணியன், பா.ரா.(பதி.) **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி**, தமிழ் - தமிழ் - ஆங்கிலம், க்ரியா வெளியீடு, 1992.

7. திவாகர முனிவர். **சேந்தன் திவாகரம்**, கழக வெளியீடு,சென்னை, 1958.

8. தூரன், பெ.(பதி.) **கலைக்களஞ்சியம் (தொகுதி 1)** தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1963.

9. தேவநேயன் .ஞா. (பதி) **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி**, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித்திட்ட இயக்கக வெளியீடு, சென்னை, 1985.

10. பாலுசாமி. நா(பதி.) **வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி 2)**, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்,

11. மணிமேகலைத் தமிழ் - தமிழ் அகராதி. மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 1985.

12. Universal Dictionary : **Readers Digest Association,** New York, USA 1998.

## ஆய்வேடுகள்

1. அலங்காரமேரி .ரூபி., " **அற இலக்கியங்களில் ஆசிரிய மதிப்பீடுகள்** ", முனைவர் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1999.

2. அழகம்மை .கு.ப. , " **அகநானூற்றில் வாழ்வியல் நீதிகள்** ", எம்ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1987.

3. ஆறுமுகம் .நா, " **கலித்தொகை - ஓர் ஆழ்வாய்வு** ", முனைவர் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1981.

4. கன்னியப்பன் .கோ, "**கலித்தொகை காட்டும் ஆயர் வாழ்க்கை**"' எம்ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1986.

5. காந்தி.க., "**தமிழரின் நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும்** ", முனைவர் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1980.

6. சந்திரா .வே., " **புறநானூற்று ஆய்வு வரலாறு** ", எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1983.

7. சுசிலா .பி. வெ , " **புறநானூற்றில் மனித மேம்பாட்டுச் சிந்தனைகள்** ", எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1986.

8. தாமரைக்கண்ணன் .ப, "**பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நீதி**", முனைவர் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 2004.

9. தியாகராசன் .மா, " **பதிற்றுப்பத்து ஆய்வு வரலாறு** ", எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1986.

10. பார்வதியம்மாள் .ம, "**அகநானூறு காட்டும் மக்கள் வாழ்க்கை**", எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1987.

11. மல்லிகாதேவி .பா, "**புறநானூற்றில் சமுதாய அரசியல் நீதிகள்**", எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1988.

12. ரேகாபானு .ந, " **சங்க இலக்கியத்தில் விருந்தோம்பல்** ", எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1994.

13. லலிதா .என், " **கலித்தொகை ஆய்வு வரலாறு** ", எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, செ.ப.க, 1982.

## அந்தணர்

1. செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு, பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ உண்டிப் பார்ப்பன மகனே
எழுதாக் கற்பி னின்சொல் உள்ளும் ( குறு. 156 )

2. அறம்புரி யருமறை நவின்ற நாவின்
திறம்புரி கொள்கை யந்தணிர் ( ஐங். 387 )

3. ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்தல்
ஈத லேற்றலென் றாறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் ( பதிற். 24 )

4. ஆறினில் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இரு பிறப்பாளர் பொழுது அறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்று புரி நுண்ஞாண் (திரு. 180-184 )

5. சிறந்த வேதம் விளங்கப் பாடி,
விழுச் சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து,
நிலம் அமர் வையத்து ஒருதாம் ஆகி,
உயர்நிலை உலகம் இவண் நின்று எய்தும்
அற நெறி பிழையா அன்புடை நெஞ்சின்
பெரியோர் மேஎய் இனிதின் உறையும் ( மதுரை. 468-473 )

## அமைச்சர் அறம்

1. நடுவிகந்து ஒரீஇ நயன்இல்லான் வினைவாங்கக்
கொடிது ஓர்த்த மன்னவன் கோல்போல, ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினம் தெறுதலின் ( புறம். 89 )

## அரசன் சிறப்பு

1. பொருநர்க்கு ஆயினும் புலவர்க்கு ஆயினும்
அருமறை நாவின் அந்தணர்க்கு ஆயினும்
கடவுள் மால்வரை கண் விடு த்தன்ன
அடையா வாயில் அவன் ( சிறுபாண். 203-206 )

2. முதுவோர்க்கு முகிழ்த்த கையினை எனவும் ( சிறுபாண். 231 )

3. நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்,
சிலரொடு திரிதரும் வேந்தன் ( நெடு. 186-187 )

4. ஞாயிறு அன்ன அவன்வசை இல் சிறப்பு ( மலை. 85 )

5. தொலையா நல் இசை உலகமொடு நிற்ப,
பலர்புறம் கண்டு அவர் அருங் கலம் தரீஇ,
புலவோர்க்குச் சுரக்கும் அவன் ஈகை மாரியும்
இகழுநர்ப் பிணிக்கும் ஆற்றலும் புகழுநர்க்கு
அரசு முழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு
தூத் துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்கும் அவன் நாள்மகிழ் இருக்கையும்

நல்லோர் குழீஇய நா நவில் அவையத்து
வல்லார் ஆயினும் புறம் மறைத்து, சென்றோரைச்
சொல்லிக்க்காட்டி, சோர்வு இன்றி விளக்கி
நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கமும் ( மலை. 85 )

6. காடு கொன்று நாடு ஆக்கி,
குளம்தொட்டு வளம்பெருக்கி,
பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி,
கோயிலொடு குடி நிறீஇ
வாயிலொடு புழை அமைத்து
ஞாயில் தொறும் புதை நிறீஇ ( பட்டின. 283-288 )

7. அரசியல் பிழையாது அறநெறிகாட்டி
பெரியோர் சென்ற அறவழிப் பிழையாது
குடமுதல் தோன்றிய தொன்று தொழ பிறையின்
வழிவழிச் சிறக்க நின்வலம் படு கொற்றம் ( மதுரை. 191-194 )

8. நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர்அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால், யான்உயிர் என்பது அறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே ( புறம். 186 )

9. சினனே காமங் கழிகண் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொ லன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவு மிவ்வுலகத்
தறந்தெரி திகிரிக்கு வழியடை யாகுந்

தீதுசே ணிகந்து நன்றுமிகப் புரிந்து
கடலுங் கானமும் பலபய முதவப்
பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது
மையி லறிவினர் செவ்விதி னடந்து தம்
அமர் துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி யுய்த்த யுரவோ ரும்பல் ( பதிற். 22 )

10. முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி
இடைத் தெரிந்து உணரும் இருள் தீர் காட்சி,
கொடைக் கடன் இறுத்த கூம்பா உள்ளத்து
உரும்பு இல் சுற்றமொடு இருந்தோன் ( பெரும். 443 - 447 )

11. சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்குஅகப் படேஎன் ஆயின் பொருந்திய
என் நிழல் வாழ்நர் சென்னிழல் காணாது
கொடியன்எம் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக ( புறம். 72 )

## அரசியல் பண்புகள்

1. காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்நாட்கு ஆகும்
நூறுசெறு ஆயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம் போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே ( புறம். 184 )

2. வேறுபுலத்து இறுக்கும் தானையொடு
சோறுபட நடத்திநீ துஞ்சாய் மாறே ( புறம். 22 )

3. வழிபடுவோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி
வந்துஅடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதி நீ பண்டையிற் பெரிதே
அமிழ்து அட்டு ஆனாக் கமழ்குய் அடிசில் ( புறம். 10 )

4. கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர் ( புறம். 70 )

## அல்லவை செய்தல் கூடாது

1. நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் ( புறம். 195 )

## அறத்தின் மேன்மை

1. சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனும் குறளும் ஊமும் செவிடும்
மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு
எண்பேர் எச்சம் என்றிவை எல்லாம்
பேதைமை அல்லது ஊதியம் இல்என
முன்னும் அறிந்தோர் கூறினர் இன்னும் ( புறம். 28 )

2. ஆடுநர் கழியும் இவ் உலகத்துக் கூடிய
நகைப் புறனாக நின் சுற்றம்
இசைப்புற னாகநீ ஓம்பிய பொருளே ( புறம். 29 )

3. குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத் தமண்
பொதுமை சுட்டிய மூவர் உலகமும்
பொதுமை இன்றி ஆண்டிசி னோர்க்கும்
மாண்ட வன்றே ஆண்டுகள் துணையே
வைத்த தன்றே வெறுக்கை வித்தும்
அறவினை யன்றே விழுத்துணை யத்துணைப்
புணைகை விட்டோர்க்கு அரிதே துணைஅழத்
தொக்கு உயிர் வெளவுங் காலை
இக்கரை நின்று இவர்ந்து உக்கரை கொளலே ( புறம். 357 )

4. அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார் ( பரி. 19)

5. அறத்தினு ளன்பு நீ ( பரி. 3 )

6. அறம் கோலாக ( பரி. 3)

7. ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம் அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் ( புறம். 9 )

## அறநிலையங்கள்

1. மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்
உரஞ்சா செய்யார் உயர்தவம் வளம்கெடப்
பொன்னும் கொள்ளார் மன்னர். ( நற்.226 )

2. சேறும் நாற்றமும் பலவின் சுளையும்,
வேறுபடக் கவினிய தேம் மாங்கனியும்,
பல் வேறு உருவின் காயும், பழனும்
கொண்டல் வளர்ப்பக் கொடி விடுபு கவினி,
மென் பிணி அவிழ்ந்த குறு முறி அடகும்,
அமிர்து இயன்றன்ன தீம் சேற்றுக் கடிகையும்,
புகழ் படப் பண்ணிய பேர் ஊன் சோறும்,
கீழ் செல வீழ்ந்த கிழங்கொடு, பிறவும்
இன் சோறு தருநர் பல் வயின் நுகர ( மதுரை. 526- 535 )

3. புகழ் நிலைஇய மொழிவளர
அறம் நிலைஇய அகன் அட்டில்
சோறு வாக்கிய கொழுங் கஞ்சி
யாறு போலப் பரந் தொழுகி
ஏறு பொரச் சேறாகி,
தேர் ஓடத் துகள் கெழுமி
நீறு ஆடிய களிறு போல
வேறுபட்ட வினை ஓவத்து
வெண் கோயில் மாசு ஊட்டும் . ( பட்டின. 42- 50 )

## அறம்

1. அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்இயல் ( நற். 142 )

2. வாழி யாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க வெனவேட் டேமே ( ஐங். 1 )

3. அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி ( பதிற். 24)

4. உருகெழு மரபி னயிரை பரவியும் ( பதிற். 90 )

5. அறம்சாரான் மூப்பே போல் ( கலி. 37 )

6. அறனில்லாளன் ( அகம். 207, 219 )

7. திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொடு ( அகம். 266 )

8. ஆவும் அனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்அம் பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் என
அறத்துஆறு நுவலும் பூட்கை மரம் ( புறம். 9 )

9. '........................பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் ( புறம். 31 )

10. ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என
அறம் பாடிற்றே. ( புறம். 34 )

11. ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும் ( புறம். 56 )

12. ............... ..................... மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம் ( புறம். 55 )

13. வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் ( புறம். 55 )

14. எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே ( புறம். 65 )

15. அறுதொழில் அந்தணர் அறம்புரிந்து எடுத்த ( புறம். 397 )

16. அல்லது கடிந்த அறம்புரி செங்கோல் ( பெரும். 36 )

17. அத்தம் செல்வோர் அலறத் தாக்கி,
கைப்பொருள் வௌவுங் களவுஏர் வாழ்க்கைக்
கொடியோர் இன்று அவன் கடியுடை வியன் புலம் ;
உருமும் உரறாது ; அரவும் தப்பா`
காட்டு மாவும் உறுகண் செய்யா ( பெரும். 39-43 )

## இனிய வாழ்வு

1. ஓரில்நெய்தல் கறங்க ஓர்இல்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார்பு உறைப்பப்
படைத்தோன் மன்ற அப்பண்பி லாளன்
இன்னாது அம்ம இவ்வுலகம்
இனிய காண்கஇதன் இயல்புணர்ந் தோரே ( புறம். 194 )

### ஈகை

1. இரந்தோர் மாற்றல் ஆற்றா
இல்லின் வாழ்க்கை ( நற். 84 )

2. பிறர்க்குஎன முயலும் பேர்அருள் ( நற். 186 )

3. இசைபட வாழ்பவர் செல்வம் போல ( நற். 217 )

4. பெருநன் றாற்றிற் பேணாரும் உளரே ( குறு. 115 )

5. இரவலர் வாரா வைகல்
பலவாகுக ( குறு. 137 )

6. நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப் பொருள் போலத்
தங்குதற் குரிய தன்று ( குறு. 143 )

7. நல்கின் வாழும் நல்கூர்ந் தோர்வயின்
நயனில ராகுதல் நன்று ( குறு. 327 )

8. விளைக வயலே வருக விரவலர் ( ஐங். 2 )

9. கிளை அழிய வாழ்பவன் ஆக்கம்போல் புல்லென்று
வளையானா நெகிழ்போடும் தோள் ( கலி. 33 )

10. .....ஈதல் இரந்தார்க்கு ஒன்று, ஆற்றாது வாழ்தலின்,
சாதலும் கூடுமாம் மற்று ( கலி. 60 )

11. தந்நயந் துறைவோர்த் தாங்கித் தாநயந்
தின்னமர் கேளிரோ டேமுறக் கெழீஇ
நகுத லாற்றார் நலகூர்ந் தோரென ( அகம். 151. )

12. உயிரினுஞ் சிறந்த வொண்பொரு டருமார்
நன்றுபுரி காட்சியர் சென்றனர் ( அகம். 245 )

13. செல்வத்துப் பயனே ஈதல் ( புறம். 189 )

14. ஈயென இரத்தல் இழிந்தன்று அதன்எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று ( புறம். 204 )

## உழவர்

1. பொருபடை தரூஉங் கொற்றமும் உழபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே .( புறம். 35 )

2. ஏரின் வாழ்நர் ( புறம். 375 )

3. ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும் ( சிறு. 233 )

4. குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்
நடை நவில் பெரும்பகடு புதவில் பூட்டி,
பிடி வாய் அன்ன மடிவாய் நாஞ்சில்
உடுப்பு முக முழுக் கொழு மூழ்க ஊன்றி,
தொடுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை
அரிபுகு பொழுதின், இரியல் போகி,
வண்ணக் கடம்பின் நறு மலர் அன்ன
வளர் இளம் பிள்ளை தழீஇ, குறுங் கால்
கறை அணல் குறும்பூழ், கட்சிச் சேக்கும்
வன்புலம் இறந்த பின்றை . ( பெரும். 197-206 )

## உறவு அறம்

1. வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
வுரைமதி வாழியோ வலவ ( அகம். 384)

2. உள்ளிலோர்க்குக் வலியாகுவன்
கேளிலோர்க்குக் கேளாகுவன் ( புறம். 396 )

## கல்வி

1. பல் கேள்வித் துறை போகிய
தொல் ஆணை நல்லாசிரியர்
உறழ் குறித்து எடுத்த உரு கெழு கொடியும் ( பட்டின. 169 - 171 )

2. உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே ( புறம். 183 )

3. இவரே புலனுழுது உண்மார் ( புறம். 46 )

4. பிறப்பு ஓர் அன்ன உடன்வயிற்று உள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும் ( புறம்.183 )

5. வாயி லோயே வாயி லோயே ...
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க்கு அடையா வாயி லோயே
கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி
தன்அறி யலன்கொல் என்னறி யலன்கொல்
அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென
வறுந்தலை உலகமும் அன்றே அதனால்
காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை
மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத்து அற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச்இ சோறே ( புறம். 206 )

6. ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை ( புறம்.72 )

7. செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் ( புறம். 53 )

## காவிதி மாக்கள்

1. ஆவுதி மண்ணி அவிர்துகில் முடித்து,
மா விசும்பு வழங்கும் பெரியோர் போல,
நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடக்கி,
அன்பும் அறனும் ஒழியாது காத்து,
பழி ஒரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும் ( மதுரை. 494 -499 )

## குடும்பம்

1. புரையமன்ற, புரையோர் கேண்மை. ( நற். 2 )

2. புணரின் புணராது பொருளே : பொருள்வயிற்
பிரியின் புணராது புணர்வே . ( நற். 16 )

3. புலம்புகொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை. ( நற். 124)

4. மணம்கமழ் கானல் இயைந்தநம் கேண்மை
ஒருநாள் பிரியினும் உய்வுஅரிது. ( நற். 203 )

5. துனிதீர் கூட்டமொடு துன்னார் ஆயினும்
இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல் . ( நற். 216 )

6. சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவிற்
பிறப்புப்பிறி தாகுவது ஆயின்
மறக்குவேன் கொல்என் காதலன் எனவே ( நற். 397 )

7. இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே. ( குறு. 49 )

8. உள்ளினென் அல்லனோ யானே உள்ளி
நினைத்தனென் அல்லனோ பெரிதே நினைத்து
மருண்டனென் அல்லனோ உலகத்துப் பண்பு. ( குறு. 99 )

9. மருவின் இனியவு முளவோ. ( குறு. 322 )

10. எல்லாம் எவனோ பதடி வைகல்
அரிவைத் தோளிணைத் துஞ்சிக்
கழிந்த நாளிவண் வாழு நாளே. ( குறு. 323 )

11. மெய்யுற விரும்பிய கைகவர் முயக்கினும். ( ஐங். 337 )

12. மனைக்குவிளக் காயினண் . ( ஐங். 405 )

13. இனிதுடன் கழிக்கி னிளமை. ( ஐங். 415 )

14. உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மை. ( ஐங். 419 )

15. சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது ;
ஒழிந்தவர் எல்லாரும் உண்ணாதும் செல்லார் ;
இளமையும், காமமும் ஓராங்குப் பெற்றார்
வளமை விழைதக்கது உண்டோ . ( கலி. 17 )

16. ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்,
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை. ( கலி. 17 )

17. விரிநீர் உடுக்கை உலகம் பெறினும் ,
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்இயல் பன்றே ? ( கலி. 113 )

18. மகளிர் தோள் சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்,
நீள்சுரம் போகியார் வல்லை வந்து அளித்தலும்,
ஊழ் செய்து, இரவும் பகலும்போல், வேறாகி,
வீழ்வார்கண் தோன்றும் ; தடுமாற்றம் ஞாலத்துள்
வாழ்வார்கட்கு எல்லாம் வரும் ; ( கலி. 144 )

19. இம்மை யுலகத் திசையொடு விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனம். ( அகம். 66 )

20. அறன்கடைப் படாஅ வாழ்க்கையு மென்றும்
பிறன்கடைச் செல்லாச் செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும். ( அகம். 155 )

21. நட்டோர் இன்மையுங்கேளிர் துன்பமும்
ஒட்டா துறையுநர் பெருக்கமுங் காணூஉ
ஒருபதி வாழ்தல் ஆற்றுவ தில்லை. ( அகம். 279 )

## குடை

1. காவல் வெண்குடை ( புறம். 229 )

2. உவவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற ( புறம். 3 )

3. கடனறி மன்னர் குடைநிழல் போல ( நற். 146 )

## குற்றம் பொறுத்தல்

1. காஞ்சி யூரன் கொடுமை
கரந்தன ளாகலின் நாணிய வருமே ( குறு. 10 )

2. தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந்து உணர்க என்ப ( நற். 116 )

## குற்றமும் தண்டணையும்

1. கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்
திருநுதற் குறுமகள் அணிநலம் வெளவிய
வறனிலாளன் அறியேன் என்ற
திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி
நீறுதலைப் பெய்த ஞான்றை ( அகம். 256 )

## கொடை

1. இனியவை பெறினே தனி தனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவி னெஞ்சத்துப்
பகுத்தூண் டொகுத்த வாண்மைப்
பிறர்க்கென வாழ்தி நீ யாகன் மாறே ( பதிற். 38 )

2. ஈத்ததிரங்கா னீத்தொறு மகிழான்
ஈத்தொறு மாவள்ளியன் ( பதிற். 61 )

3. இல்லது நோக்கி இளிவரவு கூறாமுன்
நல்லது வெஃகி வினை செய்வார் ( பரி. 10 )

4. இரப்போர் ஏந்துகை நிறையப் புரப்போர்
புலம்பில் உள்ளமொடு புதுவதந் துவக்கும்
பெரும் பொருள் ( அகம். 389 )

5. படைவேண்டுவழி வாள்உதவியும்
வினைவேண்டுவழி அறிவுஉதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து ( புறம். 179 )

6. பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
நாடுஇழந் ததனினும் நனிஇன் னாதுஎன ( புறம். 165 )

7. எத்துணை ஆயினும் ஈதல் நன்று ( புறம். 141 )

8. பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றுஇது விறல்மாண் குடுமி
இன்னா ஆகப் பிறர்மண் கொண்டு
இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே ( புறம். 12 )

9. நல்லவை தீயவும் அல்ல குவி இணர்ப்
புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ஆங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே ( புறம். 106 )

10. மட்டுவாய் திறப்பவும் மைவிட வீழ்ப்பவும்
அட்டுஆன்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்
பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி ( புறம். 113 )

11. மங்குல் வானத்துத் திங்கள் ஏய்க்கும் -
ஆடு வண்டு இமிரா அழல் அவிர் தாமரை
நீடு இரும் பித்தை பொலியச் சூட்டி
உரவுக் கடல் முகந்த பருவ வானத்துப்

பகற் பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு,
புனை இரும் கதுப்பகம் பொலிய, பொன்னின்
தொடை அமை மாலை விறலியர் மலைய -
நூலோர் புகழ்ந்த மாட்சிய, மால்கடல்
வளை கண்டன்ன வால் உளைப் புரவி,
துணை புணர் தொழில நால்கு உடன் பூட்டி
அரித் தேர் நல்கியும் அமையான் ( பெரும். 480 - 490 )

12. தாள்நிழல் மருங்கின் அணுகுபு குறுகித்
தொழுது முன் நிற்குவிர் ஆயின் பழுதுஇன்று
ஈற்றுஆ விருப்பின் போற்றுபு நோக்கி நும்
கையது கேளா அளவை ஒய்யென,
பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர் நீக்கி, தூய
கொட்டைக் கரைய பட்டுஉடை நல்கி,
பெறல் அருங் கலத்தில் பெட்டாங்கு உண்க என,
பூக் கமழ் தேறல் வாக்குபு தரத்தர
வைகல் வைகல் கை கவி பருகி
எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை
சுரி இரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கு அரில் மாலை
வால் ஒளி முத்தமொடு பாடினி அணிய ( சிறு. 149-162 )

13. குளிரால் வருந்துய மயிலுக்குப் போர்வை
நல்கியவன் பேகன் ( சிறு. 85 - 87 )

14. முல்லைக்குத் தேர் கொடுத்தவன் பாரி ( சிறு. 89 - 91 )

15. குதிரைகளோடு நாட்டினையும் இரவலர்க்குக்
கொடுத்தவன் காரி ( சிறு. 93 - 95 )

16. நீலமணியினையும், நாகம் வழங்கிய ஆடையினையும்
ஆலின் கீழிருந்த இறைவனுக்கு விரும்பிக்
கொடுத்தவன் ஆய் ( சிறு. 97 -100 )

17. பெறுதற்கரிய நெல்லிக்கனியை ஔவைக்குக்
கொடுத்தவன் அதியமான் ( சிறு. 101-104 )

18. வேண்டும் பொருளை வேண்டிய அளவு
கொடுப்பவன் நள்ளி ( சிறு. 105 -108 )

19. சுரபுன்னை மரங்களும் மலைகளையும் உடைய
அழகிய நாட்டை கூத்தாடுவார்க்குக் கொடுத்தவன் ஓரி
( சிறு. 105 -108 )

20. பாணர் வருக பாட்டியர் வருக
பாணர் புலவரொடு வயிரியர் வருக என
இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்
கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி ( மதுரை. 109-111 )

21. மெல்லெனக் கூறி விடுப்பின் நும்முள்
தலைவன் தாமரை மலைய, விறலியர்
சீர்கெழு சிறப்பின் விளங்கு இழை அணிய
நீர் இயக்கன்ன நிரை செலல் நெருந்தேர்
வாரிக்கொள்ளா வரை மருள் வைழம்
கறங்கு மணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை
பொலம் படைப் பொலிந்த கொய்சுவல் புரவி
நிலம்தினக் கிடந்த நிதியமொடு அனைத்தும் ( மலை. 568- 583 )

## சமத்துவம்

1. வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண்படுமே. ( புறம். 183 )

2. யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா . ( புறம். 192 )

3. உலகம் உவப்ப ( திரு. 1 )

4. அகலிரு விசும்பில் (பெரும். 1 )

5. நளந்தலை உலகம் ( முல்லை. 1 )

6. ஓங்கு திரை வியன் பரப்பின்
ஒலி முந்நீர் வரம்பு ஆக,

தேன் தூங்கும் உயர் சிமைய
மலை நாறிய வியல் ஞாலத்து ( மதுரை. 1 - 4 )

7. வையகம் பனிப்ப ( நெடு. 1 )

**சமநிலை**

1. பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி ( பதிற். 79 )

2. உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே அவரை
அழுங்கப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்
கவிழ்ந்து நிலம் சேர அட்டதை
மகிழ்தன்றும் இகழ்ந்தன்றும் அதனினும் இலனே ( புறம். 77 )

3. மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே
எம்மால் வியக்கப் படூஉ மோரே..
சீறூர் மன்னர் ஆயினும் எம்வயின்
பாடறிந்து ஒழுகும் பண்பினாரே ( புறம். 197 )

4. நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே
இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே ( புறம். 180 )

5. என்சிறுமையின் இழித்து நோக்கான்
தன்பெருமையின் தகவு நோக்கிக்
...... நல்கி யோனே நகைசால் தோன்றல் ( புறம். 387 )

## சான்றோர் இயல்பு

1. தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந்து உணர்க என்ப ( நற். 116 )

2. நயனும் நண்பும் நாணும்நன்கு உடைமையும்
பயனும் பண்பும் பாடு அறிந்து ஒழுகலும் ( நற். 160 )

3. ஆன்றோர் செல்நெறி வாழாஅச்
சான்றோன் ( நற். 233 )

4. திறவோர் செய்வினை அறவ தாகும் ( குறு. 247 )

5. ............ சான்றோர்
புகழு முன்னர் நாணுப
பழியாங் கொல்பவோ ( குறு. 252 )

6. தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட
கடனறி மாக்கள் போல இடன்விட்டு ( குறு. 265 )

7. பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி, அறன்அறிதல்
சான்றவர்க்கு எல்லாம் கடன் ( கலி. 138 )

8. கழியாக் காதல ராயினுஞ் சான்றோர்
பழியொடு வருஉம் இன்பம் வெஃகார் ( அகம்.112 )

## சுற்றம் பேணல் - குடிகளைக் காத்தல்

1. பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறம் தருகுவை யாயின்நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே ( புறம். 35 )

2. புலிபுறங் காக்கும் குருளை போல
மெலிவில் செங்கோல் நீபுறங் காப்ப ( புறம். 42 )

3. மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
பால்தர வந்த பழவிறல் தாயம்
எய்தினம் ஆயின் எய்தினம் சிறப்பு எனக்
குடிபுரவு இரக்கும் கூரில் ஆண்மைச்
சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே
மண்டு அமர்ப் பரிக்கும் மதனுடை நோன் தாள்
விழுமியோன் பெருகுவன் ஆயின் தாழ்நீர்
அறுகய மருங்கின் சிறுகோல் வெண்கிடை
என்றூழ் வாடுவறல் போல நன்றும்
நொய்தால் அம்ம தானேமையற்று
விசிம்புஉற ஓங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்தர் அரசுகெழு திருவே ( புறம். 75 )

## செங்கோன்மை

1. அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
முறைவேண்டு பொழுதின் பதன் எளியோர் ( புறம். 35 )

2. பொன்காண் கட்டளை ( பெரும். 220 )

3. அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்
பல் வேல் திரையன் ( பெரும். 36 - 37 )

4. ..........அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்
ஆற்றா மைந்நின் போற்றாமையே ( புறம்.28 )

5. சோறு படுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது
பிறிதுதெறல் அறியார் நின் நிழல்வாழ் வோரே
திருவில் அல்லது கொலைவில் அறியார்
நாஞ்சில் அல்லது படையும் அறியார் ( புறம். 20 )

6. பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்,
நாஅல் வேத நெறி திரியினும்
திரியாச் சுற்றமொடு ( புறம். 2 )

7. கோஒல் செம்மையின் சான்றோர்ப் பல்கி ( புறம். 117 )

8. ...........நமரெனக் கோல்கோ டாது
பிறர்எனக் குணம் கொல் லாது ( புறம். 55 )

9. அறநெறி முதற்றே அரசின் கொற்றம் ( புறம்.55 )

10. கடன்அறி மன்னர் குடைநிழற் போலப்
பெருந் தண் ணென்ற மர நிழல் ( நற், 146 )

11. அல்லது கடிந்த அறம்புரி செங்கோல் ( பெரும். 36 - 37 )

## தத்துவம்

1. தீயும் வளியும் விசும்புபயந் தாங்கு
நோயும் இன்பமும் ஆகின்று ( நற். 294 )

## திருமண அறம்

1. இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கருங்கட் கோசர் நியம மாயினு
முறுமெனக் கொள்குந ரல்லர்
நறுநுத லரிவை பாசிழை விலையே ( அகம். 90 )

## தொழில் அறம்

1. வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே ( புறம்.312 )

2. கவிசெந் தாழிக் குவிபுறத்து இருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா ( புறம். 238 )

3. நெல்லும் முப்பும் நேரே யூரீர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும் ( அகம். 390 )

## நட்பு

1. பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே ( நற். 32 )

2. முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர் ( நற். 355 )

3. தசைபெரி துடையர் நல்கலு நல்குவர் ( குறு. 37 )

4. செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை ( பரி. 3 )

5. கூற்றம் வரினும் தொலையான், தன் நட்டார்க்குத்
தோற்றலை நாணாதோன் ( கலி. 42 )

6. உலந்துழி உலக்கும் நெஞ்சறி துணையே ( புறம். 324 )

7. துப்புஎதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்
நட்புஎதிர்ந் தோர்க்கே அங்கை நன்மையன் ( புறம். 380 )

8. உயர் நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்,
பொய்சேண் நீங்கிய வாய் நட்பினையே ( மதுரை. 196-197 )

## நம்பிக்கைகளில் அறங்கள்

1. இம்மை யுலகத் திசையொடு விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனம் ( அகம். 66 )

2. குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியல
னெடுநா மொழியன் அன்பின் எனநீ ( அகம். 352)

3. யாண்டுபல வாக நரையில ஆகுதல்
யாங்கு ஆகியர்என வினவுதிர் ஆயின்
மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன் தலை
ஆன்றுஅவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே ( புறம். 191 )

## நல்லியல்பு

1. முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை
நேர் வரும் குரைய கலம் கெடின் புணரும்,
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசு அறக் கழீஇ வயங்கு புகழ் நிறுத்தல்
ஆசு அறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார், தொல் மருங்கு அறிஞர் ( குறிஞ்சி.13-18 )

## நன்றி

1. நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்
பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉம்
நயனின் மாக்கள் ( அகம். 71 )

## நாட்டின் சிறப்பு

1. நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க ( ஐங். 1 )

2. விளைக வயலே வருக விரவலர் ( ஐங். 2 )

3. பால்பல வூறுக பகடுபல சிறக்க ( ஐங். 3 )

4. பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக ( ஐங். 4 )

5. பசியில் லாகுக பிணிசே ணீங்குக ( ஐங். 5 )

6. அறநனி சிறக்க வல்லது கெடுக ( ஐங். 7 )

7. அரசுமுறை செய்க களவில் லாகுக ( ஐங். 8 )

8. நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக ( ஐங். 9 )

## நிலையாமை

1. வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
   ஓடுமீன் வழியின் கெடுவ ( நற். 16 )

2. வைகல் தோறும் இன்பமும் இளமையும்
   எய்கணை நிழலின் கழியுமிவ் வுலகம் ( நற். 46 )

3. இளமையின் சிறந்த வளமையு மில்லை ( நற். 126 )

4. நில்லாப் பொருட்பிணி ( நற். 126 )

5. முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்
வாழ்நாள் வகைஅளவு அறிஞரும் இல்லை ( நற். 314 )

6. நில்லா மையே நிலையிற்று ( குறு. 143 )

7. ....நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ ( கலி. 7 )

8. மரீஇத் தாம் கொண்டாரைக் கொண்டக்கால் போலாது
பிரியுங்கால் பிறர் எள்ளப் பீடின்றிப் புறமாறும் திரு ( கலி. 7 )

9. கடைநாள் இதுவென்று அறிந்தாரும் இல்லை ( கலி. 11 )

10. இளமையும் காமமும் நின்பாணி நில்லா( கலி. 11 )

11. நாளினும் நெகிழ்பு ஓடும் நலன் உடன் நிலையுமோ?
கூற்றூழ்போற் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ?
முகைவாய்த்த தடம் போலும் இளமையும் நிலையுமோ ( கலி. 16)

12. ஆறுநீர் கழிந்தன்ன இளமை ( கலி. 19 )

13. கனவுக் கழிந்தனைய வாகி நனவி
னாளது செலவு மூப்பினது வரவும் ( அகம். 353 )

14. மன்உயிர்ப் பான்மையும் கூற்றத்து ஒருமையும்
நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய ( புறம். 19 )

15. தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து ( புறம். 27 )

16. கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியும்இவ் உலகம் ( புறம். 29 )

17. இவண்இசை உடையோர்க்கு அல்லது அவணது
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை ( புறம். 50 )

18. ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவது அன்றுஇவ் உலகத்து இயற்கை ( புறம். 76 )

19. உடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்கல் உண்மை மாயமோ அன்றே ( புறம். 363 )

## பண்பின்மை

1. கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்
ஓட்டை மனவ னுரமிலி (பரி.12 )

2. கையுள் ளதுபோல் காட்டி வழி நாள்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்
நாணாய் ஆயினும் நாணக் கூறி ( புறம். 211 )

3. அத்தம் செல்வோர் அலறத் தாக்கி,
கைப்பொருள் வௌவும் களவு ஏர் வாழ்க்கைக்
கொடியோர் ( பெரும். 39-41 )

4. கொள்ளும் பொருளில ராயினும், வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து, உயிர் வௌவலின் ( கலி. 3 )

5. நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும், அயலவர்
நெஞ்சத்துக் குறுகிய கரி இல்லை ( கலி. 8 )

6. பழியல ராயினும் பலர்புறங் கூறும்
அம்ப லொழுக்க மாகிய வெஞ்சொற்
சேரியம் பெண்டிர் ( அகம். 115 )

7. நல்ல போலவும் நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காதல் நெஞ்சின்நும் இடைபுகற்கு அஇலமரும்
ஏதில் மாக்கள் ( புறம். 58 )

## பெண்கோடலில் போர்

1. அரைசுதலை வரினும் அடங்கல் ஆனா
நிரைகாழ் எஃகம் நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயல்அமர் கழனி வாயிற் பொய்கைக்
கயலார் நாரை உகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை ஒய்யும்
ஊர்கவின் இழப்பவும் வருவது கொல்லோ
சுணங்கு அணிந்து எழிலிய அணைந்துஏந்து இளமுலை
வீங்கு இறைப் பணைத்தோள் மடந்தை
மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே ( புறம். 354 )

2. மதிலும் ஞாயில் இன்றே கிடக்கும்
நீஇர் இன்மையின் கன்றுமேய்ந்து உகளும்
ஊரது நிலைமையும் இதுவே ( புறம். 355 )

3. போர்புறு தண்ணுமை யார்ப்பெழுந்து நுவல ( பதிற். 84)

## பொதுநலம்

1. இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவினெஞ் சத்துப்
பகுத்தூண் டொகுத்த வாண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே ( பதிற். 38 )

2. தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன் ( அகம். 154 )

3. உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதுஎனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ்எனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்கென முயலுநர் உண்மை யானே ( புறம். 182 )

## பொருத்தமற்றன செய்யாதிருத்தல்

1. செய்துபின் னிரங்கா வினையொடு
மெய்யல் பெரும்பழி எய்தி னேனே ( அகம். 268)

2. அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங்இ கொள்பவரோடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி ( புறம். 5 )

3. நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை என்போர்க்கு இனன்ஆகி லியர் ( புறம். 29 )

4. ஆன்முலை அறுத்த அறனில் லோர்க்கும்
மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்

செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என
அறம் பாடிற்றே ஆயிழை கணவ ( புறம். 34 )

## பொருள் சிறப்பு

1. இனிதின் இனிது தலைப்படுதும் ( நற். 134 )

2. நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வம் அன்று தன்செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே ( நற். 210 )

3. இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர் வின்மென ( நற். 214)

4. ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில் ( குறு. 63 )

5. இல்லோன் இன்பங் காமுற் றாஅங்கு ( குறு. 120 )

6. உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு ( குறு. 283 )

7. சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழல் இன்றி ( கலி. 9)

8. அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்,
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்,
பிரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தரும் ( கலி. 10)

9. செம்மையின் இகந்துஒரீஇப் பொருள் செய்வார்க்கு, அப்பொருள் இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ ( கலி. 13 )

10. கிழவர் இன்னோர் என்னாது, பொருள்தான், பழவினை மருங்கின் , பெயர்புபெயர்பு உறையும் ( கலி. 20 )

11. உண்கடன் வழிமொழிந்த இரக்குங்கால் முகனும், தாம் கொண்டது கொடுக்குங்கால் முகனும், வேறு ஆகுதல் பண்டும்இவ் வுலகத்து இயற்கை ( கலி. 21 )

12. உள்ளாங் குவ த்தல் செல்லார் கறுத்தோ ரெள்ள னெஞ்சத் தேச்சொ னானி ( அகம். 111 )

13. இருள்படு நெஞ்சத் திடும்பை தீர்க்கு மருணன் குடைய ராயினும் ஈதல் பொருளில் லோர்க்கஃ தியையா தாகுதல் யானு மறிவேன் ( அகம். 335 )

## போர் அறம்

1. ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் உலகத்து இயற்கை ( புறம். 76 )

2. அரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய மறம்புரி கொள்கை ( பதிற். 85 )

3. முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்
தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க
உயர்நிலை யுலக மெய்தினர் பலர்பட
நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை ( பதிற். 52 )

4. சிறாஅஅவர் துடியர் பாடுவல் மகாஅஅர்
தூவெள் அறுவை மாயோற் குறுதி
இரும்புள் பூசல் ஓம்புமின் யானும்
விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்
என்போற் பெருவிதுப்பு உறுக வேந்தே
கொன்னும் சாதல் வெய்யோற்குத் தன்தலை
மணிமருள் மாலைசூட்டி அவன் தலை
ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே ( புறம். 291 )

5. நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே ( புறம். 31 )

6. தார்தாங் குதலும் ஆற்றார் வெடிபட்டு
ஓடல் மரீஇய பீடுஇல் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதல் மறந்து அவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்பரி பசும்புல் பரப்பினர் கிடப்பி
மறம்கந்து ஆக நல்லமர் வீழ்ந்த ( புறம். 93 )

7. சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள னோஎன வினவுதி என்மகன்
யாண்டுஉளன் ஆயினும் அறியேன் ஓரும்
புலிசேர்ந்து போகிய கல்அளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே ( புறம். 86 )

8. ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே ( புறம். 312 )

9. நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே ( புறம். 31 )

10. அடுபுகழ் மேவலொடு கண்படை யிலனே ( புறம். 214 )

11. வையங் காவலர் வழிமொழிந்து ஒழுகப்
போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது
இடம்சிறிது என்னும் ஊக்கந் துரப்ப ( புறம். 8 )

12. நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளையன் இவன்என உளையக் கூறிப்
படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்

நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம்என்று
உறுதுப்பு அஞ்சாது உடல் சினம் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்குஅகப் படேன்என் ஆயின் பொருந்திய
என்நிழல் வாழ்நர் சென்னிழல் காணாது
கொடியன்எம் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக.
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே ( புறம். 72 )

13. இவ்வே பீலிஅணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து
கடியுடை வியன்நக ரவ்வே அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொல்துறைக் குற்றில மாதோஎன்றும்
உண்டாயின் பதம்கொடுத்து ,
இல்லையாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணல்எம் கோமான் வைந்நுதி வேலே ( புறம். 95 )

14. பல்சான்றீரே பல்சான்றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய
அமரின் இட்ட அருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான்றீரே
முரசுமுழங்கு தானைநும் அரசும் ஓம்புமின்
ஒளிறுஏந்து மருப்பின்நும் களிறும் போற்றுமின்
எனைநாள் தங்கும்நும் போரே அனைநாள்
எறியார் எறிதல் யாவணது எறிந்தோர்
எதிர்சென்று எறிதலும் செல்லான் அதனால்
அறிந்தோர் யார் அவன் கண்ணிய பொருளே
பலரேம் என்று இகழ்தல் ஓம்புமின் உதுக்காண்
நிலன் அளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி
எல்லிடைப் படர்தந் தோனே கல்லென
வேந்தூர் யானைக்கு அல்லது
ஏந்துவன் போலான்தன் இலங்கிலை வேலே ( புறம். 301 )

15 . பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வரும் களிற்றொடு வேல்துரந்து இனிய ( புறம். 274 )

16. இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினும் தோற்பதும் குடியே

இருவீர் வேறல் இயற்கையும் அன்றே அதனால்
குடிப்பொருள் அன்றுநும் செய்தி கொடித்தேர்
நும்மோர் அன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும்இவ் விகலே ( புறம். 45 )

17. களிறுகடை இயதாள்
கழல்உரீஇய திருந்துஅடிக்
கணைபொருது கவிவண் கையால்
கண்ஒளிர் வரூஉம் கவின்சாபத்து
மாமறுத்த மலர் மார்பின்
தோல் பெயரிய எறுழ் முன்பின்
எல்லையும் இரவும் எண்ணாய் பகைவர்
ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை ஆகலின் நல்ல
இல்லாஆ குபவால் இயல்தேர் வளவ
தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து
மீனின் செறுக்கும் யாணர்ப்
பயன்திகழ் வைப்பின் பிறர் அகன்றலை நாடே ( புறம். 7 )

## போர்ச்சூழலும் மறப்பண்பும்

1. பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோர் என்னும் என்னையும் உளனே ( புறம். 89 )

2. களிறுபொரக் கலங்கு கழல்முள் வேலி
அரிதுஉண் கூவல் அங்குடிச் சீறூர்
ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை
நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது
விருந்து எதிர் பெறுகதில் யானே என்ஐயும்
ஓ..........................வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை எய்துக எனவே ( புறம். 306 )

3. கெடுக சிந்தை கடிது இவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேல்நாள் உற்ற செருவிற்கு இவள்தன்னை
யானை எறிந்து களத்துஒழிந் தனனே
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்
பெருநிரை விலக்கி ஆண்டுப்பட் டனனே
இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்க என விடுமே ( புறம். 274 )

## போர்நடைமுறைகள்

1. இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை
அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்
ஓங்குஇருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இருபெரு வேந்தரும் ஒருகளத்து அவிய

வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்
கண்ஆர் கண்ணி, கரிகால் வளவன் ( பொருநர். 143 -148 )

2. தலையோர் நுங்கின் தீஞ்சோறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
நிலமார் வையத்து வலமுறை வளைஇ
வேந்து பீடழித்த ஏந்துவேல் தானை ( புறம். 225 )

3. சுடர்நுதன் மடநோக்கின்
வாணகை யிலங்கெயிற்
றமிழ்துபொதி துவர்வா யசைநடை விறலியர்
பாடல் சான்று நீடினை யுறைதலின்
வெள்வே லண்ணன் மெல்லியன் போன்மென
உள்ளுவர் கொல்லோநின் னுணராதோரே ( பதிற். 51 )

4. பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவே காணிய வொருநாட்
பூண்க மானநின் புரவி நெடுந்தேர் ( மதுரை. 494-499)

## மருத்துவம்

1. அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல ( நற். 136 )

## மருத்துவர்

1. அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல் .( நற். 136 )

## மனித வாழ்வின் இயல்பு

1. யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவது அன்றே வாழ்தல்
இனிதுஎன மகிழ்தன்றும் இலமே முனிவின்
இன்னா தென்றலும் இலமே மின்னொடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே. ( புறம். 192)

## வணிகர்

1. தீம்புழல் வல்சிக் கழல் கால் மழவர்
பூந் தலை முழவின் நோன் தலை கடுப்ப,
பிடகைப் பெய்த கமழ் நறும் பூவினர்,
பல வகை விரித்த எதிர் பூங் கோதையர்,
பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர்,
தகைசெய் தீம் சேற்று இன் நீர்ப் பசுங் காய்,

நீடு கொடி இலையினர், கோடு சுடு நூற்றினர்,
இரு தலை வந்த பகை முனை கடுப்ப,
இன் உயிர் அஞ்சி, இன்னா வெய்து உயிர்த்து
ஏங்குவனர் இருந்து, அவை நீங்கிய பின்றை,
பல வேறு பண்ணியம் தழீஇத் திரி விலைஞர்
மலை புரை மாடத்துக் கொழு நிழல் இருத்தர ( மதுரை. 395-406 )

2. வியல் மேவல் விழுச் செல்வத்து,
இரு வகையான், இசை சான்ற,
சிறுகுடிப் பெருந் தொழுவர் ( மதுரை. 468-473 )

3. அற நெறி பிழையாது ஆற்றின் ஒழுகி,
குறும் பல் குழுவின் குன்று கண்டன்ன,
பருந்து இருந்து உகக்கும் பல் மாண் நல் இல்
பல் வேறு பண்டமோடு ஊண் மலிந்து கவினி
மலையவும், நிலத்தவும், நீரவும், பிறவும்
பல் வேறு திரு மணி, முத்தமொடு, பொன் கொண்டு
சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும் . ( மதுரை. 500-506 )

4. நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும் ( பட்டின. 185 - 191)

5. நெடு நுகத்துப் பகல் போல
நடுவு நின்ற நல் நெஞ்சினோர்
வடு அஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடி,
கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது
பல் பண்டம் பகர்ந்து வீசும்
தொல் கொண்டி, துவன்று இருக்கை ( பட்டின. 206-212 )

## வழிபாட்டறம்

1. ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறுஏந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவின் அல்லது
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே ( புறம். 335 )

2. சினைச் சிறவின் கோடு நட்டு
மனைச் சேர்த்திய வல்அணங்கினான்,
மடல்தாழை மலர் மலைந்தும்
பிணர்ப் பெண்ணைப் பிழிமகிழ்ந்தும்
புன்தலை இரும் பரதவர்
பைந் தழை மா மகளிரொடு
பா இரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது
உவவு மடிந்து உண்டு ஆடியும் ( பட்டின. 86 - 93 )

3. கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியில் ( புறம். 52 )

4. ......அறம்செய் திங்கள் ( நற். 202 )

## வாய்மை

1. பழையன் வேல்வாய்த்து அன்னநின்
பிழையா நன்மொழி ( நற். 10 )

2. அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை ( குறு. 184 )

3. கரிபொய்த்தான் கீழ்இருந்த மரம்போல ( கலி. 33 )

4. வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவல் ( புறம். 139 )

## வாழ்வியல்

1. அஞ்சுவது அஞ்சா அறனிலி அல்லன், என்
நெஞ்சம் பிணிக்கொண் டவன் ( கலி. 41 )

2. திங்கள் அரவுறின், தீர்க்கலா ராயினும்,
தங்காதல் காட்டுவர் சான்றவர். ( கலி. 139 )

3. தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன் ( அகம். 54 )

4. உண்பது நாழி உடுப்பவை இரண்டே . ( புறம். 189 )

5. நல்லதுசெய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் ( புறம். 195 )

6. ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே ( புறம். 312 )

7. மனைக்கு விளக்காகிய வாள்நுதல் கணவன் ( புறம். 314 )

8. வாழ்தல் வேண்டும்இவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை ( புறம். 367 )

9. பிறர்க்கு உவமம் தான்அல்லது
தனக்கு உவமம் பிறர்இல் என ( புறம். 377 )

10. பொழுது அளந்தறியும் பொய்யா மாக்கள் ( முல்லை. 55 )

## விதி

1. நன்றுசெய் மருங்கிற் றீதில் லென்னும்
தொன்றுபடு பழமொழி ( அகம். 101 )

2. நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப்படூஉம் ( புறம். 192 )

## விருந்தோம்பல்

1. நல்மனை நனிவிருந்து அயரும்
கைதூ இன்மையின் எய்தாம் மாறே ( நற். 43 )

2. அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் ( நற். 258 )

3. உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே ( புறம். 182 )

4. விருந்துகண்டு ஒளிக்கும் திருந்தா வாழ்க்கை ( புறம். 266 )

5. புகழ் நிலைஇய மொழிவளர
அறன் நிலைஇய அகன் அட்டில்
சோறு வாக்கிய கொழுங் கஞ்சி
யாறு போலப் பரந்து ஒழுகி ( பட்டின. 42-45 )

## வினைசெயல்வகை

1. அழிவில முயலும் ஆர்வ மாக்கள் ( நற். 9 )

2. இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுநர் இருந்தோர்க்கு அரும்புணர் வின்மென ( நற். 214 )

3. வினையே நினைந்த உள்ளம் ( நற். 296 )

4. வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க் காடவர் உயிர் ( குறு. 135 )

5. பேணா ராயினும் பெரியோர் நெஞ்சத்துக்
கண்ணிய ஆண்மை கடவ தன்றென ( குறு. 341 )

6. அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே ( ஐங். 302 )

7. கேள்கே டூன்றவும் கிளைஞ ராரவுங்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவு
மாள்வினைக் கெதிரிய வூக்கம் ( அகம். 93 )

8. அறந்தலைப் பிரியா தொழுகலுஞ் சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலு நாளும்
வருந்தா வுள்ளமொ டிருந்தோர்க் கில்லெனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதன் ( அகம் .173 )

9. முருகுஒத் தீயே முன்னியது முடித்தலின் ( புறம். 56 )

10. புலிபார்த்து ஒற்றிய களியற்றுஇரை பிழைப்பின்
எலிபார்த்து ஒற்றாது ஆகும் ( புறம். 237 )

## வீரம்

1. கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்
புல்லாளே, ஆயமகள் ( கலி. 102)

1. அஞ்சியாந்தையார்

நற்றிணை : 233 ; குறுந்தொகை : 294.

2. அஞ்சியாந்தை மகன் நன்னாகையார்

அகநானூறு : 352.

3. அந்தி இளங்கீரனார்

அகநானூறு : 71.

4. அம்மூவனார்

நற்றிணை : 4, 35, 76, 138, 275 , 307, 315, 327, 395, 397 ; குறுந்தொகை : 49, 125, 163, 303, 306, 318, 327, 340, 351, 397,401; ஐங்குறுநூறு : நெய்தற்திணைப் பாடல்கள் 101-200; அகநானூறு 10, 140, 280, 370, 390.

5. ஆரிசில் கிழார்

குறுந்தொகை : 193 ; புறநானூறு : 146, 230, 281, 285, 300, 304, 342 ; பதிற்றுப்பத்து : ஒன்பதாம் பத்து.

6. அள்ளூர் நன்முல்லையார்

குறுந்தொகை : 32, 67, 68, 93, 96, 140, 157, 202, 237 ; அகநானூறு : 46 ; புறநானூறு : 306, 340.

7. ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன்

குறுந்தொகை : 184.

8. ஆரியப் படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன்

புறநானூறு : 183.

9. ஆலத்தூர் கிழார்

குறுந்தொகை : 112, 350 ; புறநானூறு : 34, 36, 66, 69, 225, 324.

10. ஆவூர் மூலங்கிழார்

அகநானூறு : 24, 156, 341 ; புறநானூறு : 21, 38, 40, 166, 177, 178, 196, 261, 301.

11. இடைக்காடனார்

நற்றிணை : 142, 316 ; குறுந்தொகை : 251, அகநானூறு : 139, 194, 274, 284, 304, 374 ; புறநானூறு : 42.

12. இடைக்குன்றூர் கிழார்

புறநானூறு : 76,77,78,79.

13. இரும்பிடர்த்தலையார்

புறநானூறு : 3

14. உகாய்க்குடி கிழார்

குறுந்தொகை : 63.

15. உருத்திரங்கண்ணனார்

பத்துப்பாட்டு : பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை.

16. உலோச்சனார்

நற்றிணை : 11, 38, 63, 64, 74, 131, 149, 191, 203, 223, 249, 254, 278, 287, 311, 331, 354, 363, 372, 398 ; குறுந்தொகை : 175, 177, 205, 248; அகநானூறு : 20, 100, 190, 200, 210, 300, 330, 400; புறநானூறு : 258, 274, 377.

17. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

புறநானூறு : 13, 127, 128, 129, 130, 131, 132, 133, 134, 135, 241, 374, 375.

18. உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

குறுந்தொகை : 133.

19. ஊன்பொதி பசுங்குடையார்

புறநானூறு : 10, 203, 370, 378.

20. எருக்காட்டூர் தாயங்கண்ணனார்

புறநானூறு : 397.

20. ஐயாதி சிறுவெண்தேரையார்

புறநானூறு : 363.

21. ஐயூர் முடவனார்

நற்றிணை : 206, 334 ; குறுந்தொகை : 123, 206, 322 ; அகநானூறு : 216 ; புறநானூறு : 51, 228, 314, 399.

22. ஒக்கூர் மாசாத்தியார்

குறுந்தொகை : 126, 139, 186, 220, 275; அகநானூறு : 324, 384 ; புறநானூறு : 279.

23. ஓதலாந்தையார்

குறுந்தொகை : 12, 21, 329 ; ஐங்குறுநூறு : பாலைத்திணைப் பாடல்கள் 301-400.

24. ஓரம்போகியார்

நற்றிணை : 20, 360 ; குறுந்தொகை : 10, 70, 122, 127, 384; ஐங்குறுநூறு : மருதத்திணைப் பாடல்கள் 1-100 ; அகநானூறு : 286, 316 ; புறநானூறு : 284 ;

25. ஔவையார்

நற்றிணை : 129, 187, 295, 371, 381, 390, 394 ; குறுந்தொகை : 15, 23, 28, 29, 39, 43, 80, 91, 99, 102, 158, 183, 200, 364, 388 ; அகநானூறு : 11, 147, 273, 303 ; புறநானூறு : 87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 96, 97, 98, 99, 100, 101, 102, 103, 104, 140, 187, 206, 231, 232, 235, 269, 286, 290, 295, 311, 315, 367, 390, 392.

26. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி

புறநானூறு : 182.

27. கணக்காயர் மகனார் நக்கீரனார்

நற்றிணை : 31, 86, 197, 258, 340, 358, 367 ; குறுந்தொகை : 78, 105, 143, 161, 266 280, 368 ; அகநானூறு : 36, 57, 78, 93, 120, 126, 141, 205, 227, 249, 253, 290, 310, 340, 346, 369, 389 ; புறநானூறு : 56, 189 ; பத்துப்பாட்டு : திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை.

28. கணியன் பூங்குன்றனார்

நற்றிணை : 226 ; புறநானூறு : 192.

29. கந்தரத்தனார்

நற்றிணை : 116, 146, 238, 306.

30. கபிலர்

நற்றிணை : 1, 13, 32, 59, 65, 77, 217, 222, 225, 253, 267, 291, 309, 320, 336, 353, 359, 368, 373, 376 ; குறுந்தொகை : 13, 18, 25, 38, 42, 87, 95, 100, 106, 115, 121, 142, 153, 187, 188, 208, 225, 241, 246, 249, 264, 288, 291, 312, 355, 357, 361, 385 ; ஐங்குறுநூறு : குறிஞ்சித்திணை பாடல்கள் 201-300 ; பதிற்றுப்பத்து : ஏழாம்பத்து; கலித்தொகை : குறிஞ்சிக்கலி 29 பாடல்கள் ; அகநானூறு : 2, 12, 18, 42, 82, 118, 128, 158, 182, 203, 218, 238, 248, 278, 292, 318, 332, 382; புறநானூறு : 8, 14, 105, 106, 107, 108, 109, 110, 111, 112, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 121, 122, 123, 124, 143, 200, 201, 202, 236, 337, 347 ; பத்துப்பாட்டு : குறிஞ்சிப்பாட்டு.

31. கடுவனிளவெயினனார்

பரிபாடல் : 3, 4, 5.

32. கருங்குழல் ஆதனார்

புறநானூறு : 7, 224.

33. கரும்பிள்ளைப் பூதனார்

பரிபாடல் : 10.

34. கருவூர்க் கதப்பிள்ளை

நற்றிணை : 135, 343 ; குறுந்தொகை : 64, 265, 380 ; புறநானூறு : 380.

35. கருவூர்க் கோசனார்

நற்றிணை : 214.

36. கழாத்தலையார்

புறநானூறு : 62, 65, 270, 288, 289, 368.

37. கழைதின் யானையார்

புறநானூறு : 204.

38. காக்கை பாடினியார் நச்செள்ளையார்

குறுந்தொகை : 210 ; பதிற்றுப்பத்து : ஆறாம் பத்து ; புறநானூறு : 278.

39. காப்பியாற்றுக் காப்பியனார்

பதிற்றுப்பத்து : நான்காம் பத்து.

40. காரிக்கண்ணனார்

நற்றிணை : 237 ; குறுந்தொகை : 297 ; அகநானூறு : 107, 123, 285 ; புறநானூறு : 57, 58, 169, 171, 353.

41. காவற்பெண்டு

புறநானூறு : 62, 65, 270, 288, 289, 368.

42. காவன் முல்லைப் பூதன்

நற்றிணை : 274 ; குறுந்தொகை : 104, 211 ; அகநானூறு : 21, 241, 293, 391.

43. கிடங்கிற் குலபதி நக்கண்ணனார்

குறுந்தொகை : 252.

44. குடபுலவியனார்

புறநானூறு : 18, 19.

45. குதிரைத்தறியனார்

நற்றிணை : 296.

46. குமட்டூர் கண்ணனார்

பதிற்றுப்பத்து : இரண்டாம் பத்து.

47. குறுங்கோழியூர்கிழார்

புறநானூறு : 17, 20, 22.

48. குன்றுகட் பாலாயாதன்

புறநானூறு : 387.

49. கூடலூர் கிழார்

குறுந்தொகை : 166, 167, 214 ; புறநானூறு : 229.

50. கோக்கண்ணனார்

அகநானூறு : 279.

51. கோவூர்கிழார்

நற்றிணை : 393 ; குறுந்தொகை : 65 ; அகநானூறு : 48; புறநானூறு : 31, 32, 33, 41, 44, 45, 46, 47, 68, 70, 308, 373, 382, 386, 400.

52. கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்

புறநானூறு : 54, 61, 167, 180, 197, 394.

53. சிறைக்குடி ஆந்தையார்

நற்றிணை : 16 ; குறுந்தொகை : 56, 57, 62, 132, 168, 222, 273, 300.

54. செல்லூர்க் கோசிகன் கண்ணனார்

அகநானூறு : 66.

55. சாகலாசனார்

அகநானூறு : 16, 270.

56. சேந்தம் பூதனார்

நற்றிணை : 69, 261 ; குறுந்தொகை : 90, 226, 247.

57. சோழன் நலங்கிள்ளி

புறநானூறு : 73, 75.

58. தேய்புரிப் பழங்கயிற்றினார்

நற்றிணை : 284.

59. நத்தத்தனார்

பத்துப்பாட்டு : சிறுபாணாற்றுப்படை.

60. நப்பண்ணனார்

பரிபாடல் : 19.

61. நப்பூதனார்

பத்துப்பாட்டு : முல்லைப்பாட்டு.

62. நரிவெரூஉத்தலையார்

புறநானூறு : 5, 195.

63. நல்லந்துவனார்

நற்றிணை : 88 ; கலித்தொகை : நெய்தற்கலி 33 பாடல்கள்.

64. நல்லுருத்திரன்

புறநானூறு : 190 ; கலித்தொகை : முல்லைக்கலி 17 பாடல்கள்.

65. நற்றங்கொற்றனார்

நற்றிணை : 136.

66. நெட்டிமையார்

புறநானூறு : 9, 12, 15.

67. நெடுங்களத்துப் பரணர்

புறநானூறு : 291.

68. நெய்தற் காய்ந்துய்த்த ஆவூர்கிழார்

அகநானூறு : 112.

69. பக்குடுக்கை நன்கணியார்

புறநானூறு : 194.

70. பதடி வைகலார்

குறுந்தொகை : 323.

71. பரணர்

நற்றிணை : 6, 100, 201, 247, 260, 265, 270, 280, 300, 310, 350, 356; குறுந்தொகை : 19, 24, 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 258, 259, 292, 298, 328, 393, 399; பதிற்றுப்பத்து : ஐந்தாம் பத்து; அகநானூறு : 6, 62, 76, 116, 122, 125, 135, 142, 148, 152, 162, 178, 181, 186, 196, 198, 208, 212, 222, 226, 236, 246, 258, 262, 266, 276, 322, 326, 356, 367, 372, 376, 386, 396 ; புறநானூறு : 6, 63, 141, 142, 144, 145, 336, 341, 343, 348, 352, 354, 369.

72. பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன்

குறுந்தொகை : 156 ; அகநானூறு : 373.

73. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

புறநானூறு : 72.

74. பாலைக் கௌதமனார்

பதிற்றுப்பத்து : மூன்றாம்பத்து.

75. பாலை பாடிய பெருங்கடுங்கோ

நற்றிணை : 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391 ; குறுந்தொகை : 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398 ; கலித்தொகை : பாலைக்கலி 35 பாடல்கள்; அகநானூறு : 5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379 ; புறநானூறு : 282.

76. பிசிராந்தையார்

நற்றிணை : 91 ; அகநானூறு : 308 ; புறநானூறு : 67, 184, 191, 212.

77. பிரமனார்

புறநானூறு : 357.

78. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பர்கிழான்

நற்றிணை : 294.

79. புல்லாற்றூர் எயிற்றியனார்

புறநானூறு : 213.

80. பெருங்குன்றூர் கிழார்

நற்றிணை : 5, 112, 119, 347 ; குறுந்தொகை : 338 ; பதிற்றுப்பத்து : ஒன்பதாம் பத்து ; அகநானூறு : 8 ; புறநானூறு : 147, 210, 211, 266, 318.

81. பெருங்கௌசிகனார்

நற்றிணை : 44, 139 ; பத்துப்பாட்டு : மலைபடுகடாம்.

82. பெருஞ்சித்திரனார்

புறநானூறு : 158, 159, 160, 161, 162, 163, 207, 208, 237, 238.

83. பெருந்தலைச் சாத்தனார்

நற்றிணை : 262 ; அகநானூறு : 13 ; புறநானூறு : 151, 164, 165, 205, 209, 294.

84. பேயனார்

குறுந்தொகை : 233, 359, 400 ; ஐங்குறுநூறு : முல்லைத்திணைப் பாடல்கள் 401-500 ; அகநானூறு : 234.

85. பொருந்திலிளங்கீரனார்

புறநானூறு : 53.

86. பொன்முடியார்

புறநானூறு : 299, 310, 312.

87. மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார்

நற்றிணை : 297, 321 ; குறுந்தொகை : 188, 215 ; அகநானூறு : 33, 144, 174, 244, 314, 344, 353 ; புறநானூறு : 388.

88. மதுரை தத்தங்கண்ணனார்

அகநானூறு : 335.

89. மதுரை தமிழ் கூத்தனார் காவன் மள்ளனார்

அகநானூறு : 70, 256, 354.

90. மதுரை மருதன் இளநாகனார்

நற்றிணை : 21, 39, 103, 194, 216, 283, 290, 302, 326, 341, 362, 392 ; குறுந்தொகை : 77, 160, 279, 367 ; கலித்தொகை : மருதக்கலி 35 பாடல்கள் ; அகநானூறு : 34, 59, 77, 90, 104, 21, 131, 184, 193, 206, 220, 245, 255, 269, 283, 297, 312, 343, 358, 365, 368, 380, 387.

91. மாங்குடி கிழார் / மாங்குடி மருதனார்

நற்றிணை : 120, 123 ; குறுந்தொகை : 164, 173, 302 ; புறநானூறு : 24, 26, 313, 335, 372, 396 ; பத்துப்பாட்டு : மதுரைக்காஞ்சி.

92. மாமூலனார்

நற்றிணை : 14, 75 ; குறுந்தொகை : 11 ; அகநானூறு : 1, 15, 31, 55, 61, 65, 91, 97, 101, 115, 127, 187, 197, 201, 211, 233, 251, 265, 281, 295, 311, 325, 331, 347, 349, 359, 393.

93. மாற்றூர் கிழார் மகனார் கொற்றங்கொற்றனார்

அகநானூறு : 54.

94. மிளைகிழான் நல்வேட்டனார்

குறுந்தொகை : 341.

95. முடத்தாமக்கண்ணியார்

பத்துப்பாட்டு : பொருநராற்றுப்படை.

96. முதுகண்ணன் சாத்தன்

புறநானூறு : 28.

97. முப்பேர் நாகனார்

நற்றிணை : 314.

98. முரஞ்சியூர் முடிநாகராயர்

புறநானூறு : 2.

99. முள்ளியூர் வழுதியார்

அகநானூறு : 173.

100. மோசி கண்ணத்தனார்

நற்றிணை : 124.

101. மோசிகீரனார்

நற்றிணை : 342 ; குறுந்தொகை : 59, 84 ; அகநானூறு : 392 ; புறநானூறு : 50, 154, 155, 156, 186.

102. வடநெடுந்தத்தனார்

புறநானூறு : 179.

103. வடம வண்ணக்கண் பேரிசாத்தனார்

குறுந்தொகை : 81, 159 ; அகநானூறு : 38, 214, 268, 305 ; புறநானூறு : 198.

104. வெள்ளைக்குடி நாகனார்

நற்றிணை : 158, 196 ; புறநானூறு : 35.

# சங்க இலக்கியங்களில் அறக்கருத்துகள் - ஓர் ஆய்வு



முனைவர் பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

**இரா. அனுராதா,** எம்.ஏ., எம்.ஃபில்.
ஆய்வாளர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

மேற்பார்வையாளர்
முனைவர் **வ. ஜெயதேவன்**
பேராசிரியர் - தலைவர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005



தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

மே 2004

சங்க இலக்கியத்தில் அறங்கள் என்னும் தலைப்பிலான இவ்வாய்வு சங்ககால வழக்கில் இருந்த பல்வேறு அறங்களை அதன் பரிமாணங்களுடன் எடுத்து விளக்குகின்றது. தனிமனித அறம், சமுதாய அறம், அரசியல் அறம் என்னும் இயல்களில் ஆய்வு செய்யப்பெற்ற தரவுகளின் அடிப்படையில் கீழ்க்கண்ட முடிவுகள் பெறப்படுகின்றன.

1. மனித இன வரலாற்றில் மனிதன் நன்மை தீமையை அறிந்து பிறரோடு இணக்கமாக ஒன்று கூடி வாழத் தலைப்பட்ட நிலையிலேயே அறங்கள் தோற்றம் பெற்றன.

2. அறங்கள் குறித்துப் பல்வேறு விளக்கங்கள் காணப்பட்ட போதும் அறம் என்பது நல்ல செயல்களின் தொகுப்பு என்னும் முடிவுக்கு வரலாம்.

3. தனக்கும் பிறருக்கும் நலம் பயக்கும் நிலையில் மனத்தாலும் செயலாலும் நல்லவற்றையே நினைத்தல் ; நல்லவற்றையே செய்தல் என்னும் நிலையில் அறங்கள் தோற்றம் பெறுகின்றன.

4. நினைவுகள்தாம் செயல்களாக மாற்றம் பெறும். ஆகையால் நல்ல செயல்கள் விளைய நற்சிந்தனை தேவை என்னும் அடிப்படையில் சொல்லேர் உழவர் எனச் சிறப்பிக்கப்பட்ட புலவர்களால் அறம் உரைக்கப்பட்டது.

5. குடும்பம் பல்வேறு அறங்களின் தோற்றத்திற்குக் காரணமாக விளங்குவதால் தனிமனித அறத்தின் காரணியாகக் குடும்ப

அமைப்பு விளங்குகிறது. அக்குடும்ப அமைப்பு, அன்பு, அறம், ஈகை, விருந்து உபசரித்தல், அந்தணர்களைப் போற்றல், நட்பு, அடைக்கலம்கொடுத்தல் முதலிய அறங்களின் தோற்றத்திற்கும் அவை வளர்ந்து சமுதாய அறமாக மாறுவதற்கும் வழிகோலுகின்றது.

6. தனிமனிதன் ஒழுக்கத்தில் மேம்பட்டுத் தான் கடைப்பிடிக்கும் அறங்கள் தனிமனித நிலையில் இருந்து விரிந்து பலரும் கடைப்பிடிக்கும் சமுதாய அறமாக மாற்றம் பெறுகின்றது. சமுதாய அறமாக மாற்றம் பெறும் தனிமனித அறங்கள் பொது அறங்களாகிப் பண்பட்ட அறக்கூறுகளாக நிலைபேறடைகின்றன.

7. மனிதன் பண்பாட்டு வளர்ச்சியினால் ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்ட போது உருவான சமுதாய அறம் மனிதச் சிந்தனையில் முகிழ்த்த அறங்களின் தொகுப்பாக விளங்கும் தன்மைத்தாகும்.

8. தமது நலனைப் பொருட்படுத்தாமல் பிறருக்காக வாழ்ந்து பிறரின் நலம் போற்றும் உயரியவர்கள் சான்றோர்கள் என மதிக்கப்பெற்றனர். சான்றோர்களின் மூலமாக இப்படியாக வாழவேண்டும் என்னும் அறம் வலியுறுத்தப் பெறுகின்றது.

9. வணிகம் என்பது வாங்கும் பணத்திற்கேற்பப் பொருள்களைக் கொடுப்பது. நேர்மையின் மூலமாகக் கூறப்படும் வணிக அறம் உயர்ந்ததாகப் போற்றப்பட்டது.

10. அறச்சாலைகள், மருத்துவப்பணிகள் முதலியன மக்களின் வாழ்க்கைக்குப் பயனுடையதான அறங்களைச் செய்வதில் சிறந்திருந்தன.

11. இலக்கியக் கருத்துகள் பலவும் வாழ்க்கைக்குள் நிகழும் துன்ப நிகழ்வுகளைச் சுட்டிக்காட்டி அதற்குள்ளும் இன்பம் தேடுவதே வாழ்க்கை என்னும் உயரிய அறத்தைக் கற்பிக்கின்றன.

12. கல்வி மனிதனை நாகரிக பண்பாட்டு நிலைக்கு உயர்த்தும் தன்மையது. ஆதலால் கல்வியின் இன்றியமையாமை உணர்த்தப்பட்டது.

13. பழங்கால இல்லறம் அறச்சாலையாகப் போற்றப்பட்டது. அவ்வாறு அறம் ஆற்றுவதற்குப் பொருள் இன்றியமையாதது. ஆதலால் இல்லறத்தின் உயிர்நாடியான ஆடவர்க்கு தொழில் செய்வதும் அதனால் பொருளீட்டுதலும் கடமையாகக் கூறப்பட்டது.

14. பெரியோர்களால் ஏற்பாடு செய்யப்பட்டு நிறைவேற்றி வைக்கப்படும் திருமணம் அறமாகப் போற்றப்பட்டது. காதல் திருமணங்கள் காந்தருவம் என்னும் நிலையில் ஏற்கப்பட்டன.

15. மனிதர்கள் ஒன்று கூடி எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ளவும் உறவுகளை மேம்படுத்திக் கொள்ளவும் வழிபாட்டு முறைகளும் விழாக்களும் ஏற்படுத்தப்பட்டன.

இவைகளின் மூலமாக மனிதன் மேற்கொள்ளும் வாழ்வியல் அறங்கள் கலைநிகழ்ச்சிகள் மூலமாகவும் வலியுறுத்தப் பெற்றன.

16. நடுநிலையான நீதி வழங்கும் மனம் அறத்தின் பாதுகாவலானது என்னும் நிலையில் மனிதப் பண்பு உயர்கின்றது. குற்றம் செய்பவரைத் தண்டிப்பதை விடத் தவற்றை உணர்ந்து தவறு செய்தவர் திருந்தும் நிலை சிறந்ததாகப் போற்றப்பட்டது.

17. நன்மையான செயல்களைச் செய்வதனால் அறம் பெருகும் நிலையும், தீமையான செயல்களினால் தீமையும் பெருகும் என்னும் கருத்து வலியுறுத்தப்பெற்று இலக்கியங்களின் வாயிலாக நற்செயல்களால் விளையும் அறங்களே நன்மை பயக்கும் என்னும் கருத்து பெறப்படுகிறது.

18. பொதுநலம் பேணலும் பிறருக்காக உழைத்தலும், விட்டுக் கொடுத்தலும் சமூக அறத்திற்கு வித்திடும் தன்மையை எடுத்துக் காட்டுவதாக உள்ளன.

19. நாட்டில் வாழும் மக்களுக்கு மன்னனே உயிர் போன்றவன் என்னும் கருத்தாக்கம், நாட்டு மக்கள் அனைவரும் அரசனின் நல்லாட்சியை எதிர்நோக்கும் தன்மையினையும், அதனால் அரசன் கொடுக்க வேண்டிய நல்லாட்சியையும் வலியுறுத்தும்.

20. நாட்டு மக்களுக்குப் பாதுகாப்பான வாழ்க்கையை வழங்குவதும், உணவுத் தட்டுப்பாடின்றிப் பாதுகாப்பதும், நீதியில் சிறந்தவனாக இருப்பதும் அரசனுக்குரிய சிறந்த குணங்களாகப் போற்றப்பட்டன.

21. பண்டைக்காலப் போர் முறையில் கடைப்பிடிக்கப்பட்ட அறங்கள் போர்க்களங்களில் பின்பற்றப்பட்ட நன்னெறிகளை விளக்குகின்றன. போருக்குத் தகுதியற்றவருக்கு எந்தத் துன்பமும் விளைவிக்கக் கூடாது என்னும் நிலையில் பாதுகாக்கப்பட்ட பின் போர் புரியும் நிலை இதற்குச் சான்று.

22. பண்டைக் காலத்தில் போர் வீரத்தின் உயர்வு நிலையாகக் கடைப்பிடிக்கப்பட்டதால் போர்க்களத்தில் விழுப்புண்பட்டு இறத்தல் உயர்வானதாகப் போற்றப்பட்டது. போரில் இறக்காதோரையும் மார்பில் வாளால் கீறிப் புதைப்பதும் வீரச் சிந்தனையைத் தெளிவுபடுத்தும்.

23. மாற்று நாட்டு மன்னர்களின் இழிவான பேச்சுநிலை, வஞ்சினம் உரைத்தல், எல்லை விரிவாக்கம், பெண்கோடல் என்னும் நிலையில் போர்கள் நடைபெற்றன. இப்போர்களின் பின்னர்ப் பகைவர் நாட்டைச் சின்னாபின்னமாக்கி அழிப்பது வீரத்தின் உயர்வாகப் போற்றப்பட்டது.

24. போர்கள் நடைபெறுவதால் நிகழும் அழிவு நிலைகள் மனத்தில் கொள்ளப் பெற்றுப் புலவர்களின் மூலமாகத் தூதால் போர் தடுக்கும் அறம் சிறந்ததாக விளங்கியிருந்தமைக்கு

ஔவையாரின் தூதுப் பாடல்கள் சிறந்த சான்றாக விளங்குகின்றன

25. அரசனின் காவல்மரம் புனிதமாகப் போற்றப்பட்டது. பகை மன்னனால் இழிவு படுத்தப்படும் சூழ்நிலையிலும், காவல் மரத்தை வெட்டுதலும் வீரத்திற்கு இழுக்காகக் கருதப்பட்டதால் அதனை முன்னிட்டுப் போர்கள் பல நடைபெற்றன. வெற்றியின் சின்னமாகக் காவல் மரம் போற்றப்பட்டது.

26. வெண்கொற்றக்குடை மக்களைக் காப்பது எனக் கூறி , அதற்கு உரிமையான அரசனின் சிறப்புப் பாடப்படுவதால் அரசனின் அறச் செயல்கள் புலப்படுகின்றன. மக்களைக் காப்பதே அரசனின் நோக்கமாக இருக்க வேண்டும் என்னும் அறத்தை வலியுறுத்துவதில் சங்கப் பாக்கள் முன் நிற்கின்றன.

27. வறுமையிலும் செம்மையான அறமுறைப்பட்ட வாழ்க்கை வாழ வேண்டியதன் அவசியத்தை சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்துக் கூறுகின்றன.

28. தனிமனித அறம், சமுதாய அறம், அரசியல் அறம் என்னும் மூன்று அறங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருந்து உலகப்பொதுமை அறங்கள் உருவாகத் துணைநின்று சமூகம் முழுமையும் வழிநடத்தும் பண்பட்ட அறங்களாக விளங்குகின்றன.

## எதிர்கால ஆய்வுகள்

இவ்வாய்வு சங்க இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கும் அறக் கருத்துகளை ஆய்வுப் பொருளாகக் கொண்டிருப்பதால் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டு இருக்கும் அறங்கள் மட்டும் விரிவான நோக்கில் ஆய்வு செய்யப்பட்டிருக்கின்றன. தமிழ் இலக்கியங்கள் முழுவதிலும் உள்ள அறங்கள் என்று விரிவுபடுத்தி ஆராயலாம்.

தமிழ் இலக்கியங்களோடு வடமொழி இலக்கியங்களில் உள்ள அறங்களை ஒப்பிட்டு ஆராயலாம். தனிமனித அறம், சமுதாய அறம், ஆகியன உளவியல் நோக்கில் தெளிவுபடுத்தப்படுவதற்கும், சமுதாய நோக்கில் விரிவான அளவில் அலசவும் வாய்ப்பளிக்கின்றது. அரசியல் அறம் இக்கால அரசியல் நிலையுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கும் அதன் மூலமாகக் காலம் தோறும் ஏற்பட்ட மாற்றங்களை அறிவதற்கும் வாய்ப்பளிக்கின்றது. சுருக்கமாகக் கூறின் மூன்று அறங்களுமே சமூகப் பயன்பாட்டு ஆய்வை மேற்கோள்வதற்கு உறுதுணைபுரியும் என்பது இந்த ஆய்வேட்டினை உருவாக்கிய ஆய்வாளரின் எண்ணம் ஆகும்.